ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ஸ்ரீஸ்வாமி தேசிகன்

அருளிச்செய்த

# ஸ்தோத்ரங்கள்

(தமிழில் பொருளுடன்)

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ஸ்ரீஸ்வாமி தேசிகன்
அருளிச்செய்த
# ஸ்தோத்ரங்கள்
(தமிழில் பொருளுடன்)

தொகுப்பாசிரியர்
**P.K. தேவநாதன்**

ஸ்ரீ:

# முன்னுரை

ஸ்வாமி தேசிகன் இப்பூவுலகில் வாழ்ந்த காலம் 1268 - 1369. அவருக்கு அவருடைய தாய் தந்தையர் இட்டபெயர் வேங்கடநாதன். பகவத் ராமாநுஜரால் (1017 - 1137) ஸ்தாபிக்கப்பட்ட விசிஷ்டாத்வைத மதத்தை இவர் ஊர்ஜிதமாக நிலைநாட்டினார். அவர் அதனால் தேசத்துக்கு ஒருவழிகாட்டி என்று போற்றப்பட்டு, தேசிகன் என்ற திருநாமத்தை பெரியோர்கள் சூட்டினார்கள். வேதாந்தாசாரியார், கவிதார்க்கிகஸிம்ஹம், ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர் என்ற பிருதுகள் இவருக்கு வழங்கப்பட்டன.

அவர் அருளிச்செய்த க்ரந்தங்கள் நூற்றுக்கு மேற்பட்டவை. அவை ஸம்ஸ்க்ருதம், தமிழ், ப்ராக்ருதம் மொழிகளிலும், மணிப்ர வாள நடையிலும் உள்ளன. அவைகளில் ஸ்தோத்ரரூபமாக வெளி வந்தவை எண்ணிக்கையில் 29. அவைகள் ஒவ்வொன்றும் தத்வ, ஹித, புருஷார்த்தப் பொருள்களுடன் கூடியவை. அதாவது ஸ்ரீமந் நாராயணனே பரதத்வம். அவனை அடைவதே ஜீவனுடைய வாழ்க்கையின் உயர்ந்த, முக்கிய நோக்கம். அவனை அடைவதற்கு உபாயம் (வழி) அவனிடமே சரணாகதி பண்ணுவதே. இப்பொருள்கள் அடங்கிய ஸ்ரீஸூக்திகள் பல இருந்தும், மாதிரிக்குச்சில ஸ்தோத்ரங் களே அர்த்தத்துடன் இடம் காலம் இவைகளின் நெருக்கத்தால், இவ்வெளியீட்டில் இடம்பெறுகின்றன.

ஸ்தோத்ரங்களைப் பாராயணம் பண்ணி, அர்த்தத்துடன் க்ரஹித்து, நம் வாழ்நாளை இப்பூவுலகில் கழித்து, நற்பயனை (மோக்ஷகைங்கர்ய ஸாம்ராஜ்யத்தை) பெறுவோமே. இந்த வெளியீட்டை Good Printers மூலம் அச்சிடப்பட்டுள்ளது. அவ்வச்சகத்திற்கு அடியேனுடைய க்ருதஜ்ஞதை. இத்தொகுப்பில் பிழைகள் இருப்பின் பொறுத்தருளவும்.

தூப்புல் குலமணி தொண்டர் தொண்டன்
பொய்கைபாக்கம் கோயில் கந்தாடை
தேவநாதன்

10.11.2008

250, III Block, Jayanagar,
Bangalore - 560011

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

# ஸ்ரீஸ்வாமி தேசிகன் அருளிச்செய்த ஸ்தோத்ரங்கள்

ஸ்தோத்ரம் என்றால் ஸாமாந்யமான லோக வழக்கில் இல்லாத குணங்களை இருப்பதாகக் கூறுவது என்று கருதப் படுகிறது. இது தவறு. பல ப்ரமாணங்களினால் உத்கோஷிக் கப்பட்டிருப்பதினால் ப்ரஸித்தமாயும் உண்மையான குணங் களை வர்ணிக்கப்படுகிறது தான் ஸ்தோத்ரம். இல்லாத குணங் களை வர்ணித்து ஏற்றுவது ஸ்தோத்ரமாகாது. பகவானுடைய அனுக்ரஹ விசேஷத்தினால் அவனை உள்ளபடியே அனுப வித்து, அப்படி அனுபவித்தபடியே பேசுவதுதான் ஸ்தோத்ர மாகும். எம்பெருமானை முற்றிலும் துதிக்கமுடியாது. உயர்ந்த குணங்களையுடையவனான எம்பெருமானை தங்கள் தங்கள் சக்திக்கு அநுகுணமாக ஸ்தோத்ரம் செய்கிறார்கள். நமது வாக் குக்கு எட்டாதவனாய் இருந்தபோதிலும் மஹர்ஷிகள், கௌஸல்யை, தாரை, மண்டோதரி, கோபிகைகள் முதலிய வர்களின் ஸ்தோத்ரங்கள் மூலமாய் எம்பெருமானுடைய கல்யாண குணங்கள் லோகத்திற்கு வெளிப்பட்டிருக்கின்றன. ஸ்வாமி தேசிகனுடைய திருவுள்ளத்தைப் பார்த்தால் ஸ்தோத் ரம் செய்வதென்றால், அது எம்பெருமானைப் பற்றியதாகவே இருக்கவேண்டும் என்பது.

ஸ்ரீஆளவந்தார் பிராட்டி விஷயமாய் சதுஃஶ்லோகீ என்னும் ஸ்தோத்ரத்தையும், எம்பெருமான் விஷயமாய் ஸ்தோத்ரம் என்னும் ஸ்தோத்ரரத்னத்தையும் அருளியுள்ளார். இந்த ஸ்தோத்ரத்தின் ஆதியிலும், இறுதியிலும் ஆசார்யனு டைய ஸ்துதி இருப்பதினால் இதை ஸ்தோத்ர ரத்நம் என்று ஸ்வாமி தேசிகன் கூறுயுள்ளார். இது திவ்யப்ரபந்த அநுஸந் தான பரீவாஹமாயும், த்வயமந்த்ரத்தின் விவரணமாயும் இருப் பதினால் இதை ரஹஸ்யம் எனத் திருவுள்ளம்பற்றி

இதன் வ்யாக்யானமாக ஸ்ரீரஹஸ்யரக்ஷை என்ற க்ரந்தத்தை அருளியுள்ளார்.

பல ஸ்தோத்ரங்கள் மூலமாய், பல திவ்யதேசத்தெம் பெருமான்கள் விஷயமாகவும், நமது ஸம்ப்ரதாயத்தில் விசேஷித்துப் போற்றப்படுகிற ஶரணாகதி விஷயமாயும், பிராட்டிமார்கள் விஷயமாயும், எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களில் ப்ரதானமான தயையின் விஷயமாயும், பூர்வாச்சார்யர்கள் விஷயமாயும் எம்பெருமானுக்குத் தொண்டு செய்துவரும் வைநதேயன், திருவாழியாழ்வான் இவர்கள் விஷயமாயும், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அவஶ்யம் இருக்கவேண்டிய வைராக்ய விஷயமாயும் ஸ்தோத்ரங்களை செய்தருளிய பெருமை ஸ்வாமி தேசிகனுக்கே உரித்தாகும்.

ஸ்வாமி நம்மாழ்வார் ப்ரபந்தஸந்தானஜனகூடஸ்தர். இவர் எம்பெருமான் ஆச்சார்யரூபேண திருவவதாரம் செய்தருளப்போவதை கணிசித்து, தமது முதல் ப்ரபந்தமான திருவிருத்தத்தில் (26ம் பாசுரம்) "தேனிளம்சோலை அப்பாலது எப்பாலைக்கும் சேமித்ததே" என்று கொண்டாடப்பட்ட திருத்தண்கா என்னும் திவ்யதேசத்தில் அவதரித்து ஸர்வலோக உஜ்ஜீவன கார்யங்களை நடத்தி உபதேசங்களை ஸ்தோத்ர ரூபமாய் அருளுவார் எனத் தெரிவித்தார். பகவதநுபவத்தை ஶரணாகதி மூலம் பெறமுடியும் என்று ஆழ்வார் அருளியுள்ளார். எக்காலத்திலும் க்ஷேமம் பயக்கவல்லதே. பிற்காலத்தில் விசேஷம் இருக்க இடமில்லை என்று ஸாதித்துள்ளார். He assures relief is at hand. Soon Desika will arrive and lead others to salvation - என்ற அபிப்ராயத்தை வெளியிட்டுள்ளார். இனி ஸ்வாமி தேசிகனின் ஸ்தோத்ரங்கள்.



# 1. ஹயக்ரீவ ஸ்தோத்ரம்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிக கேஸரீ ।
வேதாந்தாசார்ய வர்யோமே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

ஸ்வாமி தேசிகன் திருவஹீந்திரபுரத்தில் ஔஷதகிரியில் (மலைமேல்) கருடமந்த்ரத்தை உபாஸித்து (த்யாநம் செய்து) அதனால் ப்ரஸந்நனான வேதாத்மாவின் ப்ரஸாதமாக ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரோபதேசம் பெற்றார். அம்மந்த்ரத்தையும் அந்த புண்ய க்ஷேத்ரத்திலேயே ஆவ்ருத்தி செய்து (திருப்பித் திருப்பிச் சொல்லி) பரிமுகனுடைய (குதிரைமுகம்) அருளையும் பெற்றார். அவ்வருள் நம்போலிருப்பவர்களுக்கும் கிடைக்குமாறு, நம் ஆசார்யன், தமக்கே உரிய ஔதார்யத்தாலே நமக்கும் உதவியிருக்கிறார். ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரஸித்தியால் எந்தப் பயன் பெறலாமோ, அதே பயன் இந்த ஸ்தோத்ர அநுஸந்தானத்தாலே பெறலாம் என்பது ஸ்வாமி திருவுள்ளம்.

ஹயக்ரீவ அவதாரம் எடுத்து பிரமன் முதலியவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி, மதுகைடபர்களைக் கொன்று, எம்பெருமான் மீண்டும் வேதத்தை பிரமனுக்கு உபதேசித்தார். See also பெரியதிருமொழி 7-8-2 திருவழுந்தூர் பாசுரம். "பன்னுகலை நால்வேதப் பொருள்களையெல்லாம் பரிமுகமாயருளிய வெம்பரமன் காண்மின்" 5-3-2ம் பாசுரம். (திருவெள்ளறை) "வசையில் நான் மறை கெடுத்தவம் மலரயற்கருளி முன் பரிமுகமாய்" என்றும் திருமங்கையாழ்வார் அருளியுள்ளார். ஸ்ரீஹயக்ரீவனிடம் ஜநித்த ப்ரீதியின் பரிவாஹரூபமாக இந்த ஸ்தோத்ரத்தை ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்தார்.

முதல் ச்லோகம்

1. ஜ்ஞாநாநந்தமயம்தேவம் நிர்மலஸ்படிகாக்ருதிம் ।
ஆதாரம் ஸர்வ வித்யானாம் ஹயக்ரீவமுபாஸ்மஹே ॥

இந்த ஸ்தோத்ரத்தில் ஸ்ரீஹயக்ரீவமூர்த்தியை த்யானிக்கிறார். ஹயக்ரீவன் பகவானுடைய மூர்த்தியேயானபடியால் உபநிஷத்துக்களில் சொல்லப்படும் பகவத் ஸ்வரூபமே இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. ஜ்ஞானம், ஆனந்தம் இவை

களை ஸ்வரூபமாக உடையவர். ஜ்ஞான ஸ்வரூபமானதால் இந்த மூர்த்தி ஸ்வயம் ப்ரகாசமென்றும், ஆனந்தஸ்வரூபமானதால் இது போக்யதமம் என்றும் ஏற்படுகின்றன. தேவம் என்ற பதம் பகவானுக்கு இந்த ஜகத் வ்யாபாரம் முழுவதும் ஒரு லீலை என்றும், பகவான் ஜகத்திற்குக் காரணபூதன் என்பதும் ஸித்தம். பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹம் லாவண்யத்திற்கு இருப்பிடம். நிர்மலஸ்படிகாக்ருதிம் என்றதால் ஸ்வேதவர்ணம் சொல்லப்படுகிறது.

எல்லா வித்யைகளும் அவனிடமிருந்தே ஏற்படக்கூடியவை. ஆதலால் அவன் எல்லா வித்யைகளுக்கும் ஆதாரம். ஸ்ரீய:பதியின் அவதாரங்களுள் கல்வியெல்லாம் அளிப்பவன் ஹயக்ரீவன் எனப் புராணம் கூறும். பகவானுடைய ப்ரஸாதத்தைப் பெறுவதற்கு பக்திமார்க்கம் விசேஷமானது. இப்படி ஹயக்ரீவ அநுஸந்தான ரூபமாக மங்களாசரணத்தைச் செய்கிறார் ஸ்வாமி.

2. ஸ்வதஸ்ஸித்தம் ஶுத்தஸ்படிக மணிபூப்ருத்ப்ரதிபடம்
ஸுதா ஸத்ரீசீபிர் த்யதிபிரவதாத த்ரிபுவனம் ।
அனந்தைஸ்த்ரையந்தை ரநுவிஹித ஹேஷாஹலஹலம்
ஹதா சேஷாவத்யம் ஹயவதநமீட மஹிமஹ: ॥

இரண்டாம் ஸ்தோத்ரத்தில் “ஈடீமஹே” என்று ஹயக்ரீவனை ஸ்வாமி ஸ்துதிக்கிறார். ஸ்வேச்சையாலே ஸித்தமான ஆவிர்பாவத்தை உடையவரும், சுத்தஸ்படிகமணி என்ற நிர்மலமான ஸ்படிகமணிக்கு ஸத்ருசமாயிருக்கிற குதிரையின் முகம் போன்ற முகத்தையுடைய ஜ்யோதிஸ்ஸை ஸ்துதிக்கிறேன். பகவான் நித்யன். அவன் தன் இச்சையாலே அவதாரங்களைச் செய்கிறவன். ப்ரதிபடம் என்ற பதத்திற்கு சத்ருசம் என்ற பொருள். மூன்று லோகங்களின் தாபங்களையெல்லாம் நிவர்த்திப்பிக்கும்வெண்மை பொருந்திய மூர்த்தி. வேதங்களெல்லாம் ஹயக்ரீகனுடைய ஹேஷா சப்தத்தை அநுஸரிக்கின்றன. அந்த ஹேஷா சப்தத்தைக் கேட்டவர்களின் கஷ்டங்களையெல்லாம் உடனே நாசமடைகின்றன. நாமும், நம்முடையதும் - அஹங்கார மமகாரமும் - நமக்கு சேஷம் என்பதே நமக்குள்ள அவத்யம் - தோஷம். இவை எல்லாம் ஸ்வாமிக்கு சேஷம் என்பதே அனவத்யம்; நற்குணம். மஹ: - பரஞ்சோதியான நாராயணனே இப்படி ஹயக்ரீவனாக ஆவிர்பவித்தி

ருக்கிறான். இப்படிப்பட்ட பரமோபகாரனை ஸ்தோத்ரம் செய் வதே அவனுடைய தாஸர்களான நமக்கு ப்ராப்தம் - உசிதம். இந்த ச்லோகத்தால் தாம் செய்த ப்ரதிக்ஞை சரிவர நிறைவேறும் பொருட்டு ஸகல விக்நங்களையும் (இடையூறு) அழிக்கும் சக்தி யுள்ள அந்த ஹயக்ரீவனுடைய ஹேஷா சப்தத்தின் ப்ரஸாதத்தை ப்ரார்த்திக்கிறார். ஸர்வ விக்நோபசாந்தியை பெற "சுக்லாம் பரதரம் விஷ்ணும்" என்கிற ச்லோகங்கள் ஸ்ரீஹயக்ரீவனையே விஷயமாக உடையது.

3. ஸமாஹாரஸ் ஸாம்நாம் ப்ரதிபத ம்ருசாம் தாமயஜுஷாம்
லய: ப்ரத்யூஹாநாம் லஹரிவிததிர் போத ஜலதே: ।
கதா தர்ப க்ஷுப்யத் கதககுல கோலா ஹலபவம்
ஹரத்வந்தர்த்வாந்தம் ஹயவதந ஹேஷா ஹலஹல: ॥

ஹேஷா என்பது குதிரையின் சப்தம். மூன்று வேதங்களு டைய அர்த்தம் முழுவதும் இந்த ஹயக்ரீவ ஹேஷா சப்தத்தில் அடங்கியுள்ளது என்பது பொருள். நல்ல ஜ்ஞானத்தை வரவொட் டாமல் தடுத்துக்கொண்டு இருக்கும் ப்ரதிபந்தங்களை எல்லாம் (இடையூறுகள்) நிவர்த்தித்து (போக்கி) நல்ல ஜ்ஞானத்தையும் வேண்டுமளவு புகட்டுகிறது. அநிஷ்டங்கள்விலகினால் இஷ்டங் கள் தாமாக வரமாட்டா; அவையும் பகவத் ப்ரஸாதமாக வரவேண்டும். இந்த ஹேஷா சப்தம் ப்ரதிவாதிகளுக்கு பீதியை உண்டாக்கி, ஆச்ரிதர்களுக்கு அநுகூலமாக இருக்கின்றது. என்ன ஆச்சர்யம்! எப்படி ஸ்ரீகண்ணனுடைய சங்கத்வநி "ஸகோஷா தார்த்தராஷ்டாணாம் ஹ்ருத்யாநி வ்யதரயத்" பகவத்கீதை I - 19, துர்யோதனாதிகளுடைய ஹ்ருதயங்களைப் பிளந்ததுடன், அர்ஜுனன் முதலியவர்களுக்கு தைர்யத்தைக் கொடுக்குமளவு ஸந்தோஷத்தை உண்டுபண்ணிற்றோ, அம்மாதிரியே இது பகவத் விஷயங்களுக்கு உண்டான ஆச்சர்யங்களுள் ஒன்று.

இப்படி விக்நோப சமநத்தை ப்ரார்த்தித்த பிறகு, அவனை ஸ்துதிக்க ப்ரவர்த்தராய், அவனுடைய ஸாந்நித்யத்தை ப்ரார்த் திக்கிறார். தம் முன்னிலையில் ஸேவை ஸாதிக்க வேண்டுகிறார் - ஸாந்நித்யம் ஸாமாந்யமாக ப்ராப்தமாக இருக்கையிலும் அதன் ஸம்யக்ஸ்புரணம் - நன்றாக தோன்றுதல் - கிடைக்காவிட்டால் உள்ளபடி ஸ்துதிப்பது ஸாத்யமாகமாட்டாதானதால் அப்படிப் பட்ட ஸம்யக்ஸ்புரணமே - இவ்விடத்தில் வேண்டப்படுகிறது.

4. ப்ராசீஸந்த்யா காசிதந்தர் நிசாயா:
ப்ரஜ்ஞா த்ருஷ்டே ரஞ்ஜனச்ரீரபூர்வா ।
வக்த்ரீ வேதாந் பாதுமே வாஜிவக்த்ரா
வாகீசாத்யா வாஸுதேவஸ்யமூர்த்தி: ॥

திருமேனி வர்ணனை. ப்ராத:கால ஸந்த்யையின் ஆவிர் பாவமானது இரவின் இருள் விலகுவதற்கு காரணமாவதுபோல, ஹயக்ரீவ மூர்த்தியின் தோன்றுதலும் நம்முடைய ஹ்ருதயத்தி லுள்ள அக்ஞானமாகிற அந்தகாரம் (இருட்டு) விலகுவதற்குக் காரணமாகிறது. ப்ராத:ஸந்த்யை வெளி இருளை மாத்ரம் விலக் கும். இந்த ப்ராத:ஸந்யையோ, ஹ்ருதயத்தின் உள்ளிருக்கும் அஜ்ஞானமாகிற இருளைப் போக்கும் திறமையையுடையது என் பது வெளிச்சம். இந்த ஹயக்ரீவமூர்த்தி அஜ்ஞானத்தை மாத்ரம் விலக்கக்கூடியதல்ல. ஜ்ஞானத்தை விருத்தி செய்யக்கூடிய சிறந்த மையாகும். ஜ்ஞானக்கண்ணுக்கு இந்த மூர்த்தியின் ஸாந்நித்யமே வர்த்தகம். வேதாந்தங்களால் அநுஸரிக்கப்படுகிற ஹேஷா சப்தத்தில் ஸகல வேதார்த்தங்களுக்கும் அடங்கியிருக்கிறபடியால் இவரை வேதங்களை உச்சரிப்பவர் என்று "வேதாந் வக்த்ரீ" இந்த ஹயக்ரீவன் ஸாக்ஷாத் வாஸுதேவனுடைய அவதார விசேஷமே. இப்படி ஸாந்நித்ய விசேஷத்தை ப்ரார்த்திக்கவே ஸ்ரீஹயக்ரீவன் அவ்விதம் ப்ரகாஸிக்க, அவருடைய தயா விசேஷத்தைக் கணிசித்து சரண வரணம் செய்கிறார் அடுத்த ச்லோகத்தில்.

5. விசுத்த விஜ்ஞான கநஸ்வரூபம்
விஜ்ஞாந விச்ராணன பத்ததீக்ஷம் ।
தயாநிதிம் தேஹப்ருதாம் சரண்யம்
தேவம் ஹயக்ரீவ மஹம் ப்ரபத்யே ॥

நிர்மலமாயும், அகண்ட ஜ்ஞாநாகாரமாயுமிருக்கும் ஸ்வ ரூபத்தையுடையவும், தன்னை ஆஶ்ரயித்தவருக்கு உத்க்ருஷ்ட ஜ்ஞாநத்தைக் கொடுக்க த்ருடமான ஸங்கல்பத்தை உடையவும், தயைக்கு இருப்பிடமாயும், எல்லா ப்ராணிகளுக்கும் ரக்ஷகனாயி ருக்கும் உஜ்வலமான ப்ரகாசத்துடன் கூடிய ஹயக்ரீவமூர்த்தியை சரணம் அடைகிறேன் - நமஸ்கரிக்கிறேன்.

உப்புக்கட்டி எப்படி உள்ளிலும், புறத்திலும் ஒரே உப்பாக உள்ளதோ, அம்மாதிரி ஆத்ம வஸ்து முழுவதுமே ஜ்ஞாநாநந்தம

யம் ஸ்வரூபம் என்றது ஸ்வ அஸாதாரண தர்மத்தால் நிரூபித மான தர்ம ஜ்ஞாநம் முதலியவை பகவானுடைய அஸாதாரண தர்மங்களாகின்றன. அவைகளுக்கு ஆஶ்ரயமாயிருக்கும் தர்மியா கிற அம்சமே பகவத் ஸ்வரூபம். ஜீவர்களும், அசேதனங்களென்று சொல்லப்படும். ப்ரக்ருதியும் தாம் இருக்கும் காலமெல்லாம் பரப் ரஹ்மத்தின் சரீரம் பரப்ரஹ்ம ஸ்வரூபம், சேதந, அசேதந விசிஷ் டமான ப்ரஹ்மத்தைக் குறிக்கின்றது (விசிஷ்டாத்வைத தத்வம்) விசேஷணங்களுடன் கூடியிருக்கும் விசிஷ்டமே அதன் ஸ்வரூப மாகும். ஆஶ்ரிதர்களை ரக்ஷிக்கிறதே அதன் மிகப்ரதானமான வ்யா பாரம் (தீக்ஷா) அந்த வ்ரதத்தை சரிவர நிறைவேற்றும் பக்ஷத்தில் அதன் ப்ரயோஜனமும் அவனுக்கே. அவன் ஒருகாலும் அவர்களை ஸம்ரக்ஷிக்காமல் கைவிடமாட்டான். அவ்விதம் அவன் ஸம்ரக்ஷிப் பது தயாகார்யமே. இப்படி தயாநிதியாய் இருக்கும். பகவானை விட்டால் வேறுயார் சரண்யராவார்? தேஹப்ருதம் - தேவ மநுஷ் யர்களுக்கும் மாத்ரமின்றிக்கே ஸகல ப்ராணிகளுக்கும் அவனே சரண்யன்.

ஸ்ரீஹயக்ரீவனைச் சரணமடைந்தவுடனே அவனுடைய ஆச்சர்யகரமான திவ்யஸ்வபாவம் நினைவிக்கு வந்தது. அளவற்ற ஜ்ஞான சக்திகளையுடைய புருஷோத்தமனை அத்யல்பமான ஜ்ஞான சக்திகளையுடைய நான் ஸ்துதி செய்ய யத்தனிப்பது ஸாஹஸமன்றோ! என்று அஞ்சி அவனுடைய கருணா கடாக்ஷத் தைப் பிரார்த்திக்கின்றார். அவன் ப்ரஸந்நனால் எதுதான் கிடைக்க மாட்டாது?

முதல் ஐந்து ச்லோகங்கள் மங்கள ச்லோகங்கள். ஆறாம் ச்லோகத்தில் அவை அடக்கம்.

6. அபௌருஷேயை ரபிவாக் ப்ரபஞ்சை:
அத்யாபி தே பூதிமத்ருஷ்டபாராம் ।
ஸ்துவந்நஹம் முக்த இதி த்வயைவ
காருண்யதோ நாத கடாக்ஷணீய: ॥

ஹே நாதனே! வேதங்களாலும் இன்னும் காணப்படாம லிருக்கும் எல்லையையுடைய உன்னுடைய ஐச்வர்யத்தை ஸ்துதி செய்யப் புகும் நான் விவேகமற்றவன். ஆதலால் உன் க்ருபையால் மாத்ரம் கடாக்ஷிக்கத் தகுந்தவன்.

நாத - இந்த சப்தம் இவ்விடத்திற்கு மிகவும் உசிதம். இவர் ப்ரார்த்திக்கப்போவது அவனுடைய தயையை. எவன் தயை செய்ய சக்தனோ அவனைத்தான் நாதன் என்று அழைப்பார்கள். உன் னைவிட்டால் எனக்கு நாதனில்லை. என்னைவிட்டால் உனக்கு தயனீயன் இல்லை. நாத என்ற பதத்திற்கு ப்ரார்த்திக்கப்படுகிற வன் என்பது பொருள். ஸம்ப்ரதாயம் நடுவில் முறியாமல், அவிச் சிந்நமாகத் தொடர்ந்துவந்தால் அதை நித்யம் என்பர். வேதத்தை நித்யமென்றும், அபௌருஷேயம் (ஒருவராலும் செய்யப்பட்டதன்று) என்றும் நமது பெரியோர்கள் சொல்கிறார்கள். மற்றய புருஷரால் செய்யப்பட்ட க்ரந்தங்களில் தோஷங்கள் ஸம்பவிக்கக்கூடும். அவ்விதம் தோஷமொன்றும் வேதத்தில் இல்லை. அவ்வித தோஷ மற்ற வேதத்தாலேயே பகவானுடைய ஐச்வர்யம் வர்ணிக்கக்கூடா விட்டால், ஸகல தோஷங்களுக்கும் இடமாக இருக்கும் மனுஷ்ய வாக்கு எப்படி அதை வர்ணிக்கப்போகின்றது. ச்ருதியே அவனு டைய ஐச்வர்யத்தின் எல்லையைக் கண்டதில்லை. நிவர்தந்தே என்று நிகழ்காலத்தைச் சொல்வதால் இன்றைக்கும் கண்டதில் லை பூதிம் - ஐச்வர்யம். இது அவனுடைய குணபூர்த்தி முதலிய ஸகலவித ஐச்வர்யங்களையும் குறிக்கின்றது.

தாம் செய்யப்புகும் ப்ரயத்னத்தை அறியாதவன் - முக்த இதி - செய்வதாக பாவித்து தம்மீது க்ருபை செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்கிறார். இது அவன் செய்யப்போகும் அநுக்ரஹத் திற்கு அவனுடைய கருணையே நிமித்தம்; மற்றைய வேறு நிமித் தம் ஒன்றுமில்லை. நாம் சேதனர்களானபடியால் சேதநர்களுக்கு உறுப்பான முயற்சியை நாம் செய்யவேண்டும். ஆனால் அது எம் பெருமானின் அநுக்ரஹத்திற்கு மிகவும் அல்பமானது, இருந்தும் இந்த அல்ப கார்யத்தை ஒரு வ்யாஜமாகத் திருவுள்ளம்பற்றி, தனது க்ருபாகார்யமாகவே அவன் நமக்கு மிகப்பெரிய அநுக்ரஹத்தைச் செய்கிறான். பெரியோர்களும், அவனுடைய ப்ரகாசத்தின் ஸ்வல்ப அம்சத்தைப் பெற்று அதனாலேயே விளங்குகிறார்கள். எது எது இந்த ப்ரபஞ்சத்தில் ஒருவித ஐச்வர்யத்தால் விளங்குகின்றதோ, அதெல்லாம் பகவானுடைய தேஜஸ்ஸில் ஒரு லவத்தைப் பெற்றே அவ்விதம் விளங்குகின்றது. (கீதை X - 41)

The whole Universe with its sentient and non -sentient dimensions is but a mere speck of the unbounded splendour of the Supreme Lord. Tejas is the capacity to overcome opposition.

7. தாக்ஷிண்ய ரம்யா கிரிசஸ்ய மூர்த்தி:
தேவீ ஸரோஜாஸந தர்மபத்நீ ।
வ்யாஸாதயோऽபி வ்யபதேஶ்ய வாச:
ஸ்புரந்தி ஸர்வே தவசக்திலேசை: ॥

ஸ்ரீஹயக்ரீவனுடைய அனுக்ரஹத்தினால் ஸரஸ்வதீ முதலியவர்கள் பெருமைபெற்றனர்.

தாக்ஷிண்யம் - மற்றவர்களுடைய இஷ்டப்படி நடக்கும் ஸ்வபாவத்தைக் கூறுகிறது. ருத்ரன் தன்னை ஆஶ்ரயித்தவர்கள் அபேக்ஷிக்கும் (வேண்டும்) ஜ்ஞாநத்தைக்கொடுத்து அவர்களுடைய இஷ்டத்தை நிறைவேற்றுகிறபடியால் அவரிடம் தாக்ஷிண்யம் உண்டு.

ஸரஸ்வதி தேவி வாக்குக்கு அதிஷ்டானதேவதை அவளை உபாஸிக்கும் அவர்களுக்கெல்லாம் வித்யையைக் கொடுக்கிறாள். இவர்களுக்கு இருக்கும் இப்பெருமையும் ஸ்ரீஹயக்ரீவனுடைய ப்ரஸாதமாக ஏற்பட்டது. ஸரஸ்வதியின் பெருமை முழுவதும் அவள் சதுர்முக ப்ரஹ்மாவுக்கு பத்நீயாய் இருக்கிறபடியால் ஏற்பட்டது. (See வாக்மீகிராமாயணம் - பாலகாண்டம், II - 15 - 31) ஸ்த்ரீகளுக்கு பர்த்தாவின் பெருமையே தமது பெருமை. அவருடைய தர்மத்தை (தர்மபத்நீ ஆனதால்) அனுஷ்டிப்பதே தமது வ்ருத்தி (செயல்முறை).

வ்யாஸர், பராசரர் முதலியவர்களும் பகவத் ப்ரஸாதம் பெற்றவர்களே. ஸ்புரந்தி - க்ஷணகாலம் நிற்கும் ப்ரகாசமே ஸ்புரணம். பகவானுடைய ஜ்ஞாநப்ரகாசத்தைப் பார்க்கும்போது ருத்ரன், ஸரஸ்வதி, வ்யாஸர், பராசரர் முதலானவர்களுடைய ப்ரகாசம் எல்லாம் மினிமினி பூச்சியின் ஒளியைப்போன்றதே. சிவன் முதலான மஹான்களுக்குக்கூட எட்டாமல் இருக்கும் பகவானுடைய மஹிமாதிசயங்களையும், தமது சிறுமையையும் பார்த்து, அவனுடைய குணங்களை நாம் வர்ணிக்கப் புகுவது பரிஹாஸத்திற்கே காரணமாகும் என்று நினைத்து, அறியாப் பிள்ளை என்று தேவரீரே கடாக்ஷித்து அருளவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார். வ்யாஸர் முதலானோர் விளங்குவதும் பகவத் கடாக்ஷத்தினாலன்றோ! அந்த கடாக்ஷம் நமக்கும் ஸம்பவிக்குமேயாகில் நாம் ஏன் பயப்படவேண்டும்?

8. மந்தோऽபவிஷ்யந் நியதம் விரிஞ்சோ
வாசாம் நிதே ! வஞ்சித பாகதேய: ।
தைத்யாபநீதாந் தயயைவ பூயோऽபி
அத்யாபயிஷ்யோ நிகமாந்நசேத் த்வம் ॥

ஹே! எல்லா வாக்குக்கும் அதிஷ்டானமாயிருக்கிறவனே ! நீ அஸுரர்களால் அபஹரிக்கப்பட்டு போன வேதங்களை மறு படியும் தயையினால் உபதேசம் செய்யாமலிருக்கும் பக்ஷத்தில், ப்ரம்மா வேதமாகிற பாக்யத்தை இழந்தவராகவும் வேதாக்ஷர சூன்யராகவும் ஆகிவிடுவார். இது நிச்சயம்.

அஸுரர்களான மதுகைடபர்கள் ப்ரம்மாவை ஏமாற்றி, அவருக்கு பகவானால் கொடுக்கப்பட்ட வேதமாகிற தனத்தை அபஹரித்துப்போனார்கள். ப்ரம்மாவின் முறையீட்டின்பேரில் பகவான் மத்ஸ்வரூபமாக அவதரித்து, அவ்வஸுரர்களையும் கொன்று வேதத்தை மீட்டுவந்து, அதை மறுபடியும் ப்ரம்மாவிடம் கொடுத்தார். பகவத் கடாக்ஷம் இருக்கும் இடத்தில் பாக்யம் உண்டு. பகவத் கடாக்ஷம் இராவிட்டால் அவ்விடத்தில் பாக்யமில்லை. ஸ்ரீஆளவந்தார் "ப்ராக்த தலாப தோநஷ்டம்", லக்ஷ்மீகடாக்ஷம் இராதபொழுது ஜகத் முழுவதும் நாசம் அடைந்தே இருந்தது என்றும், "ஸம்ப்ரத்யநந்தோதயம்" - இப்பொழுது லக்ஷ்மீ கடாக்ஷம் ஸம்பவித்தபிறகு, அது பஹுப்ரகாரமாகச் செழிக்கின் றது என்றும் அருளியுள்ளார் (சதுஃஸ்லோகி)

ஜகத் ப்ரஸித்தமான, வாக்மஹிமையையுடைய வ்யாஸ பரா சராதிகளும் உம்முடைய (ஸ்ரீஹயக்ரீவனுடைய) சக்திலேசத்தா லன்றோ ப்ரகாசிக்கிறார்கள். ப்ரும்மாவும் உம்முடைய சக்திலேசம் இன்றி ப்ரகாசிக்க அசக்தனே என்று விளக்குகிறார். இப்பொழு தும் ஜ்ஞாந ச்ரேஷ்டர்கள் ஜ்ஞாநப் பெருமையை அடைவதெல் லாம் உம்முடைய கடாக்ஷத்தாலேயே என்பது மாத்திரமன்றிக்கே, ஒவ்வொருவராலும் அனுபவிக்கப்படும் ஐச்வர்யத்தின் ஸ்தைர்ய மும் உம்முடைய கடாக்ஷாதீனமே என்று வற்புறுத்துகிறார்.

9. விதர்க்கடோளாம் வ்யபதூயஸத்வே
ப்ருஹஸ்பதிம் வர்தயஸே யதஸ்த்வம் ।
தேனைவ தேவ! த்ரிதசேஸ்வராணாம்
அஸ்ப்ருஷ்ட டோலாயிதமாதி ராஜ்யம் ॥

ஹே ! தேவனே ! நீர் தேவதைகளுக்கெல்லாம் குருவாக இருக்கும் ப்ருஹஸ்பதியாய், அஜ்ஞாநம், ஸம்சயம், விபர்யயம் இவைகளால் உண்டாகும் மயக்கங்களை விலக்கி, உண்மையான ஸந்மார்கத்தில் நிலைநிறுத்துகிறீர். அந்தக் காரணத்தினாலேயே அந்தஅந்த அண்டத்தில் உள்ள இந்த்ரன் முதலான அதிகார புருஷர்களுடைய ஐச்வர்யங்களெல்லாம் எவ்வித ஆட்டமுமின்றி ஸ்திரமாக நிற்கின்றது. அதிகாரிகளாக இருக்கும் ஈச்வரர்களுடைய ஐச்வர்யம் நிலைபெற்று நிற்பதெல்லாம் அவர்கள் நல்வழியில் நடப்பதைச் சார்ந்தது. ஆசார்யர்களுடைய ஜ்ஞாநசக்திகளும், பகவத் கடாக்ஷமுமே ஐச்வர்யத்தின் ஸ்தைர்யத்திற்கு மூலகாரணம்.

விதர்க்கடோளாம் - மனஸ் நிலைபெறாமல் விதர்க்கங்களைச் செய்துகொண்டிருக்கும்போது எவ்விதத் தெளிவும் ஏற்படாது. அப்போது மனஸ் ஊஞ்சலாடுகின்றது. அஜ்ஞானமாவது விஷயம் எப்படிப்பட்டது என்று அறியாமலிருக்கை. ஸம்சயமாவது விஷயம் எதுவென்று நிர்ணயமற்றிருக்கை. விபர்யமாவது ஒரு விஷயத்தை வேறொன்று என்று ப்ரமித்திருக்கை. அந்யதாஜ்ஞாநம் - வெண்மையாக இருக்கும் சங்கை பீதமென்று ப்ரமிப்பது. விபரீதஜ்ஞாநம் - முத்துச்சிப்பியை வெள்ளியென்று ப்ரமிப்பது.

இந்த்ராதி தேவதைகளுக்கு அவர்களுடைய ஆசார்யர்கள் வழியாக உபகாரம் செய்வது மாத்ரமின்றி ஸாக்ஷாத்தாகவும் நீர் உபகரிக்கிறீர். ஆகையால் அவர்களுடைய ஐச்வர்யம்போல், அவர்களுடைய த்ருப்தியும், உமது அதீனமே என்கிறார். இவ்வாக்யங்களுக்கு கீதை IX - 24 ப்ரமாணம். எல்லாக் கர்மாக்களாலும் ஆராதிக்கப்படுபவனும், ப்ரீதியை அடைபவனும், பலனை அளிப்பவனும் ஸ்ரீமந்நாராயணனே.

10. அக்நெள ஸமித்தார்ச்சிஷி ஸப்ததந்தோ:
ஆதஸ்திவான் மந்த்ரமயம் சரீரம் ।
அகண்டஸாரைர் ஹவிஷாம் ப்ரதானை:
ஆப்யாயனம் வ்யோமஸதாம் விதத்ஸே ॥

ஹயக்ரீவ ரூபியாகிற பகவானே யாகத்தில் ஸந்நிஹிதனாக இருக்கிறானென்றும், அந்த யாகங்களில் உச்சரிக்கப்படும் மந்த்ரங்களெல்லாம் அவனுடைய மூச்சுக்காற்றாகவே வெளிவருகின்றன என்றும் கூறப்படுகிறது.

நீர் ஸகலருக்கும் ஜ்ஞாநத்தைக் கொடுப்பவராகவும், தேவதைகள் முதலிய எல்லோருக்கும் ஸாக்ஷாத்தாகவும், பரம்பரையாகவும், பரமோபகாரராகவும் இருப்பது உமக்கே அன்றோதகும் ! ஏனென்றால் நீர் ஸகல ஜகத்தின் ஸ்ருஷ்டிக்கும் ஹேதுவாக உள்ள வேதத்தின் மூலமாகிற ப்ரணவத்தை ஸ்வரூபமாகவுடையவரன்றோ! உம்மிடமிருந்து ஸ்ருஷ்டியைப் பெற்றிருக்கும் இந்த ப்ரபஞ்சத்திற்கு உம்மைத் தவிர்த்து வேறுயார் உபகாரராகக்கூடும் ! வேதங்களே ஜகத்ஸ்ருஷ்டிக்கு ஆதிஹேது என்று சொல்கிறது சாஸ்த்ரம். வேதத்திற்கு ப்ரணவமே மூலம். அந்த ப்ரணவம் பகவத்ஸ்வரூபம். வாக்குக்கு ஈச்வரனாக இருக்கும் ஸ்ரீஹயக்ரீவமூர்த்திக்கே இது அத்யந்த அநுரூபம்.

**11.** யந்மூல மீத்ருக் ப்ரதிபாதி தத்வம்
யாமூல மாம்நாய மஹாத்ருமாணாம் ।
தத்வேந ஜாநந்தி விசுத்த ஸத்வா:
த்வாமக்ஷரமாக்ஷர மாத்ருகாம்தே ॥

வேத மரங்களின் வேறான அக்ஷரமாத்ருகை (அ, ஆ, இ, ஈ முதலானது) ஹயக்ரீவனுடையது என்பது ஸாத்வீகர்களுக்குத் தெரியும்.

ஜகத் முழுவதும் பகவானுக்கு சேஷமானது என்றும், பரப்ரஹ்மத்தை ஜகத்தின் ஸ்ருஷ்டிகர்த்தா என்றும் ச்ருதி பேசுகிறது. ஸ்ரீஹயக்ரீவன் வாக்குக்கு ஈச்வரன். அவன் ப்ரணவ ஸ்வரூபனாக இருந்துகொண்டு வேதங்கள் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாகிறான். அவனுக்கு சரீரங்களான எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவான பகவானால் நிலைபெறுகின்றன என்று அருளிச்செய்கிறார் ஸ்வாமி தேசிகன்.

11 மற்றும் 12 ச்லோகங்களால் ஜகத்காரணத்வம் சொல்லப்பட்டுள்ளது.

**12.** அவ்யாக்ருதாத் வ்யாக்ருத வானஸி த்வம்
நாமாநி ரூபாணி சயாநி பூர்வம் ।
சம்ஸந்திதேஷாம் சரமாம் ப்ரதிஷ்டாம்
வாகீஶ்வர ! த்வாம் த்வதுபக்ஞவாச: ॥

பகவான் ஜகத்தை ஸ்ருஷ்டிக்கும் காலத்தில் தனது ஸங்கல்பத்தால் தேஜஸ், அப், அந்நம் முதலியவைகளை ஸ்ருஷ்டித்து, அதற்குப்பின் அவைகளுள் தான் அநுப்ரவேசித்து, அவைகளுக்குப் பெயரையும், ரூபத்தையும் கொடுத்தான் என்று ச்ருதி சொல்லுகிறது. லோகத்தில் தென்படும் பதார்த்தங்களையும், அவைகளை உபயோகிக்கும் சேதன வஸ்துக்களுக்கும் சரீரியாக இருக்கும் பரமாத்மாவினிடத்திலேயே நிலைபெற்று நிற்கின்றன என்று ச்ருதி சொல்லுகிறது.

த்வதுபக்ஞவாச: - உம்மால் முதன்முதலில் அறியப்பட்ட வாக்கையுடையவர்கள் - உம்மால் அநுக்ரஹிக்கப்பட்ட வேதங்கள். இனி ஹயக்ரீவ மூர்த்தியே ஸகல புருஷார்த்தங்களையும் கொடுப்பவன் என்பதை நிரூபிக்கிறார்.

13. முக்தேந்து நிஷ்யந்த விலோப நீயாம்
மூர்த்திம் தவாநந்த ஸுதா ப்ரஸூதிம் ।
விபஸ்சித ச் சேதஸி பாவயந்தே
வேலாமுதாராமிவ துக்தஸிந்தோ: ॥

விபஸ்சித: - ஞானிகளெல்லோரும், சேதஸி - சித்தத்தில் - மனதில், பாவயந்தே - த்யாநம் செய்கிறார்கள்.

ஸ்வார்த்தமாகத் தன்னுடைய வேறொரு ப்ரயோஜனத்தை உத்தேசித்து த்யாநம் செய்பவர்கள் போலன்றிக்கே, அநந்ய ப்ரயோஜனமாக எண்ணத்துடன் சிந்திக்காமல் த்யானம் செய்வதே ஸ்வரூபம் தெரிந்தவர்களின் கார்யம். இது உத்தமமான புருஷார்த்தம். இப்படி அநந்ய ப்ரயோஜனமாக த்யானிப்பவர்களுக்கு ஆநுஷங்கிகமாக மற்றைய புருஷார்த்தங்களும் தாமாகவே வருகின்றன சாஸ்திரப்படி என்கிறார் ஸ்வாமி தேசிகன். ஸ்ரீஹயக்ரீவனை த்யானிப்பவர்களுக்கு வாக் ஸம்ருத்தி அளவற்றபடி ஸம்பவிக்கின்றன.

14. மனோகதம் பச்யதி ய: ஸதா த்வாம்
மனீஷிணாம் மானஸ ராஜஹம்ஸம் ।
ஸ்வயம் புரோ பாவ விபாதபாஜ:
கிம்குர்வதே தஸ்ய கிரோ யதார்ஹம் ॥

ராஜஹம்ஸங்கள் மாநஸரஸ்ஸிஸ் நித்யவாஸம் செய்வதில் ஆவலுள்ளவைகள். இது ஜகத் ப்ரஸித்தம். அதுபோலவே ஸ்ரீஹயக்ரீவ பக்தர்கள் மனதில் எப்பொழுதும் அவ்வெம்பெருமானையே த்யானித்துக்கொண்டிருக்க ஆஸ்தையுள்ளவர்கள். அவ்வித பக்தர்களுக்கு எவ்வித ஆயாஸமின்றிக்கே சொற்பொழிவு பரிபூர்ணமாக ஸம்பவிக்கின்றது. ஒருவனுக்கு ஹயக்ரீவன் ப்ரத்யக்ஷமானால், வித்யாபிமானி தேவதைகள் அவனுக்கு இஷ்டப்பட்டதைச் செய்ய முன்வருகிறார்கள். இது ஸ்வாமி தேசிகன் தான்பெற்ற பேற்றை தெரிவிக்கிறபடி. அதாவது ஸ்ரீஹயக்ரீவன் அவருடைய திவ்ய லாலாம்ருதத்தைப் பருகுமாறு நியமித்தார். அவரும் அப்படியே செய்ய, வித்யைகள் எல்லாம் தங்கள் தங்கள் ஸ்வரூபத்துடன் இவர் முன்பு அஞ்ஜலி செய்து நிற்க அப்பொழுது அவைகளில் வேதாந்த வித்யை மட்டும் தம்மிடம் இருக்கும்படியும், மற்ற வித்யைகள் அவர் வேண்டும்பொழுது வரும்படியும் ப்ரார்த்தித்தார்.

14-15 ச்லோகங்களில் வாக்ஸித்தியின் பெருமையைக் கூறுகிறார்.

**15.** அபிக்ஷணார்த்தம் கலயந்தியே த்வாம்
ஆப்லாவயந்தம் விசதைர்மயூகை: ।
வாசாம்ப்ரவாஹை: அநிவாரிதைஸ்தே
மந்தாகிநீம் மந்தயிதும் க்ஷமந்தே ॥

எவர்கள் ஸ்ரீஹயக்ரீவனை அரை க்ஷணமாவது த்யானம் செய்கிறார்களோ, அவர்களுக்கு வரும் வாக்ஸம்ருத்திகள், கங்கையின் ப்ரவாஹத்தைக் காட்டிலும் அதிவேகத்துடன் ப்ரவஹிக்கின்றன. ஸ்ரீஹயக்ரீவன் சுத்தஸ்படிக மணிபோல அதிப்ரகாசத்துடன் கூடினவன். அந்த ப்ரகாசம் அவனிடமிருந்து எப்பொழுதும் நான்கு பக்கங்களிலும் பெருகுவதால், அவனை த்யானிப்பவர்கள் மீது வர்ஷிக்கும் நதிகள் போல பெருகுகின்றன.

**16.** ஸ்வாமிந் ! பவத்யாந ஸுதாபிஷேகாத்
வஹந்தி தந்யா: புளகாநுபந்தம் ।
அலக்ஷிதே க்வாபி நிரூடமூலம்
அங்கேஷ்விவாநந்தது் அங்குரந்தம் ॥

16, 17 ச்லோகங்களில் பகவத் த்யானத்தில் ஆனந்தாநுபவம். கண்ணுக்குத் தெரியாத ஒரு இடத்தில் விதைக்கப்படும் ஒரு விதை யானது நீரால் நனைந்து ஒரு இடத்தில் வேரூன்றி, கண்ணுக்குத் தெரியும் வெளிப்ரதேசத்தில் முளைப்பதுபோல் ஹ்ருதயத்தின் உள் ப்ரதேசத்தில் ஜனிக்கும் ஆனந்தமானது பகவத் த்யானத்தால் வ்ருத் தியடைந்து வெளிதேஹத்தில் மயிர் கூச்சாகத் தோன்றுகிறது.

சில ஸுக்ருத்கள் - தந்யா: - உம்முடைய த்யானமாகிற அம்ருதத்தின் பொழிவால் மயிர் கூச்சத்தை அடைகிறார்கள். அம்மயிர் கூச்சம் விதை ஊன்றின இடத்திலிருந்து வெளியே முளைப்பதுபோல். தந்யா: - புண்யவான்கள்.

17. ஸ்வாமிந் ! ப்ரதீசா ஹ்ருதயேந தந்யா:
த்வத் த்யாந சந்த்ரோதய வர்தமாநம் ।
அமாந்தமானந்த பயோதிமந்த:
பயோபிரக்ஷ்ணாம் பரிவாஹயந்தி ॥

எந்த ஆனந்தமானது மயிர்கூச்சாக வெளிப்படுகின்றதோ, அதுவே கண்ணீராகவும் வெளிவருகிறது என்கிறார். ஏரி நிரம்பினால் அதிகமான ஜலத்தைக் கடைப்போக்காக விடுவதுபோல், ஹ்ருத யத்தில் ஆனந்தம் நிரம்பவே, அந்த ஆனந்தத்தின் அதிகாம்சமோ இப்படி கண்ணீராக வெளிவருகின்றது என்று நினைக்கும்படி, கீழ்ச்சொன்ன பாக்யசாலிகளின் கண்களிலிருந்து கண்ணீர் ப்ரவஹிக்கின்றது.

உள்நோக்கும் ஹ்ருதயத்தாலே காது, மூக்கு, கண்கள் முதலிய வெளி இந்த்ரியங்கள் எல்லாம் வெளியில் இருக்கும் பதார்த்தங்களை மாத்ரம் பார்க்குமாகையால், இதற்கு மாறாக ஹ்ருதயத்தினால் உள்ளிருக்கும் பகவானை பார்க்கிறபடியால் அந்த ஹ்ருதயம் 'ப்ரத்யக்' என்று பேசப்படுகின்றது. வெளி இந்த்ரியங் கள் 'பராக்' எனப்படுகின்றது.

நான்குவித புருஷார்த்தங்கள் ஒன்றிலும் நோக்கமிராதவர் களாய் பகவத் த்யானத்திலேயே ஈடுபட்டு அதையே பரமப்ரயோ ஜனமாகப் பற்றும் நித்யபக்தர்கள் சிலருண்டு. அவர்கள் அந்த த்யானத்திலேயே ஆனந்தத்தின் உயர்ந்த நிலையை அநுபவிக்கிற படியால் அவர்களை தன்யர்கள் என்று "ஸ்வாமிந்" என்று புகழ் கிறார் ஸ்வாமி தேசிகன்.

இந்த ப்ரக்ருதியில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் ஜனங்களுக்கு அந்த நிஷ்டை ஸம்பவிக்குமா? ப்ரக்ருதியைக் கடந்தாலன்றோ அதை அடையலாம். அதைக் கடப்பதுதான் நம்மால் ஸாத்யமோ? பகவத் அநுக்ரஹம் பெற்றவர்கள் விஷயத்தில் அந்த ப்ரக்ருதி வீர்யமற்றதாகிவிடும். அது பகவத் அநுக்ரஹத்தின் பல விசேஷம் என்கிறார்.

18. ஸ்வைராநுபாவா ஸ்த்வதீநபாவா:
ஸ முத்த வீர்யாஸ்த்வதநுக்ரஹேண ।
விபஸ்சிதோ நாத! தரந்தி மாயாம்
வைஹாரிகீம் மோஹந பிஞ்சிகாம் தே ॥

விபஸ்சித: - வித்வான்கள், அதாவது த்யான நிஷ்டையுடையவர்கள். த்வததீந பாவா: - உம்மிடத்திலேயே த்ருடமாக வைக்கப்பட்ட அபிப்ராயத்தை உடையவர்கள்.

பகவானுடைய மாயையைக் காரணமாக ப்ரபஞ்சம் முழுவதுமே இந்த்ரஜாலத்தின் கார்யம்போல், மித்யை (பொய்) என்று அத்வைதிகள் சொல்லுகிறார்கள். நம் ஸம்ப்ரதாயத்தில் ப்ரக்ருதியே மாயா சப்தவாச்யம் என்றும், லோகத்தில் எது எது விசித்ர கார்யமோ அதெல்லாம் மாயை என்கிறோம். இது செய்யும் கார்யங்களைக் காட்டிலும் விலக்ஷணங்கள்.

ஸ்வைராநுபாவா: - பாகவத உத்தமர்கள் விஷயத்தில் எவ்வித தடையுமின்றி இருக்கும் ப்ரபாவம். பகவானுடைய அநுக்ரஹ விசேஷத்தைப் பெற்றிருப்பவர்களின் ப்ரபாவம் பகவானுடைய ப்ரபாவம்போல் தடையற்றது (நிரங்குசமே).

த்வதநுக்ரஹேண ஸம்ருத்த வீர்யாம் - பகவந் மாயை, அவனுடைய அநுக்ரஹம் ஒன்றுக்கே அடங்கும். அவனுடைய மாயையானதால், அதை ஒருவராலும் தாண்டக்கூடாது.

மம மாயா துரத்யா । மாமேவ ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே ॥ என்னை எவர்கள் சரணமாக அடைகிறார்களோ, அவர்கள் மாத்ரம் அதைக் கடக்கிறார்கள். இப்படி ப்ரக்ருதியின் மோஹ சக்தியானது அபாரமான வீர்யமுடையது. (கீதை VII - 14)

வைஹாரிகீம் மோஹந பிஞ்சிகாம் - விசித்ரமான ப்ரமத்தை உண்டுபண்ணுவதற்கு இந்த ப்ரக்ருதி கருவியாக இருக்கின்றது.

இந்த ப்ரக்ருதியால் செய்யப்படும் விசித்ர கார்யங்கள் பல. இந்த ப்ரக்ருதி ஸம்பந்தம் அனாதிகாலம் பண்ணிப்போந்த கர்ம பரம் பரையாலே உண்டாகின்றது. தேஹரூபமாயும், இந்த்ரிய ரூபமா யும் பரிணமித்து இந்த ப்ரக்ருதி அவரவர் கர்மாநுகுணமாக அவ ரவர்களை மோஹிப்பிக்கின்றது.

மாயையைக் கடக்க சேதனர்களான நாம் செய்யவேண்டி யது என்னவெனில், பகவானுடைய பாதபத்மங்களில் ப்ரணாமங் களைச் செய்வதே. அப்படிச் செய்பவர்கள் விஷயத்தில் அவன் நிச்சயம் அனுக்ரஹத்தைச் செய்கிறான். அப்படிப்பட்ட ப்ரணா மங்கள் மேன்மேல் வளர ப்ரார்த்திக்கிறார் ஸ்வாமி தேசிகன்.

18 முதல் 31ம் ச்லோகம் வரை பக்தி, வாதங்களில் திறமை, தத்வஞானிகளின் ப்ரார்த்தனையும் கூறப்படுகிறது.

**19.** ப்ராங்நிர்மிதாநாம் தபஸாம் விபாகா:
ப்ரத்யக்ர நிஃஶ்ரேயஸ ஸம்பதோ மே ।
ஸமேதி ஷீரம்ஸ்தவ பாத பத்மே
ஸங்கல்ப சிந்தாமணய: ப்ரணாமா: ॥

அந்த ப்ரணாமங்கள், யக்ஞம் முதலிய கர்மங்களைப்போல காலக்ரமேண பலத்தைக்கொடுக்குமவையல்ல. எப்பொழுது ப்ர ணாமங்களைச் செய்கிறோமோ, அப்பொழுதே நம்முடைய விருப் பங்கள் கிடைத்துவிடும். (ப்ரத்யக்ர) த்வரையும், விச்வாசமும் எவ் வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு சீக்ரத்திலேயே இவை பலிக்கின்றன.

ஸகலவித இடையூறுகளுக்கும் நீ வர்த்தகனன்றோ! அப்ப டிப்பட்ட பாதாரவிந்தங்களை எவ்வளவு காலம் சரணம் அடைய வில்லையோ, அவ்வளவு காலம் அவனுக்கு ஆர்த்தி, வாஞ்சை, மோஹம், துக்கரூபமான ஸம்ஸாரம் இவை உண்டு. சரணமடைந்த க்ஷணத்தில் அவையெல்லாம் விடுபடுகின்றன.

ஸ்ரீஹயக்ரீவனுடைய திருவடிகளில் மேன்மேலும் என்னு டைய ப்ரணாமங்கள் வளர்ந்து வரவேண்டும். எனக்கு அதே பரம புருஷார்த்தம் என்று வேண்டுகிறார். தத்வ ஸ்திதியை அறிந்தவர்க ளுக்கு வேறு வேண்டுகோள் ஒன்றுமில்லை. நம: நம: என்று எப் பொழுதும் சொல்லிக்கொண்டிருப்போம். இதுவே சான்றோர்க ளின் ப்ரார்த்தனை.

20. விலுப்தமூர்த்தந்ய லிபிக்ரமாணாம்
ஸுரேந்த்ர சூடாபதலாலிதானாம் ।
த்வதங்க்ரி ராஜீவ ரஜ: கணானாம்
பூயாந் ப்ரஸாதோ மயி நாத! பூயாத் ॥

மூர்தந்யலிபி: - இதை தலையெழுத்து என்பர்.

ப்ரம்மா, ப்ரஜைகளை ஸ்ருஷ்டிக்கும் காலத்தில் அவரவர்களுடைய கர்மங்களுக்குத் தகுந்தவாறு அவரவர்கள் சிரஸ்ஸில் "இவன் தரித்ரனாகக் கடவன்; இவன் தன்யனாகக் கடவன்" என்று இம்மாதிரி சிற்சில எழுத்துக்களை எழுதிவைப்பதாகப் பெரியோர்கள் சொல்கிறார்கள். ப்ரம்மாவின் அந்த ஸங்கல்பம் அவரவர்களின் கர்மங்களை ஒட்டிச் செய்யப்பட்டதானபடியால் அது ஒரு காலும் எவ்வித காரணத்தாலும் மாற்றுவிக்கப்படாமல் அப்படியே நிறைவேறுகின்றன. கவிகள் "சிரோலிபி" என்பது ஒன்று உண்டு என்பதை ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த ப்ரம்மலிபியை மாற்றுவதற்கு ஒருவராலும் ஸாத்யமில்லை. ஆனால் பகவானை ஆச்ரயித்தவர்கள் விஷயத்தில் பகவத் அநுக்ரஹத்தால் அது தலைகீழாக மாறிவிடும் என்று சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன. அவன் போட்ட முடிச்சை அவனால் அவிழ்க்கமுடியாதா? சிரஸ்ஸில் அநிஷ்டமான கெட்ட எழுத்து ஏதாவது இருந்தால் அதை பகவானே! நீயே நல்ல எழுத்தாக மாற்றிவிடுகிறாய். பகவானுடைய திருவடி ஸம்பந்தம் பெற்றிருக்கும் பாதுகைக்கு மஹிமை. தேவநாயக பஞ்சாசத் 45ம் ச்லோகத்திலும், பகவானின் திருவடித் தாமரையின் தூள்களின் பொடிகளால் அந்த கெட்ட எழுத்துக்கள் தாமாகவே அழிந்துவிடுகின்றன என்று அருளியுள்ளார். பகவானுடைய பாதுகைக்கு இருப்பது போல, அந்தத் திருவடி ஸம்பந்தத்தைப் பெற்றுள்ள கெட்ட எழுத்தை அந்தத்தூளி மாற்றுகின்றன.

ப்ரஸாதோபூயாத் - எனது சிரஸ்ஸில் இருக்கும் லிபிகள் மாறினாலும், மாறாவிட்டாலும், அந்தத்தூளி லேசத்தின் ஸம்பந்தம் எனது சிரஸ்ஸுக்கு நேர்ந்தால், அதனாலேயே நான் தந்யனாவேன், அதுவே எனக்குப் பரமபுருஷார்த்தம்.

அடுத்து, தாம் கோறின ப்ரகாரம், ஸ்ரீஹயக்ரீவனின் பாததூளிகளைத் தமது சிரஸின் மீது அநுக்ரஹித்ததாக அநுஸந்தானம் செய்துகொண்டு அதிகமான ஆனந்தத்தை அநுபவிக்கிறவராய், அந்த தூளிகளுக்கு ஆச்ரயமான பாதாரவிந்தங்களின்

மஹிமையை நினைத்து அவைகளின் நிரந்தர த்யானம் தனக்குக் கிடைக்கவேணுமென்று வேண்டுகிறார்.

21. பரிஸ்புரந் நூபுர சித்ரபானு -
ப்ரகாச நிர்தூத தமோநுஷங்காம் ।
பதத்வயீம்தே பரிசிந்மஹேऽந்த:
ப்ரபோத ராஜீவ விபாத ஸந்த்யாம் ॥

இணைபிரியாத திருவடிகள். இத்திருவடிகளில் அழகான சிலம்புகள். இவைகளின் ப்ரகாசம் மிகவும் விசித்ரமானது. பெருமாள் திருவடியில் இருக்கும்போது, இது ஆகாசத்தில் விளங்கும் ஸூர்யனாகவேத் தோற்றம் அளிக்கிறது. நூபுரங்களாகிற ஸூர்யன் தோன்றினால் இருளழிவது; அஜ்ஞானம் தொலைவது ஒரு புறமிருக்க, நல்லறிவு ஆகிற தாமரை மலரும் மலருகின்றது. திருவடியில் நூபுரத்தை அநுஸந்தானம் செய்வது நமது அஜ்ஞானத்தை அறவே அழித்து, அவன் திருவடியே ப்ராப்யம் - அடையவேண்டியது என்ற பெரிய விச்வாஸத்தை உண்டுபண்ணுகிறது.

ஸ்ரீஹயக்ரீவனுடைய பாதாரவிந்தங்களின் த்யானத்தால் நமது மனஸ்ஸிலுள்ள ஸகலவிதமான மோஹங்களும் விலகிவிடும். மோஹமாவது ப்ரக்ருதி ஸம்பந்தத்தால் நமக்கு ஸம்பவிக்கும் விபரீத ஜ்ஞானம் முதலியவைகளே. மோஹம் விலகிப்போன பிறகு உடனே ப்ரபோத ராஜீவ - பதஸம்பந்தம் கிடைக்கவே, சரியான ஜ்ஞானம் மலர்கின்றது.

அடுத்ததாக; நூபுர - சலங்கை ஆபரணத்தை காலில் தரித்துக்கொண்டு நடந்தால் சப்தம் வெளிவரும். அந்த சப்தத்தை வேத கோஷமாகவும், சலங்கையுள் இருக்கும் செப்புகள் வேதமாகிற தனத்தை உள்ளடக்கி வைத்துக்கொண்டிருக்கும் பெட்டி (மஞ்ஜூஷிகா) யாகவும் வர்ணித்துப் பேசுகிறார் ஸ்வாமி.

த்வத்கிங்கராலங்கரணோசிதாநாம்
த்வயைவ கல்பாந்தர பாலிதாநாம் ।
மஞ்ஜுப்ரணாதம் மணிநூபுரம் தே
மஞ்ஜீஷிகாம் வேதகிராம் ப்ரதீப: ॥ 22

ஸ்ரீஹயக்ரீவனின் வேலையாட்களாகிற நாம் அவர்

வெளியிட்ட வேதங்களை அணிகலன்களாக அணியவேண்டும். வேதம் விலைமதிப்பற்றது. அதை ஹயக்ரீவன் மணித்தண்டையில் வைத்து ரத்னம் போல் பூண்டு மகிழ்விக்கிறான்.

சிலம்பின் சிறப்பு - கல்பாந்தரபாலிதானாம் - ப்ரளய காலத்தில் வேதத்தின் ஸம்ப்ரதாயம் விச்சின்னமாகிவிடுகிறது. மறுபடியும் கல்ப ஆரம்பகாலத்தில், பகவான் ஶ்ரீஹயக்ரீவனாக ப்ரம்மாவுக்கு அந்த வேதத்தை உபதேசிக்கிறான். அந்த இடைவெளிகாலத்தில் ஶ்ரீஹயக்ரீவனாலேயே ஸம்ரக்ஷிக்கப்பட்டு வருகிறது வேதம். ஶ்ரீஹயக்ரீவனுடைய பாதாரவிந்தங்களில் தரிக்கப்பட்டுள்ள நூபுரங்களின் த்வநியை ச்ரவணம் (கேட்பது) செய்வது எல்லா வேதங்களையும் உள்ளபடி அறிவதற்கு மூல காரணமாகும். நூபுரங்களின் சப்தம் வேதத்வனியே. பகவத்பக்தர்களுக்கு நூபுரங்கள் அலங்காரமாக விளங்குவது மாத்ரம் இல்லை. அவைகளை ஸேவிப்பது வேதாத்யயனமே.

23. ஸஞ்சிந்தயாமி ப்ரதிபாதி சாஸ்தாந்
ஸந்துக்ஷயந்தம் ஸமய ப்ரதீபான்
விஜ்ஞான கல்பத்ரும பல்லவாபம்
வ்யாக்யாந முத்ரா மதுரம் கரம்தே

ப்ரதீபை - தோற்றம். அவனது திருவடிகளை நாம் பிடித்தோமானால், அவனது திருக்கைகள் நமக்குப் பலவகைகளில் ஆறுதல்களை அளிக்கும்.

வ்யாக்யாநமுத்ரா - விஷயங்களை உபதேசிக்கும்போது கட்டைவிரல் நுனியும், ஆள்காட்டிவிரல் நுனியும் சேர்ந்து மற்றைய விரல்களைச் சேராமல் விரித்துவைத்துக்கொண்டு வ்யாக்யானம் (விரிவுரை) செய்வது. நம் ஹயக்ரீவனின் வலது கையானது வ்யாக்யா முத்ரையுடன் மதுரமாய் அமைந்துள்ளது. நமக்கு எட்டாத ஸித்தாந்த விஷயத்தையெல்லாம் நன்றாக மனதில் எட்டும்படிச் செய்வதாய்த் தோன்றுகிறது அம்முத்திரை. இந்த முத்திரையை பக்தியுடன் ஸேவிப்பவர்களுக்கு ஸகல வேதாந்த விஜ்ஞானமும் கையில் கண்ட கனியாய் விளங்கும். விஜ்ஞானம் என்பதை ஒரு கல்பக வ்ருக்ஷமாக வைத்துக்கொண்டால் அம்மரத்தின் தளிர்போல் வலது திருக்கை தோன்றுகிறது. ஸமயத்தில் திருவிளக்கு அணையாமல் பார்த்துக்கொள்ள

வேண்டும். ஹயக்ரீவனை ஸேவித்துவிட்டோமேயானால் ஸம்ப்ர தாய ஜ்ஞானமாகிற விளக்கு மேன்மேலும் சுடர்விட்டு விளங்கும். புதியபுதிய பொருள்கள் எல்லாம் தோன்றும். அத்தகைய விளக்கு போன்ற ஸம்ப்ரதாய ஜ்ஞானத்தை தூண்டி விளக்கச்செய்வது அத்திருக்கை அமைந்திருக்கும். மனதில் ஸ்ரீஹயக்ரீவனை நினைத்து ஸேவிக்கும்பொழுதே ஸகல ஜ்ஞானத்தையும் அளிப்ப தாய் இருக்கும்.

வலதுகைகள் இரண்டில் ஒன்றை வர்ணித்தார். மற்றொரு கையில் அக்ஷமாலையை தரித்துக்கொண்டிருக்கிறார்.

24. சித்தே கரோமி ஸ்புரிதாக்ஷமாலம்
ஸவ்யேதரம் நாத! கரம் த்வதீயம் ।
க்ஞானா ம்ருதோதஞ்சந லம்படானாம்
லீலாகடீயந்த்ரமிவாச்ரிதாநாம் ॥

திருக்கையில் ஜபமாலை, அதிலுள்ள அக்ஷங்கள் ஒன்றன் பின் ஒன்றாக தள்ளிவரும் காலத்தில், ஆழமான கிணற்றில் இருக் கும் அம்ருதத்தை உயர எடுப்பதற்காக அநேக சால்கள் அடங்கிய ஒரு சங்கிலியைத் தள்ளிவருகிறாரோ? ஜ்ஞானமே அம்ருதம், அதை ஆச்ரயித்தவர்களுக்கு கொடுப்பதற்காக இந்த ஏற்றச்சால்களைக் கொண்டு உயர எடுக்கிறார் என்று ஏற்படுகின்றது. ஏற்றங்கள் சிறியதாய் இருப்பதற்குக் காரணம் அவை லீலாகடீயந்த்ரம் - விளை யாட்டுக்காகச் செய்யப்படும் யந்த்ரங்கள். ஆதலால் சிறியவை களாக இருக்கின்றன. இத்தகையத் திருக்கையை என் மனதிலேயே வைத்துக்கொள்கிறேன்.

இப்படி வ்யாக்யான முத்ரையுடன் அக்ஷமாலையுடன் கூடிய வலது திருக்கையை அநுபவித்துவிட்டு, அடுத்த ச்லோகத்தால் புஸ்தகத்துடன் கூடி இருக்கும் இடது திருக்கையை அநுபவிக்கி றார்.

25. ப்ரபோத ஸிந்தோ: அருணை ப்ரகாசை:
ப்ரவாள ஸங்காத மிவோத் வஹந்தம் ।
விபாவயேதேவ! ஸபுஸ்தகம் தே
வாமம் கரம் தக்ஷிணமாச்ரிதானாம் ॥

வாமம் கரம் - இடதுகையை வர்ணிக்கிறார். இடது கையாயிருந் தாலும் அது நமக்கு வலதுகையாகவே தோன்றுகிறது. அத்திருக் கையில் எமக்கு வேண்டிய புஸ்தகம் இருக்கிறது. இதை ஸேவிக் கின்றபோது கையில் பவழங்கள் குவியலாக வைக்கப்பட்டிருக் கின்றனவோ என்று தோன்றுகிறது. ஜ்ஞானமாகிற பெருங்கடல் ஒரே சிவப்பாக இருக்கிறது. ஸ்ரீஹயக்ரீவனுடைய திவ்யமங்கள விக்ரஹமே பெரியதொரு ஜ்ஞான ஸமுத்ரமென்றும், அதில் ஸம்பந் தப் பட்டிருக்கும் புஸ்தகம் பவழக்கொத்தென்றும் உத்ப்ரேக்ஷிக்கி றார்.

தக்ஷிணம் - இஷ்டபலன்களையெல்லாம் கொடுக்கக்கூடிய ஸாமர்த்யமுடையது. அவரை அடைந்தவர்க்கெல்லாம் தரவல்ல தாய் இருந்து தக்ஷிண ஹஸ்தமாகவே ஆகிவிடுகிறது. இதையே த்யானம் செய்கிறேன்.

26. தமாம்ஸிபித்வா விசதைர் மயூகை:
ஸம்ப்ரீணயந்தம் விதுஷஸ்சகோராந் ।
நிசாமயேத்வாந் நவபுண்டரீகே
சரத் கநே சந்திரமிவ ஸ்புரந்தம் ॥

ஸ்ரீஹயக்ரீவனைச் சந்த்ரனாகவும், அவன் எழுந்தருளியி ருக்கும் வெண்தாமரைப் புஷ்பமான பீடத்தைச் சரத்காலவெளுத்த மேகமாகவும், அவனுடைய உபாஸகர்களை சந்த்ரிகையைப் பாநம் பண்ணும் சகோரபக்ஷிகளாகவும், உபாஸகர்களுடைய அஜ் ஞானத்தை இருளாகவும் வர்ணித்திருக்கிறார். சந்த்ரோதயமானால் இருள் நீங்குவதுபோல, ஸ்ரீஹயக்ரீவனுடைய திருமேனி ப்ரகா சிக்கவே, உபாஸகர்களுடைய அஜ்ஞானமெல்லாம் நிவ்ருத்தமா கின்றது. சந்த்ரிகையை பாநம் செய்து, அதனால் பசி நீங்கி சகோரபக்ஷிகள் ஆநந்திப்பதுபோல உபாஸகர், திருமேனியின் ப்ர காசத்தை அநுபவித்து அதனால் அஜ்ஞானம் நீங்கி ஆநந்திக்கி றார்கள்.

"புண்டரீகாநாஸீநம் பாண்டராப்ரேந்து ஸந்நிபம்" என்பது ஸ்ரீஹயக்ரீவ த்யான ச்லோகம். (வெண்தாமரை ஆஸனத் தில் எழுந்தருளியிருக்கும் அந்தக் காரணத்தால் மேகத்தில் இருக் கும் சந்த்ரன் போல் இருக்கும்).

இப்படி வெண்மேகத்தில், வெண்மதில்போல், வெண்தாம ரையில் வெள்ளைப் பரிமுகர் என்று திருமேனிப் பெருமையைப்

பேசியுள்ளார். இதன்பிறகு திருமேனியின் சோபையை அநுபவிக்கிறார்.

27. திசந்துமே தேவ! ஸதா த்வதீயா:
தயாந்தரங்காநுசரா: கடாக்ஷா: ।
ச்ரோத்ரேஷு பும்ஸாம் அம்ருதம் க்ஷரந்தி
ஸரஸ்வதீம் ஸம்ஶ்ரித காமதேநும் ॥

தயாந்தரங்காநுசரா: - பகவத் கடாக்ஷம் அவனுடைய தயாப்ரவாஹத்தை பின்தொடர்கின்றது என்பதால் அவன் கடாக்ஷிப்பதும் அவனுடைய தயையின் கார்யமே.

ச்ரோத்ரேஷு அம்ருதம் க்ஷரந்தீம் - கேவலம் ச்ரோத்ர ஸம்பந்தத்தாலேயே (அர்த்த ஜ்ஞானம் ஸ்புரிப்பதன்றிக்கே) ஆஹ்லாதகரமான - சிறிய திருவடியின் பேச்சு சீதைபிராட்டிக்கு எப்படி "ஸம்ஶ்ரவேமதுரம்" ஆக இருந்ததோ - ஸுந்தரகாண்டம் XXXI - 1 "பாட்யே கேயேச மதுரம்" என்று கேட்பதற்கு மதுரமாயிருக்கும்படி இருந்தது. அம்மாதிரி இனியதாக இருத்தல் வேண்டும் என்று ப்ரார்த்தனை.

ஸம்ஶ்ரித காமதேநும் - இனியதாக இருப்பதுடன், காமதேநுவைப்போல, ஸகல அபீஷ்டங்களையும் (விருப்பங்களையும்) கொடுக்கக்கூடியவையாக இருந்தால், அவைகளின் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ? கேட்பவர்களுக்கெல்லாம் காதுகளில் அமுதம் சொரிவது போன்றதும், அடைந்தவர்களுக்கு காமதேநுவாய் இருந்து வேண்டியவையெல்லாம் செய்வதுமான ஸரஸ்வதியை உமது கடாக்ஷங்கள் கொடுக்கட்டும்.

ஸகல ஜனங்களும் பகவானுடைய பெருமையை அநுபவிக்கவேண்டுமென்று இவர் மநோரதித்தார்.

28. விசேஷவித் பாரிஷதேஷு நாத
விதக்த கோஷ்டீ ஸமராங்கணேஷு ।
ஜிகீஷதோமே கவிதார்க்கிகேந்த்ராந்
ஜிஹ்வாக்ரஸிம்ஹாஸநமப்யுபேயா: ॥

உன் கடாக்ஷமன்றி என் மனோரதம் நிறைவேறமாட்டாது. பிறமதஸ்தர்களான கவிகளையும், வாதிகளையும் ஜயிக்க

வேண்டும் என்று விரும்பும் தமக்கு வாதங்களில் திறமையை அளிக்குமாறு வேண்டுகிறார். வாயே ஸிம்ஹாஸனமாயிருக்கும். ஸிம்ஹாஸனத்திலேயே வீற்றிருந்து ஸ்வாமியின் திருவாக்குகளை ஹயக்ரீவனே இடும் ஆக்ஞைகள் போல் சீரும் சிறப்பும் உடைய தாக அநுக்ரஹிக்கவேண்டும் என்று வேண்டுகிறார்.

29. த்வாம் சிந்தயந் த்வந்மயதாம் ப்ரபந்ந:
த்வாமுத் க்ருணன் சப்தமயேந தாம்நா ।
ஸ்வாமிந்! ஸமாஜேஷு ஸமேதிஷீய:
ஸ்வச்சந்த வாதாஹவ பத்த சூர: ॥

இது வாத யுத்தத்தில் மாத்ரம் உண்மை என்பதால், எந்தக் கார்யத்திலும் பகவானை நன்றாக த்யானம் செய்துகொண்டு ப்ர வர்த்தித்தால், அந்தக் கார்யம் எவ்வித குறையுமின்றியே நடைபெ றுகிறது என்பது நிச்சயம். ஹே! மாதவ! உன்னுடைய பக்தர்கள் உன்னிடத்தில் திடமான ஸௌஹார்த்தத்தைச் செய்பவர்களாயி ருக்கிறபடியால் ஒருபொழுதும் கார்யஸித்தியைப் பெறாமல் இருக் கமாட்டார்கள். உம்முடைய பாதாரவிந்தத்தை எவர் மறக்கிறார் களோ அவர்களல்லவோ கீழே விழுகிறார்கள் என்பது மஹர்ஷி வாக்யம்.

வாத விரோதிகள் வாதம் செய்யத்தொடங்க, அவர்கள் அனைவரையும் வாதத்தில் முறியடித்து சூரர்களை வாய்திறக்க விடாமலும், ஸமாதானம் சொல்லவிடாமலும் செய்து ஸ்வதந்த்ர னாய் வாதம் செய்யும் பெருமையையும் பெற்று, ஒவ்வொரு ஸமூ ஹத்திலும் நான் விளங்கிவருகிறேன்.. உம்மையே நினைப்பவர்க்கு தோல்வி என்பது எங்காவது உண்டோ?

30. நாநா விதாநாம் அவதி: கலாநாம்
நசாபி தீர்த்தேஷு க்ருதாவதார: ।
த்ருவம் தவாநாத பரிக்ரஹாயா:
நவம் நவம் பாத்ரமஹம் தயாயா: ॥

வித்யை ஒன்றையும் கற்றிலேன், ஆசார்யர்களையும் பெற்றிலேன், வேறு உபாயமொன்றுமில்லை, அந்த உபாயத்தைப் பெறுவிக்கும் மார்க்கத்தையும் அறியேன். இம்மாதிரியான

பாத்ரத்தை அநாதரித்தால், பிறகு இம்மாதிரியான பாத்ரம் உமக்கு அகப்படாது என்று விண்ணப்பம் செய்துகொள்கிறார். வேறு புகலற்றவர்களோ, அகிஞ்சநர்களோ அவர்களையே அநுக்ரஹிக்கத்தக்க பாத்ரமாக அங்கீகரிக்கின்றது பகவானுடைய தயை. நவம் நவம் - இரட்டித்துச் சொல்வது மிகுதியைக் காண்பிக்கிறது. மிகப் புதியது. உம்மைத் தவிர்த்து வேறுகதியில்லை எனக்கு. நாதனற்றவனான நிலையில் இருக்கும் எம்போன்றவரையே காப்பேன் என்று சொல்லும் உமது தயையை என்ன சொல்வது! உலகிலேயே உயர்ந்த பாத்ரம் ஹயக்ரீவ தயாபாத்ரம் என்று சொல்லும்படி செய்துவைத்துள்ளீர். இது த்ருவம் - நிச்சயம். இந்த ஸ்லோகத்தின் மீட்டர், ஆகிஞ்சன்யம் வேண்டுகோள் - யாமுனமுனியின் ஸ்தோத்ரரத்ன ஸ்லோகம் 22 போல உள்ளது. (நதர்ம நிஷ்டோஸ்மி நசாத்மவேதீ ............. சரணம் ப்ரபத்யே)

31. அகம்பநீயாநி அபநீதி பேதை:
அலங்க்ருஷீரந் ஹ்ருதயம் மதீயம் ।
சங்காகளங்காபக மோஜ்வலாநி
தத்வாநி ஸம்யஞ்சி தவ ப்ரஸாதாத் ॥

உமது அநுக்ரஹம் கிடைத்துவிட்டது. ப்ரார்த்தித்த க்ருபாதிசயத்தைப் பெற்றால் ஸகல அஜ்ஞானமும் விலகிவிடும் என்று விண்ணப்பம் செய்துகொள்கிறார்.

அபநீதிபேதை: - பலவித குதர்க்கங்களால் மூன்று தத்வங்களைப் பற்றி உலகத்தில் குழப்பங்கள் தென்படுகின்றன. அப்படிப்பட்ட குழப்பங்களன்றிக்கே, அவைகளைப்பற்றிய தெளிவான ஜ்ஞானம் பகவானுடைய தயையாலே ஸம்பவிக்கும். உயர்ந்த தத்வங்கள் என் மனதிலிருந்து பெரியதோர் அலங்காரத்தைச் செய்யவல்லதாய் ஆகட்டும். தத்வ ஜ்ஞானத்தை ப்ரார்த்திப்பது பரமைகாந்தித்வத்திற்கு உசிதமாகுமோ என்று ஸந்தேஹிக்கலாம். ஆனால் ப்ரமாணங்கள் கூறியபடி, ஸம்ப்ரதாய ப்ரவர்த்தனத்திற்கு அவச்யம் வேண்டியதாகையால் அவற்றை யாசிப்பது சாஸ்த்ரீயமே.

32. வ்யாக்யாமுத்ராம் கரஸரஸிஜை: புஸ்தகம் சங்கசக்ரே
பிப்ரத்பிந்ந ஸ்படிகருசிரே புண்டரீகே நிஷண்ண: ।
அம்லாநஸ்ரீ: அம்ருத விசதை: அம்சுபி: ப்லாவயந் மாம்

ஆவிர் பூயாதநக மஹிமா மானஸே வாகதீச: ||

இது ஸ்ரீஹயக்ரீவ த்யான ச்லோகம்.

ஸ்தோத்ரத்தை இவ்வாறு முடிவுபெறுவித்து, ஸ்ரீஹயக்ரீவ னுடைய மூர்த்தி தமது மனஸ்ஸில் எப்பொழுதும் ஆவிர்ப்பவித்து இருக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்கிறார். ஹயக்ரீவனை த்யானம் செய்து உபாஸனை செய்யவேண்டும் என்று தோன்றுகிறது. எப்படி உபாஸிப்பது? ஸ்வாமி தேசிகன் ஹயக்ரீவனையே மனதில்கொண்டு ஹயக்ரீவ ஸ்வரூபத்தை அநுபவிக்கிறார்.

நான்கு திருக்கைகளோடு ஹயக்ரீவன் ஸேவைஸாதிக்கி றார். ஒவ்வொரு திருக்கையும் தாமரை மலர் போன்றது. ஒவ் வொரு தாமரையும் திருக்கையிலும் விளங்குகிறது. அந்த அழகு நம்மை மகிழ்விக்கிறது. நம் மனதில் ஒரு திருக்கையில் உள்ள வ்யாக்யாமுத்ரை ஸுலபமாக அறியமுடியாத அர்த்தங்களையும் நன்றாகப் பதியும்படி விளங்குகிறது. மற்றொன்றில் புஸ்தகம் விளங் கும். சங்கும், சக்ரமும் மற்ற இரு திருக்கைகளில் அழகிய ஸ்படி மணியின் ஒளிபோல விளங்கும் அலர்ந்த மலர் மேல் அமர்ந்தி ருக்கும் திருமேனி. நாம் அவனை ஸேவிக்கப்புக்கால் அவனது காந்தியெல்லாம் நம் மீது வீசுகிறது. அதனால் குளிர்ந்து மகிழ்ச்சி அடைகிறோம். இத்தகைய கல்யாண குணங்கள் பொலியும் ஹயக்ரீவன் நம் மனதில் தோன்றி வீற்றிருக்கவேண்டும். இதுவே என் ப்ரார்த்தனை.

தாம் ப்ரார்த்தித்து அடைந்த பலத்தை எல்லோரும் இந்த ஸ்தோத்ரத்தை அநுபவித்தே பெறலாம் என்று ஸ்தோத்ர பலத்தைச் சொல்லிக்கொண்டு முடிக்கிறார்.

33. வாகர்த்த ஸித்தஹேதோ:
படதஹயக்ரீவ ஸம்ஸ்துதிம் பக்த்யா |
கவிதார்க்கிககேஸரிணா
வேங்கடநாதேந விரசிதாமேதாம் ||

இந்த ஸ்தோத்ரத்தை சப்தமும், பொருளும் நன்றாக ஸித்திக்கும்பொருட்டு, பக்தியுடன் கூடினவர்களாய் படியுங்கோள். ஸ்ரீதேசிகன் தமது திருநாமத்தை ப்ரகடனம் செய்திருக்கிறது ஒரு

ஸம்ப்ரதாயம். படிப்பவர்களுக்கு அந்த க்ரந்தங்களில் ஒரு விச்வாஸம் உண்டாகவேண்டும் என்பதே கருத்து. இந்த ஸ்தோத்ரத்தைப் படிப்பவர்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் நன்மை பயக்கும்.

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ॥



ஸ்ரீ:

# கோபாலவிம்சதி

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

ஸ்வாமி தேசிகனின் ஸ்தோத்ரங்களில் தெய்வமணம் கமழ்கின்றது. அவர் திருவயிந்திரபுரத்தில் அர்ச்சாரூபத்தில் ஸேவை ஸாதித்தருளும் கோபாலன் விஷயமாக 21 ச்லோகங்கள் அடங்கியது. கடைசியான 21ம் ச்லோகம் பலச்ருதி.

1. வந்தே ப்ருந்தா வநசரம் வல்லவீ ஜநவல்லபம் ।
ஜயந்தீ ஸம்பவந்தாம வைஜயந்தீ விபூஷணம் ॥

இதில் இஷ்டதேவதா நமஸ்கார ரூபமான மங்களாசரணம். கோதை "ப்ருந்தாவனத்தில் கண்டோமே" என்றாள். அதை தேசிகன் முதலில் கொள்கிறார். பிறப்பிலியான ஸர்வேச்வரன், தன் பக்தர்களைக் காப்பாற்றுவதற்காக ஸ்ரீக்ருஷ்ணனாய் அவதரித்தான். ப்ருந்தாவனத்தில் கோபிகைகளுக்கு விசேஷமாக அனுக்ரஹிக்கவும், பரமஸௌலபமாய் நின்றபோதிலும், கழற்றவொண்ணாத பரத்வ ஸூசகமான வைஜயந்தீ மாலையை தரித்துக்கொண்டு ஒரு ஒளியாகத் தோன்றினான். ஜயந்தியில் அவதரித்த கோபாலனை நான் வணங்குகிறேன். கோபால சப்தம் கண்ணனையே குறிக்கும். தொடக்கத்தில் "வந்தே" என்கிறார். முடிவில் "யௌவதப்ரியம்" என்ற வாக்யம் உபாயம் முதல் ச்லோகத்தில்; கடைசியில் "ஸமீக்ஷதே" - ஸாக்ஷாத் காரம் பலம். ப்ருந்தா - கூட்டங்களை, அவனம் - ரக்ஷிக்க, சரம் - ஸஞ்சரித்தான். கண்ணன் ஜனங்களை ரக்ஷிக்க ஸஞ்சரித்தான்.

2. வாசம் நிஜாங்கரஸிகாம் ப்ரஸமீக்ஷமாணோ
வக்த்ராரவிந்த விநிவேசித பாஞ்சஜந்ய: ।
வர்ணத்ரிகோணருசிரே வரபுண்டரீகே
பத்தாஸனோஜயதி வல்லவ சக்ரவர்த்தி ॥

தாமரை ஆஸனத்தில் அமர்ந்து வல்லப சக்ரவர்த்தியாய் விளங்குகிறான். அவன் திருமேனி கமலமயம். வல்லவர்கள் நடுவில் இருப்பவன். ராஜகோபாலமந்த்ரம் அடங்கியது இந்த ச்லோகம். ஜனங்களைக் காப்பதற்காக சங்கத்தை எடுத்து ஏந்தினான். பலநிறங்கள்கொண்ட முக்கோண வடிவத்தால் அழகான சிறந்த தாமரையில் வீற்றிருப்பவனும், கோபர்கள் சூழ இருக்கிற கண்ணன் வெறியுடன் விளங்குகிறான்.

3. ஆம்நாயகந்தி ருதித ஸ்புரிதாதரோஷ்டம்
ஆஸ்ரா விலேக்ஷணமநுக்ஷண மந்தஹாஸம் ।
கோபாலடிம்ப வபுஷம் குஹனாஜநந்யா:
ப்ராண: ஸ்தநந்தயமவைமி பரம்புமாம்ஸம் ॥

கண்ணன் வாயில் வேத வாஸனையே வீசுவதாகவும், அவன் உதடு துடித்து அழும்போதெல்லாம் அது தெரிவதாகவும் விளங்குகிறான். கண்ணீரால் கலங்கிய கண்ணகளை உடையவனும், அடுத்த வினாடியிலேயே புன்முறுவலோடு கூடியவனும், இடைப்பிள்ளை வடிவத்தை உடையவனும், வஞ்சனையால் தாயாக வந்த பூதனையின் ப்ராணனோடு கூட பாலையுண்டவனுமான கண்ணனைப் பரமபுருஷனாக அறிகிறேன். அந்தத் தாய்க்கு நற்கதியும் அளித்தான் அவன். பூதனை அவித்யை, அந்த அவித்யை பரம் பொருளை நாடியது. பரம்பொருள் அதனால் கட்டுண்டு உழலாது அதன் பிராணனை எடுத்து மாய்த்துவிட்டது. ஆகையால் அவனைப் பரமபுருஷனாய் நினைக்கிறேன்.

4. ஆவிர்பவத்வநிப்ருதாபரணம் புரஸ்தாத்
ஆகுஞ்சிதைக சரணம் நிப்ருதாந்ய பாதம் ।
தத்நா நிமந்த முகரேண நிபத்த தாளம்
நாதஸ்ய நந்த பவனே நவநீத நாட்யம் ॥

அசைகின்ற ஆபரணங்களையுடையதும், தூக்கி மடக்கப் பட்ட ஒரு திருவடியை உடையதும், அசையாமல் (ஊன்றப்பட்ட) மற்றொரு திருவடியை உடையதும், கடைவதால் ஓசையுடன் கூடியதயிரினால் போடப்பட்ட தாளத்தையுடையதுமான, ரக்ஷகனான கண்ணனுடைய நந்தகோபன் திருமாளிகையில் வெண்ணைக்காக ஆடியநர்த்தனம் என் கண்முன்னே தோன்றிக்கொண்டே இருக்க

வேண்டும். இப்படி நந்தபவனத்தில் ஆடியகூத்தை அநுபவித்து இது தகாது, தகாது, ஒருபொழுதும் தகாது என்று சுட்டிக்காட்டு வதுபோல் இச் ச்லோகத்தின் நாலாம் பாதத்தில் பதங்களை யெல்லாம் நகாராரம்பமாக் கூறியுள்ளார் என்பது சாடு.

5. ஹர்தும் கும்பே விநிஹித கர: ஸ்வாதுஹையங்கவீனம்
த்ருஷ்ட்வா தாம க்ரஹண சடுளாம் மாதரம் ஜாதரோஷாம்।
பாயாதீஷத் ப்ரசலிதபதோ நாபகச்சந் நதிஷ்டந்
மித்யாகோப: ஸபதி நயநே மீளயந் விச்வகோப்தா ॥

கண்ணன் பால்யத்தில் செய்துபோன மாயங்கள் அநாயா சமாகச் செய்த அத்புத சேஷ்டிதங்கள், அவைகளை அநுஸந்தித் தால் போக்யத்தோடு முடிவில் மோக்ஷத்திற்கு வழிவகுக்கும்.

மதுரமான வெண்ணையை அபஹரிக்க கண்ணன் தாழி யின் ஆழம்வரை கை செலுத்தியவனாய், கோபமடைந்தவளாய் கட்டுவதற்காக கயிற்றை எடுப்பதில் பரபரப்பையுடையவளுமான தாயான யசோதையைப் பார்த்து கொஞ்சம் நகர்கின்ற திருவடி யையுடையவனும், அப்பால் போகாதவனும், ஒரே நிலையில் நிற் காதவனும், உடனே இரண்டு கண்களையும் மூடிக்கொண்டவனு மான, பொய் இடையனான கண்ணன் காப்பாற்றட்டும். ப்ரமேய மான கண்ணனை, ப்ரமாணாகிற கயிற்றினால் ப்ரமாதாவான மாதா கட்டவிழைகிறாள். கண்ணன் நிற்பனோ !ஓடுவனோ! நிற்க வும் இல்லை, ஓடவும் இல்லை.

6. வ்ரஜ யோஷித பாங்கவேதநீயம்
மதுராபாக்யமநந்ய போக்யமீடே ।
வஸுதேவவதூ ஸ்தநந்தயம்தத்
கிமபிப்ரஹ்ம கிசோர பாவத்ருச்யம் ॥

மதுரையின் பாக்யமாகத் தோன்றினவனும், வாஸுதேவ ரின் தேவியார் பெற்றெடுத்தவனும், வ்ரஜபூமியில் உள்ள இடைப் பெண்களின் கடைக்கண் பார்வையால் காணத்தக்கவனும், அவனையன்றி வேறொருவரையும் நாடாதவர்களுக்கு பரம போக்யமாய் இருப்பவனும், அதிவிலக்ஷணமான அந்த பரம் பொருளைத் துதிக்கிறேன்.

முக்திதரும் நகரேழில் இரண்டாவதான இடத்தைப் பெற்றது ஸ்ரீமதுரா. நாகபர்யங்கத்தைவிட்டு விட்டு மதுரா விற்கன்றோ பகவான் வந்துவிட்டான். மதுராவிற்கு பாக்யமோ பாக்யம்.

7. பரிவர்த்தித கந்தரம் பயேந
ஸ்மித புல்லாதர பல்லவம் ஸ்மராமி ।
விடபித்வ நிராஸகம் கயோஸ்சித்
விபுலோலூகல கர்ஷகம் குமாரம் ॥

எவரோ இருவர்க்கு மரப்பிரவியை ஒழித்தவனாய், அதற் காகப் பெரிய உரலை இழுத்துவருபவனாய், அச்சத்தினால் கழுத் தைத் திருப்பியவனாய், புன்சிரிப்பினால் அலர்ந்த அடிஉதடுகளை யுடையவனான சிறுவன் கண்ணனை த்யானிக்கிறேன்.

யமளார்ஜுனர்களுக்கு பாபவிமோசனம் செய்தான் கண்ணன்.

8. நிகடேஷு நிசாமயாமி நித்யம்
நிகமாந்தை: அதுநாऽபி ம்ருக்யமாணம் ।
யமளார்ஜுன த்ருஷ்ட பாலகேளிம்
யமுனாஸாக்ஷிக யௌவநம் யுவாநம் ॥

வேதாந்தங்களால் இப்பொழுதும் தேடப்பட்டவனாய், இரட்டை மரங்களால் காணப்பட்ட பாலலீலைகளையுடையவ னும், யமுனாநதி கண்கூடாகக்கண்ட இளம் வயது செயல்களை யுடையவனும், கண்ணன் எனும் யுவாவை அருகில் எங்கும், எப் பொழுதும் கண்டுகொண்டிருக்கிறேன். இப்படி பரமஸுலபனாய் கண்ணனின் யௌவன சேஷ்டிதங்களுக்கு யமுனாநதி ஸாக்ஷி.

9. பதவீ மதவீ யஸீம் விமுக்தே:
அடவீ ஸம்பதமம்புவாஹயந்தீம் ।
அருணாதர ஸாபிலாஷ வம்சாம்
கருணாம் காரண மாநுஷீம் பஜாமி ॥

செல்வத்தைப் பெருக்கும் மேகமாயிருப்பதும், நீருண்ட மேகத்தோடு கூடியதுபோல் செய்தும், சிவந்த உதடுகளில்

ஆசையோடு கூடிய புல்லாங்குழலையுடையதும், ஒரு காரணத்துக்காக மனுஷ்யரூபத்தை எடுத்ததுமான கருணையைத் தஞ்சமடைகிறேன், இவனை ஆச்ரயிக்கிறேன். காரணம் நீயே நாரணன் ஆதலின்.

10. அனிமேஷ நிஷேவணீயமக்ஷ்ணோ:
அஜஹத்யௌவநமாவிரஸ்து சித்தே ।
கலஹாயித குந்தளம் கலாபை:
கரணோந் மாதக விப்ரமம் மஹோமே ॥

கண்களாலே இமைகொட்டாமல் ஸேவிக்கத்தக்கதும், யௌவனத்தைவிடாமல் இருப்பதும், மயில் தோகைகளால் போரிடும் முன்னுச்சி மயிர்களையுடையதும், புலன்களைபிச்சேற்றவல்லதுமான அப்பெரும்ஜோதி எனது உள்ளத்தில் தோன்றட்டும். தோன்றிக்கொண்டே இருக்கவேண்டும்.

பரமபதத்திற்குச் செல்வதே ஆநந்தம். எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் சோபையை ரஸித்துக்கொண்டு செல்வது பரமானந்தமாகும்.

11. அநுயாயி மனோக்ஞ வம்ச நாளை:
அவதுஸ்பர்சித வல்லவீ விமோஹை: ।
அநகஸ்மித சீதளைரஸௌ மாம்
அநுகம்பா ஸரிதம்புஜைரபாங்கை: ॥

அந்த பகவான் கடைக்கண் பார்வைகளாலே என்னை ரக்ஷிக்கட்டும். அக்கடாக்ஷங்களின் பெருமைதான் என்ன! பின் தொடர்ந்து வருகிற மனத்தைக் கவர்கிற அழகான புல்லாங்குழல் இடைச்சிகளுக்கு மோஹத்தை உண்டுபண்ணியது. தோஷமற்ற புன்சிரிப்பு சில்லென்று இருக்கிறது. கருணையாகிற நதிக்குத் தாமரைகளாக இருப்பவையுமான கடாக்ஷங்களால் இவன் என்னை ரக்ஷிக்கட்டும்.

12. அதராஹித சாரு வம்ச நாளா:
மகுடாலம்பி மயூர பிஞ்ச மாலா: ।
ஹரிநீல சிலா விபங்க நீலா:
ப்ரதிபா: ஸந்து மமாந்திம ப்ரயாணே ॥

திருஅதரத்தில் அமர்த்தப்பட்ட அழகான புல்லாங்குழலும், க்ரீடத்தில் அமைக்கப்பெற்ற மயில்தோகை வரிசைகளும், இந்திர நீலக்கல்துண்டினுடையது போன்ற கருப்புகளுமான எண்ணங்கள் என்னுடைய அந்திமதசையில் தோன்றவேண்டும். இந்த வேணுகானசித்ரம் என் மரண காலத்திலும், என் இதயத்தைவிட்டு அகலாமல் இருக்கவேண்டும். அந்திம நிலையில் பரமனைப்பற்றிய நினைவு வரவேண்டும். வழிநெடுகிலும் அமாநவாதி ஸ்பர்சமே போக்யம் என்றிராமல், அங்கும் எம்பெருமான் கண்ணனையே காணவேண்டும். ஓடை (ச்ரவணம்) கண் பார்வை (சக்ஷுஷ்) நீலக்கல் போன்ற திருமேனி. இவைகள் வழிநெடுக அமைந்து பகவதநுபவம் பெறவேணும்.

13. அகிலாநவலோகயாமி காலாந்
மஹிளாதீந புஜாந்தரஸ்ய யூன: I
அபிலாஷ பதம் வ்ரஜாங்க நாநாம்
அபிலா பக்ரம தூரமாபிரூப்யம் II

உத்தம ஸ்த்ரீயான லக்ஷ்மீ தேவிக்கு அதீனமாக இருக்கும் திருமார்புடைய யுவாவான கண்ணனுடைய ப்ருந்தாவன சிறுமியருடைய ஆசைக்கிலக்காக இருப்பதும், வர்ணிக்கப்படும் நிலைக்கு அப்பாற்பட்டதுமான ஸௌந்தர்யத்தை எல்லாக் காலங்களிலும் ஸேவித்துக்கொண்டே இருக்கவேண்டும்.

14. ஹ்ருதி முக்த சிகண்ட மண்டநோ
லிகித: கேந மமைஷ சில்பிநா I
மதனாதுர வல்லவாங்கநா
வதனாம்போஜ திவாகரோயுவா II

அழகிய மயில் தோகையை ஆபரணமாக உடையவனும், மன்மதனால் துன்புற்ற கோபஸ்த்ரீகளுடைய முகமாகிய தாமரைக்கு ஸூர்யன் போன்ற இந்த வாலிப கண்ணனை எந்த சிற்பியினால் என் ஹ்ருதயத்தில் எழுதப்பட்டிருக்கிறான். (யதிராஜர் அநுக்ரஹத்தினால் யதிராஜ ஸப்ததி - ச்லோகம் - 24)

15. மஹஸே மஹிதாய மௌளினா
விநதேநாஞ்ஜலி மஞ்ஜநத்விஷே ।
கலயாமி விமுக்த வல்லவீ
வலயாபாஷித மஞ்ஜுவேணவே ॥

உலகப்புகழ்பெற்றதும், மை போன்ற ஒளியை உடையதாய், அழகிய இடைப்பெண்களின் கை வளையால் ஒலிக்கப்பெற்ற அழகிய குழலை உடையதாயுள்ள ஒப்பற்ற ஜோதிக்குத் தலை வணங்கி, அஞ்ஜலி செய்கிறேன். மௌளி - சிரஸ் - தலை.

16. ஜயதி லளித வ்ருத்திம் சிக்ஷிதோ வல்லவீனாம்
சிதில வலய சிஞ்ஜா சீதளை: ஹஸ்த தாளை: ।
அகில புவந ரக்ஷா கோப வேஷஸ்ய விஷ்ணோ:
அதர மணி ஸுதாயாம் அம்சவாந் வம்சநாள: ॥

இடைச்சியரின் தளர்ந்த வளைகளின் ஒலியால் குளிர்ந்த கையால் போடும் தாளங்களால் லளிதம் எனப்படும் அபிநயத்தை கற்பிக்கப்பட்டதாய், எல்லா உலகங்களையும் காப்பதற்காக இடையர் வேஷம்பூண்ட எம்பெருமானுடைய பவழம் போன்ற உதட்டின் அமுதத்தில் பங்குபெறுவதாயுள்ள புல்லாங்குழல் சிறந்து விளங்குகிறது. கண்ணனின் பாவம், குழலின் ராகம், கைகளின் தாளம் - இது ஒரு பரதநாட்டியமோ? இங்கு விஷ்ணு கோப வேஷத்தில், இடையர்களின் உடுப்பு, அகிலபுவன ரக்ஷணம், ஒரு சாதாரண மூங்கில்துண்டு என்ன பாக்யம் செய்ததோ?

17. சித்ரா கல்ப: ம்ரவஸி கலயந்லாங்கலீ கர்ணபூரம்
பர்ஹோத்வம்ஸ ஸ்புரித சிகுரோபந்து ஜீவம் ததாந:।
குஞ்ஜா பத்தாமுரஸி லளிதாம் தாரயந் ஹாரயஷ்டிம்
கோபஸ்த்ரீணாம் ஜயதி கிதவ: கோऽபிகௌமாரஹாரீ ॥

எம்பெருமானின் கோபவேஷம் எப்படி அமைந்துள்ளது? இதை அடியொற்றி, பாகவதத்தில் ஸ்ரீசுகரும், பெருமாள் திருமொழி 6 - 9ல் குலசேகரப்பெருமாளும் வடிவழகில் ஈடுபடுகிறார்கள். காதில் வெள்ளைப்பூ, கையில் சிவந்த பூ, திருமார்பில் குந்து மணிமாலை. இந்த வேஷம் கோபஸ்த்ரீகளை கவர்ந்தது. கௌமார அவஸ்தையில் வெகு அழகாக விளங்குபவன். இந்த வேஷத்தை

வர்ணித்து அதைக் காண வாருங்கள் என்றழைக்கிறார். பெருமாள் திருமொழி 6-3ல் . கண்ணா! உன் மாயை வளர்கிறது, விசித்ரமான வேஷம்.

18. லீலாயஷ்டிம் கரகிஸலயே தக்ஷிணே ந்யஸ்யதந்யாம்
அம்ஸே தேவ்யா: புளக ருசிரே ஸந்நிவிஷ்டாந்ய பாஹு: ।
மேக ச்யாமோ ஜயதி லளிதோ மேகலா தத்தவேணு:
குஞ்ஜா பீட ஸ்புரித சிகுரோ கோபகந்யா புஜங்க: ॥

பாக்யம் செய்த அழகிய கோலை (கழி) வலதுகையில் வைத்துக்கொண்டு, ஒரு கோபஸ்த்ரீயின் மெய்சிலிர்ப்பினால் அழகான தோளில் வைக்கப்பட்ட மற்றொரு கையை உடையவனும், ஒட்டியாணத்தில் செருகப்பட்ட புல்லாங்குழலை உடையவனும், நீருண்ட மேகம்போல் ச்யாமளவர்ணமுள்ளவனுமான, கோபஸ்த்ரீயருடைய காதலனான கண்ணன் மிக அழகாக வெற்றியுடன் விளங்குகிறான்.

19. ப்ரத்யா லீட ஸ்திதிமதிகதாம் ப்ராப்த காடாங்க பாலிம்
பஸ்சாதீஷன்மிளித நயநாம் ப்ரேயஸீம் ப்ரேஷமாண: ।
பஸ்த்ராயந்த்ர ப்ரணிஹிதகரோ பக்த ஜீவாதுரவ்யாத்
வாரிக்ரீடா நிபிடவஸநோ வல்லவீ வல்லபோ ந: ॥

வில்லாளி போன்ற நிலையில் இருப்பவளும், இருக அணைக்கப்பட்டவளும், பின்புறம் சிறிது பார்வையைச் செலுத்தியவளுமான காதலியை அன்போடு கண்டவனாய், துருத்தியில் நீர் பீச்சுவதற்காகக் கைகளை வைத்துக்கொண்டு நீராட்டத்தினால் நனைந்த அடர்ந்த ஆடையுடைய பக்தர்களின் உயிராக இருக்கும் இடைச்சிகளின் நாதனான கண்ணன் நம்மைக் காப்பாற்றட்டும்.

ப்ரத்யாலீடநிலை என்பது ஐந்துவிதமான வில்லாளிகளின் நிலைகளில் ஒன்று. ஒருத்தி இடதுகாலை முன்னேயும், வலது காலை மடக்கிப் பின்னே ஊன்றி உதைத்தால்போல் நிற்கிறாள். ஸ்ரீமத்ராமாயணத்தில் ஆரண்யகாண்டம் XXX- 23ல் ஸ்ரீராமன் தன் நிலையை இப்படி நிறுத்திக்கொள்கிறான். சக்ரத்தாழ்வானின் ப்ரத்யாலீடஸ்திதி ஸுதர்சனாஷ்டகம் ச்லோகம் 6ல்.

ப்ரத்யாலீட நிலையில் அமர்ந்திருப்பவளும், பின்புறத்தி லிருந்து கண்ணனால் இறுகி அணைக்கப்பட்டவளாய் இருப்பதை வர்ணிக்கிறார். கண்ணன் பீச்சான்குழலும் கையுமாக நிற்கிற அழகுதான் என்னே!

20. வாஸோ ஹ்ருத்வா திநகரஸுதா ஸந்நிதௌ வல்லவீநாம்
லீலாஸ்மேரோ ஜயதி லளிதாமாஸ்தித: குந்தசாகாம் ।
ஸவ்ரீடாபி: ததநு வஸநே தாபிரப்யர்த்யமாநே
காமீ கஸ்சித் கரகமலயோரஞ்ஜலிம் யாசமாந ॥

சூர்யன் மகளான யமுனைநதியின் அருகில் ஆயர் சிறுமி களின் வஸ்திரங்களை அபஹரித்து, அழகான கடம்பமரத்தின் கிளையில் அமர்ந்தவனாய், பிறகு வெட்கமடைந்த அப்பெண் களால் வஸ்திரங்களை திருப்பி அளிக்கும்படி வேண்டப்பட்ட வனாய், செந்தாமரைப்பூ போன்ற அவர்களது இரண்டுகைகளை யும் கூப்பி அஞ்ஜலியை யாசிக்கும்படி விளையாட்டுச் சிரிப்புடன் ஒருகாமுகன் வெற்றிவாகை சூடுகிறான்.

நான் உங்களின் நன்மைக்காகவே உங்களை நேசிக்கிறேன் என்றான். ஆடையற்று நதியில் நீராடுவது தப்பு. அஞ்ஜலி ஒரு ப்ராயச்சித்தம். அஞ்ஜலி செய்தனர். அவனையே நீராக்கிவிட்ட னர். அஞ்ஜலியின் ப்ரபாவம். அஞ்ஜலியுடன் பகவானை அணுகி னவர்களுக்கு பலன் நிச்சயம். அஞ்ஜலியை யாசித்து அத்தால் அவர்களுக்கு ஆகிஞ்சந்யத்தையும், அநந்யகதியையும் உண்டாக்கி, அதன் பலமாக அவர்களுக்குத் தன்னுடைய பூர்ணாநுபவத்தைக் கொடுத்தருளினான்.

21. பலச்ருதி ச்லோகம்
இத்யநந்ய மநஸா விநிர்மிதாம்
வேங்கடேச கவிநா ஸ்துதிம் படந் ।
திவ்யவேணு ரஸிகம் ஸமீக்ஷதே
தைவதம் கிமபியௌவத ப்ரியம் ॥

இவ்வாறாக வேறொன்றில் செல்லாத மனத்தையுடைய வேங்கடேசன் என்னும் கவியினால் இயற்றப்பட்ட ஸ்தோத்ரத் தைப் படிக்கிறவன் தெய்வீகமான ரஸாநுபவம் செய்வதும், இளம்

வயதுள்ள பெண்களுக்கு இனியதுமான ஒப்பற்ற தெய்வத்தைக் காண்கிறான்.

மங்களகரமான குணங்களுடையவரும், கவிகள், தார்க்கிகள் இவர்கள் முன் சிங்கம் போன்றவரும், வேதாந்தாசார்யரும், வேங்கடநாதன் என்ற திருநாம் உள்ள ஆசார்யருக்கு நமஸ்காரம்.

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ॥

கண்ணனைத் தவிர வேறு எவரையும் நாடாதவர்கள்தான் க்ருஷ்ணாநுபவத்தைப் பெறுவார்கள். பிள்ளைப்பருவ லீலையே மையமாகக்கொண்டு நிர்மாணிக்கப்பட்ட ஸ்தோத்ரம்தான் கோபாலவிம்சதி. ஈடுபாட்டுடன் பார்த்துப்பார்த்து அழகாக அமைக்கப்பட்ட அத்யாத்ம க்ரந்தம். இதை ஏனோதானோ என்று படிக்காமல், ஆழ்ந்து ஊன்றி மனதை வேறு எங்கும் செலுத்தாமல் ஏகாக்ரதையோடு படிப்பவன் நிச்சயமாக வேணுகோபாலனை நேரிடையாக ஸேவிக்கலாம் என்று ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்கிறார். தானே கண்டுகொண்டதைக் கூறியுள்ள இந்த ஸ்ரீஸூக்தியைப் படித்தால் நாமும் தேவனைக் காணலாம். கண்ணன் யௌவதப்ரியன். யுவதிகளுக்கு ப்ரியமானவன். அவனைப்பற்றிய இந்த ஸ்தோத்ரத்தை ஸேவிப்பவர்கள் கண்ணனை திண்ணம் இக்கண்ணாலேயே ஸேவிப்பார்கள் என்று பலச்ருதியுடன் இத்துதி முடிவடைகிறது.

இந்த வ்ரஜபூமியில் காலை வைத்தால் "அஞ்ஜலிம் யாசமான:" என்று நம்மிடம் கேட்டு, பெற்று நமக்கு ஸத்தையை (இருப்பு) உண்டாக்குகிற மாயன். இந்த அஞ்ஜலி "ததைவ முஷ்ணாதி அசுபாநி" என்று ஸ்தோத்ரரத்னத்தில் (28ம் ச்லோகம்) கூறியபடி அபவர்கத்தையன்றோ அளித்துவிடுகிறது. இப்படிப்பட்ட ஆயரேற்றை, ப்ருந்தாவனசரனை அவன் யாசிப்பதற்கு முன்பே "வந்தே ப்ருந்தா வநசரம்" என்று ப்ரபத்தி செய்தார் ஸ்வாமி தேசிகன்.

பகவானுடைய திருநாமங்கள் எல்லாம் நமக்கு உத்தேச்யமானாலும், அவற்றில் சிலவற்றை சிலசமயங்களில் விசேஷித்து அநுஸந்தானம் செய்வது ஸம்ப்ரதாயம். உதாரணமாக ப்ரயாண காலங்களில் கேசவனையும், தூங்குவதற்குமுன் மாதவனையும், போஜனகாலங்களில் கோவிந்தனையும் அநுஸந்தானம் பண்ணு

வது வழக்கம். இதைப் பின்பற்றியே இந்த ஸ்தோத்ரத்தை ததீயா ராதனகாலங்களில் அநுஸந்தானம் பண்ணுகிறார்கள். ஸ்ரீஸங்கல் பஸூர்யோதயத்தில் நாரதர் புருஷனுக்கு மந்த்ரோபதேசம் செய்யவந்தபொழுது இந்த ஸ்தோத்ரத்தின் 12வது ச்லோகத்தைப் பாடிக்கொண்டு வந்தாரென்று கூறப்படுகிறது.

ஸ்வாமியின் ஸ்தோத்ரங்கள் பகவானைப் பற்றியவையே யாகிலும், இதுவும், ரகுவீரகத்யமும் அந்தந்த அவதாரவ்ருத்தாந் தங்களைச் சற்றுவிரிவாய்க் கூறும்.



ஸ்ரீ:

# ஸ்ரீரகுவீரகத்யம்

இந்த ஸ்தோத்ரம் திருவஹீந்திரபுரத்தில் அர்ச்சாரூபத்தில் ஸேவைஸாதிக்கும் சக்ரவர்த்தித்திருமகன் விஷயமானது. இந்த ஸ்தோத்ரத்திற்கு ஸ்வாமி தேசிகன் சூட்டியருளிய திருநாமம் மஹாவீரவைபவம் என்பது. ஆனாலும் ரகுவீரகத்யம் என்றே பெரும் பாலும் இந்த ஸ்தோத்ரம் வ்யவஹரிக்கப்பட்டு வருகிறது. ஸ்ரீராமாவதார வ்ருத்தாந்தங்களை ஸங்க்ரஹிக்கும் 96 கத்யங் களுடன் அடங்கிய ஸ்தோத்ரம். இதில் முதல் ச்லோகம் ஸ்ரீமத் ராமாயண் முழுவதையும் சுருக்கமாகக் கூறுகிறது. இறுதியில் க்ருஹமேதியாய் ப்ரம்மாதிகளாகிறபிள்ளை பேரன் இவர்களுடன் இருக்கும் பகவானை வணங்குகிற ஒரு ச்லோகமும், பலச்ருதி யாக ஒரு ச்லோகமும் அடங்கியது.

இதில் ஸ்வாமி தேசிகன் தம்மைக் கவிதார்க்கிகஸிம்ஹம் என்று நிரூபித்துக்கொண்டிருக்கிறார். ஸ்ரீகோபாலவிம்சதியில் வந்தே என்று தொடங்கி பகவானுக்குச் செய்யவேண்டிய நமஸ் காரத்தைச் செய்தருளினார். இங்கு சக்ரவர்த்தித் திருமகனாய்ப் பிறந்து படைத்த ஏற்றத்திற்கு அநுகுணமாக “ஜய ஜய மஹாவீர” என்று தொடங்கியுள்ளார். கத்யங்கள் பாலகாண்டம் 19, அயோத்யா காண்டம் 7, ஆரண்யகாண்டம் 14, கிஷ்கிந்தாகாண்டம் 5, ஸுந்தர காண்டம் 1, யுத்தகாண்டம் 29, உத்தரகாண்டம் 19. ஆக 94 கத்யங்களும் வ்ருத்தாந்தங்களில் வெளியிடப்பட்ட குணத்தை ப்ரகாசிப்பதாய் இருக்கின்றன. ஸ்ரீராமனின் வீரச்செயல்களை வெளியிடுகின்றன.

The story of the Lord's descent into this world as the dutiful son of an emperor to dispel the sufferings of the devas, His resolve to protect those who surrender to Him, vanquishing the enemies, His coronation and grant of salvation to everyone are all related in Raghuveera gadya in 95 direct addresses to Sri Rama. Taunting Sita sharply after His victory and testing Her through fire, rejecting Her under His righteous reign despite Sage Valmiki's extreaty and grim farewell are all held back in the gadhya only to be understood from the 69th address hailing Him as one executing a mutually agreed divine drama - **स्व समय विघटित सुघटित सहृदय सह**

**धर्मचारिणीक** - திவ்யதம்பதிகளின் பிரிவும் மற்றையோரால் ஏற்படுத்தப்பட்டதல்ல, தாங்களே தங்களுக்குள் ஆடிய நாடகமாகும்.

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

**ஜயத்யாஶ்ரித ஸந்த்ராஸ த்வாந்த வித்வம் ஸனோதய:**
**ப்ரபாவாந் ஸீதயா தேவ்யா பரமவ்யோமபாஸ்கர:**

பிராட்டியாகிய பேரொளி படைத்து பரமாகாசத்தில் ப்ரகாசிக்கும் ஸ்ரீராமஸூர்யன் பக்தர்களின் மன இருளைப் போக்கி மேலும் விளங்கட்டும்.

1. **ஜய ஜய மஹாவீர !** - உடல் வலிமை கொண்ட வீரர்களில் முதன்மையானவனே! ஸ்ரீராம! போற்றி, போற்றி !

2. **மஹாதீரதெளரேய !** - உள்ளத்தில் உறுதிபடைத்த தீரர்களில் முன்னிலையில் இருப்பவனே ! ஸ்ரீராம! போற்றி, போற்றி!

3. **தேவாஸுர ஸமர ஸமய ஸமுதித நிகில நிர்ஜர நிர்தாரித நிரவதிக மாஹாத்ம்ய !**
தேவ அஸுர யுத்தம் நேர்ந்த காலத்தில்தான் ஸகல தேவராசிகளும் கூடி உன் மகிமையைத் திட்டவட்டமாக நிர்ணயம் செய்தனர்.

4. **தசவதந தமித தைவத பரிஷதப்யர்த்தித தாசரதிபாவ !**

5. **தினகர குல கமல திவாகர !** பிறகு ராவணனால் மிதியுண்ட அத்தனை தேவர்களும்

6. **திவிஷததிப ரணஸஹசரண சதுர தசரத சரமருண விமோசந !**
இப்படி நீ பிறந்ததால், தேவேந்த்ரனுக்கு யுத்தகாலத்தில் உதவியதன்மூலம் முன்பே தேவர்கள் கடன் கழற்றிய தசரதருக்கு எஞ்சி நின்ற பித்ருக்கள் கடனையும் அகற்ற உதவினவன் ஆகிறாய்.

7. **கோஸலஸுதா குமாரபாவ கஞ்சுகித காரணாகார !**
உலகுக்கெல்லாம் பரமகாரணவஸ்துவாகிய நீ, கௌஸல்யை

யின் திருக்குமாரன் என்ற போர்வையிலே ஒளிந்து வளர்ந்தாய். தசரதன் கேவலமான ஒரு ஸாமான்யமான புத்ரன் பிறந்தால் எந்த ருணம் தீருமோ அது நீங்கப்பெற்றான். கௌஸல்யையோ அவனை பகவானாய் பாவித்தபடியால் அவனை ஜகத்காரணம் என்று அறிந்தாள். இந்த பேதத்தை ஸ்வாமி 6-7 கத்யங்களில் கூறியுள்ளார்.

8. கௌமாரகேளி கோபாயித கௌசிகாத்வர !
ஸ்ரீராமன் பால்ய லீலைகளின் ஒரு திவலையாக விச்வாமித்ர யாக ஸம்ரக்ஷணமும் தலைக்கட்டிற்று. மாமுனி வேள்வியைக் காத்ததினால் அவன் யௌவன பருவத்திலேயே வீரத்தை நிரூபித்தான்.

9. ரணாத்வர துர்ய பவ்ய திவ்யாஸ்த்ர ப்ருந்தவந்திதா !
அப்போது வெளியாகிய உன் வல்லமையைக் கண்டு பெரும் போருக்கு சாதனமாகிய சஸ்த்ரங்கள் எல்லாம், அவனைத் தாமே வந்தடைந்தன.

10. ப்ரணத ஜன விமத விமதந துர்லளித தோர்லளித !
அவனுடைய திருத்தோள்கள் தினவடங்க தேசமெங்கும் பக்தர்களுக்கு விரோதி நிரஸனம் செய்து உகந்தான் ஸ்ரீராமன்.

11. தநுதர விசிக விதாடந விகடித விசராரு சராரு தாடகா தாடகேய !
சிறிய பாணத்தை ஸ்ருஷ்டி செய்து தாடகையினிடமிருந்து அவள் மகனாகிய மாரீசனை விலக்கி (மேல் வரும் கார்யத்துக்காகக் கொல்லாமல்) உயிருடன் ஒட்டிவிட்டாயே ! இதில் "தாடகா தாடகேயோ" என்று இருவர்களுடைய நிரசனமும் சேர்ந்தாற்போல் நடந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. தாடகையின் வதத்தினாலேயே அவளுடைய புத்ரர்களும் கொல்லப்பட்டனரோ? இல்லை. தாடகையின் வதத்திற்குப் பின்னர் தாடகேயர்கள் அங்கு வந்து ரிஷிகளை முன்போல் துன்புறுத்தவில்லையாகையால் அவர்கள் ம்ருதப்ராயர் எனக் கருதி இப்படி அருளிச்செய்தார் போலும்.

12. ஜடகிரண ஸகல ஜடில நடபதி மகுடதட நடனபடு விபுதஸரி

ததித பஹுள மதுகளந லளித பத நளிநரஜ உபம்ருதித நிஜவ்ருஜிந ஜஹதுபல தநுருசிர பரமமுனிவர யுவதிநுத !

ஜடகிரணனாகிய சந்திரனுடைய சிக்குத்தலையனான ஓர் ஆடல் வல்லான் (சிவன்) முடிவில் குதித்து ஆடவல்ல அமர நதி (கங்கை) யாகிய தேனொழுகும் திருவடித்தாமரையின் ஒரு துகள் தன்மேல் பட, அவனால் தனது பாபமெல்லாம் தொலைய, கல்லுருவம் கலைந்து பெண்ணுருவம் பெற்றுத் திகழ்ந்த கௌதம தர்மபத்னி (அஹல்யை) ஸ்ரீராமனை பல வாறு போற்றினாள் அன்றோ!

13. குசிக ஸுத கதித விதித நவ விவித கத !
வழி நடந்து நொந்த கால்கள் ஆற விச்வாமித்ரர் புதிதுபுதி தான ஒன்பது கதைகளைச் சொல்லிக்கேட்டு நீ உகந்தாயே!

14. மைதில நகர ஸுலோசனா லோசன சகோரசந்த்ர !
மிதிலாநகரத்துப் பெண்களின் கண்களுக்குப் பெரு விருந் தானாயே !

15. கண்டபரசு கோதண்ட ப்ரகாண்ட கண்டந சௌண்ட புஜதண்ட!
அங்கே உன் தோள் வலிமையினால் சிவதனுஸை வாங்கி முறித்தவனே !

16. சண்டகிரண மண்டலபோதித புண்டரீக வநருசி லுண்டாக லோசன !
ஆழ்ந்த நீரில் பருத்த தண்டின்மேல் ஸூர்ய கிரணங்களால் அப்போதே அலர்ந்த செந்தாமரையை வென்றன அம்மா ! உன் கண்ணிணைகள் ஆநந்த மிகுதியிலே.

தனுர்பங்கம் செய்ததால் வீர்யசுல்கையான பிராட்டியைத் தாம் மணம் புரிவது ஸித்தித்தது என்ற ஆனந்தத்தால் திருக் கண்கள் விகாஸமடைந்தன. தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீ கமேவ மக்ஷிணீ --- வேதவாக்யம்.

17. மோசித ஜனக ஹ்ருதய சங்காதங்க !
பருவமெய்திய பெண்ணைப் பெற்று, மரக்கலம் தொலைந்து கடலிலே துளங்குவாரைப்போல் இருந்த ஜனகராஜரின் சஞ் சலம் தீர்த்தாய் !
ஸ்ரீராமன் மனோநயனஹாரி துஸ்ஸாத்யமான ப்ரதிஜ்ஞை யைச் செய்தோமே என்று கலங்கியிருந்தநிலை நீங்கி ஜனகர்

பரமநிவர்த்தியை அடைந்தார். ராமன் ஜனங்களைக் கவரு கிற கண்களை உடையவர்.

18. பரிஹ்ருத நிகில நரபதி வரண ஜநக துஹித்ரு குசதட விஹ ரண ஸமுசித கரதல !

பிற அரசர்களின் பேச்சுப்படினும் வாழகில்லாத ஜானகி யின் திருமார்பில் தவழ்ந்து விளையாட வல்லவனான உன் திருக்கரங்கள் (ஸீதாதேவியை மணம் புரிய ஸ்ரீராமனே ஸர் வாத்மனா தகுந்தவர்). ஸீதா கல்யாணமே ! ராமா கல்யா ணமே !

19. சதகோடி சதகுண கடின பரசுதர முநிவர கரத்ருத துரவநதம நிஜ தநுராகர்ஷண ப்ரகாசித பாரமேஷ்ட்ய !

வஜ்ராயுதத்தினும் நூறு மடங்கு கடினமான பரசுராமமுனி வன் கையிலேந்திய வளைக்கவொண்ணாத, விஷ்ணு தநுஸ் ஸையும், வலித்திழுத்து உன் ஸர்வேச்வரத்தை (மேன்மை யை) ஸகலருக்கும் வெளியிட்டாய்.

20. க்ரதுஹர சிகரி கந்துக விஹ்ருத்யுந் முக ஜகதருந்துத ஜித ஹரி தந்தி தந்த தசவதந தமந குசல தசசதபுஜ முக ந்ருபதி குல ருதித ஜரபரித ப்ருதுதர தடாக தர்பித பித்ருக ப்ருகபதி ஸுகதி விஹதிகர நத பரிடிஷுபரிக !

ராவணன் கைலாஸ கிரியைப் பந்தாடினான் என்பர். உலக னைத்தையும் முன்போல் உறுத்திவந்தவன் அவன். திக்கஜங் களைப் பெற்றவன். அத்தகைய வீரனை தன் ஆயிரம் கைக ளின் கீழே சிறைவைத்தவன் கார்த்தவீர்யார்ஜுனன். அவனு டைய குலத்துதித்த அரசர்கள் எல்லோரையும் கொன்று, ரத் தத்தைக் குளமாக்கினார் பரசுராமர். அதில் கார்த்தவீர்யார் ஜுனனால் கொல்லப்பட்ட தம் பிதாவுக்கு அந்த ஆத்திரம் தீர தர்ப்பணம் செய்தார் பரசுராமர். அவர் எவ்வளவு பராக்ர மசாலி என்பது நமக்கு விளங்கும். அத்தகைய பரசுராமரு டைய புண்யலோக மார்க்கங்களை எல்லாம் விஷ்ணு தநுஸ் ஸில் தொடுத்த ஒரு கணைக்கு இரையாக்கிக்கொண்டாயே ஸ்ரீராம !

பாலகாண்டம் முற்றிற்று

## அயோத்யாகாண்டம்

21. அந்ருதபய முஷித ஹ்ருதய பித்ருவசந பாலந ப்ரதிக்ஞா வஜ்ஞாத யௌவராஜ்ய !
பொய்பேச பயந்து வைகேயி வசனத்தால் தசரதரின் வெற்று வார்த்தைக்கும் மதிப்பு அளித்து மறுநிமிஷமே நாட்டை துறந்து நீ காட்டுக்கு எழுந்தருளினாயே !

22. நிஷாத ராஜ ஸௌஹ்ருத ஸூசித ஸௌசீல்யஸாகர !
காட்டிலே வேடுவர் தலைவனுடன் தோழமைபூண்டு உன் நேர்மையை நாட்டுக்கு வெளிப்படுத்தினாய். (தாழ்ந்தோரிடம் தணிவு பாராட்டுவதுபோல, பரத்வாஜர் போன்ற பெரியோரிடம் கௌரவத்துடன் நடந்துகொண்டார் ஸ்ரீராமன்).

23. பரத்வாஜ சாஸந பரிக்ருஹீத விசித்ர சித்ரகூட கிரிகடக தட ரம்யா வஸத !
பிறகு அழகிய சித்ரகூட மலையின் அடியில் பரத்வாஜ மஹர்ஷியின் கட்டளைக்கு உட்பட்டுக் கொஞ்சகாலம் வாஸத்தை மேற்கொண்டாய்.

24. அநந்ய சாஸநீய !
உண்மையில் நீயே எல்லோரையும் கட்டளையிடும் கடவுள்.

25. ப்ரணத பரத மகுடதட ஸுகடித பாதுகாக்ரய அபிஷேக நிர்வர்தித ஸர்வலோக யோகக்ஷேம !
சித்ரகூட மலைக்கு வந்து உன் திருவடியில் சிரம் தாழ்த்தி வணங்கிய சிற்றன்னை மகன் பரதன் தலைக்கு அணியாக உன் பாதுகைகளைச் சேர்த்து ஸர்வலோக யோகக்ஷேமம் ஏற்பட உதவினாய். (வசிஷ்டாதிகள் பரதனைச் சார்ந்து பேசி, அயோத்தி திரும்பிவந்து பட்டாபிஷேகம் செய்துகொள்ள ப்ரார்த்தித்தபோது, தன் உறுதியை விடாது கைபிடித்த ஸ்வாதந்த்ரயன் ஸ்ரீராமன். சரணமடைந்த தேவர்களுக்கு தான் ராவண வ்தம் செய்ததாகக் கூறிய வசனத்தை வீணாக்கவில்லை). ஸர்வலோகயேக்ஷம நிர்வாஹம் ஸ்ரீபாதுகா ஸஹஸ்ரத்தில் பரக்க நிரூபிக்கப்பட்டிருக்கிறது).

26. **பிசித ருசி விஹித துரித வலமதந தநய பலிபுகநுகதி ஸரபஸ சயந த்ருண ஸகல பரிபதந பயசகித ஸகல பரிபதந பய சகித ஸகல ஸுர முநிவர பஹுமத மஹாஸ்த்ர ஸாமர்த்ய !**
இந்த்ரன் மகனான ஒரு காகம் ரத்தவெறிகொண்டு பிராட்டியிடம் பிழைபட அதனை உன் ஆஸநத்தின் ஒரு புல்லாலே அடித்துத் துரத்த அனைத்துலகும் உன் அஸ்த்ர ஸாமர்த்யத்தை அப்பொழுது புகழ்ந்தது. (காகாஸுரவ்ருத்தாந்தம், ஸ்ரீமத் ராமாயணத்தில் வால்மீகியால் நடந்த ப்ரகாரம் கூறப் படவில்லை. பிராட்டி மூலமாய், பின்னால் ஸுந்தரகாண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வாமி தேசிகனோ அதை நடந்த இடத்திலேயே கூறியுள்ளார். சரணாகதி வைபவம் ஸுந்தரகாண்டத்தில் கூறாமல் இருந்தால் மற்றைய காண்டங்களில் போலன்றி ப்ரகரணமற்று சோபிக்காமல் இருந்திருக்குமே என்று வால்மீகியின் மனதில் தோன்றியிருக்குமோ?)

27. **த்ருஹிணஹர வலமதந துராலக்ஷ்ய சரலக்ஷ்ய !**
அரன், அயன், இந்த்ரன் இவர்களுக்கு எட்டவும் ஒண்ணாத இலக்கைத்தொடக்கூடிய அஸ்த்ரங்களை உடையவன் நீ! சரணாகத ரக்ஷணத்தைக் கைக்கொள்ள சக்திவாய்ந்தவன். நிருபாதிக சரண்யனான பகவான் ஒருவனே.

## *ஆரண்யகாண்டம்*

28. **தண்டகாதபோவந ஜங்கம பாரிஜாத !**
பிறகு தண்டகாரண்யத்தில் ஆச்ரமங்களில், நீ கால்கொண்டு நடக்கும் கல்பகவ்ருக்ஷம்போல் விளங்கினாயே ! (Mobile Karpaga Tree)

29. **விராத ஹரிண சார்தூல !**
அங்கு விராதன் முதலிய அரக்கர்களுக்குப் புலிபோல் ஆனாய்.

30. **விலுளித பஹுபல மக கலம ரஜநிசரம்ருக ம்ருகயா ரம்ப ஸம்ப்ருதநுரோத !**
ரிஷிகள் வேண்டிக்கொள்ள, அவர்கள் இட்ட யாகப்பயிரை அழிக்கும், அஸுரம்ருகங்களை நீ வேட்டையாடிக்கொன்றாய்.

31. த்ரிசிர:சிரஸ்த்ரிதய திமிர நிராஸ வாஸரகர !
த்ரிசிரஸ்ஸின் தலைகளாகிற இருளை உருள உதித்த சூரியன் நீ.

32. தூஷண ஜலநிதி சோஷண தோஷித ருஷிகண கோஷித விஜயகோஷண !
தூஷணன் எனும் ஆழ்கடலையும் வற்ற அடித்து ரிஷிகளுக்கு நன்மை செய்து, அவர்கள் பல்லாண்டு பாடநின்றாய்.

33. கரதர கரதரு கண்டந சண்ட பவந !
கரன் எனும் முரட்டு மரத்தைச் சூறாவளி என முறித்தாய். வேருடன் சாய்க்கும் சண்டமாருதம் போன்ற ஸ்ரீராமனே!

34. த்விஸப்த ரக்ஷ: ஸஹஸ்ர நளவந விலோலந மஹாகலப !
பதினான்காயிரம் ராக்ஷஸர்களாகிய கோரைகளை, மத்தக ஜமென மிதித்துத் துலைத்தாய்.

35. அஸஹாய ஸூர !
அந்த நிலையில் உனக்கு ஒரு துணைதான் வேண்டிற்றோ?

36. அநபாய ஸாஹஸ!
அல்லது, அதில்லாமையால் அங்கு உனக்கு ஏதாகிலும் ஊரு தான் நேர்ந்ததோ? ஆபத்தில் காலிட்டுக்கொள்ளாமல் உன் ஸாஹஸம் இதன்றோ!

37. மஹித மஹாம்ருத தர்சந முதித மைதிலீ த்ருடதர பரிரம்பண விபவ விரோதித விகட வீரவ்ரண!
இத்தகைய பெரும்பூசலைக் காணக் காத்துக்கிடந்த பிராட்டி பேரானந்தத்தோடு உன்னைத் தழுவி, உன் வீர வ்ரணங்களுக்குத் தன் உஷ்ணமான மார்பினால் வேதுகொடுத்து ஆற்றினாள். ஜிதகாசியான பர்தாவை, வீரபத்னியாகிய ஸீதா பிராட்டி காடாலிங்கநம் செய்து ஆநந்தித்தாள்.

38. மாரீச மாயா ம்ருக சர்மபரிகர்மித நிர்பர தர்பாஸ்தரண !
மாரீசனுடைய மாயமான் தோலினால் உன் தர்ப்பாஸனத்தை நீ அழகுபடுத்திக்கொண்டாய்.
(ஸ்ரீமத் ராமாயணத்தில் மாரீசன் கொல்லப்பட்டான் என்று மாத்திரம் கூறப்பட்டிருக்கின்றது. ஸ்வாமி தேசிகன் இங்கு பிராட்டியின் மனதைக் கவர்ந்த அந்த மான் வடிவத்திற்குள்

மாரீசன் ப்ரவேசித்து அங்குமிங்கும் ஓடினான். பகவானால் அடிக்கப்பட்டபொழுது மாரீசன் இறந்தான். அவன் எடுத்து வந்த மாயசரீரம் கீழே விழுந்தது. அப்பொழுது பகவானுக்கு ஸீதை அபஹரிக்கப்பட்ட விஷயம் தெரியாததாகையால், அதை அவளுக்குக் காண்பிக்கலாம் என்று அந்த பொன் மயமான தோலை எடுத்துவந்தார். இளையபெருமாள், பின் பாவது அதை ஸீதைக்குக் காண்பிக்கலாம் என்கிற எண் ணத்துடன் அதை விட்டெறியாமல் கூடவே எடுத்துவந்தார். ஆதலால், அது பகவானுக்கு ஆஸனமாயிருக்கும்படியான பாக்யம் பெற்றது எனப்பட்டதாயிற்று. இங்கு "மாயாம்ருக" என்ற பதம் பொய் - மித்யை என்பதைச் சொல்லவில்லை. "ஆச்சர்யமானது" என்பதையே சொல்லுகிறது என்பதை இப் பதங்களினால் விளக்கப்பட்டதாயிற்று. ராமனால் அடிபட்ட மாரீசனுடைய ஆத்மா அந்த சரீரத்தைவிட்டு வெளிக்கிளம்பி சென்றது என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறதேயன்றி, மறைந்து விட்டது என்று கூறப்படவில்லை).

39. விக்ரம யசோலாப விக்ரீத ஜீவித க்ருத்ரராஜ தேஹ திதக்ஷா லக்ஷித பக்த ஜந தாக்ஷிண்ய !

புகழுடம்புக்காக இந்த பூத உடம்பை விட்ட ஜடாயுவை நீ எடுத்து ஸம்ஹரித்தாய். (பக்தர்களின் கருத்தரிந்து கார்யம் செய்பவன் - பக்தர்களின் பங்காளன் ஸ்ரீராமன் என்று உல கம் புகழ்கிறது. பக்தர்கள் விஷயத்தில் தாராளமான மனதை யுடையவன்).

40. கல்பித விபுதபாவ கபந்தாபிநந்தித !

கபந்தன் உன்னால் தேவத்தன்மைபெற்று உன்னை வாழ்த் திப்போனான்.

41. அவந்த்ய மஹிம முனிஜன பஜன முஷித ஹ்ருதய கலுஷ சபரீமோக்ஷ ஸாக்ஷிபூத !

(சபரிக்கு ஆசார்ய ஸம்பந்தம் இருந்ததால்) பழுதற்ற பெரு மைகளையுடைய ஆசார்யர்களின் ஆச்ரயணத்தால் அஜ்ஞா னம் நீங்கப்பெற்ற சபரி மோக்ஷம் புக, அதற்கு நீ ஸாக்ஷியாக விளங்கினாய்.

(சபரி மோக்ஷமடைந்ததற்கு பகவான் காரணமல்லன். ஆசார் யர்களின் அனுக்ரஹத்தினால் அது கிட்டும் என்பதை லோகத் திற்கு வெளியிட்டார் என்பதை "ஸாக்ஷிபூத" என்கிறார்.

பகவானிடத்தில் நாம் ஒன்றும் யாசிக்கமாட்டோம். பாகவ தர்களின் அனுக்ரஹமே போதும் என்றும், ஆசார்யனைத் தவிர வேறு தெய்வம் இல்லை என்றும் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அருளிச்செய்திருப்பதை இங்கு அநுஸந்திக்கவும்).

## கிஷ்கிந்தாகாண்டம்

42. ப்ரபஞ்ஜந தநய பாவுக பாஷித ரஞ்ஜித ஹ்ருதய!
வாயுபுத்ரனின் (ஆஞ்சநேயன்) விசித்ர வார்த்தைகளினால் வசீ கரிக்கப்பெற்ற ஸ்ரீராம! (பாவுகன் - ரஸிகன் - ஹநுமான்)

43. தரணிஸுத சரணாகதி பரதந்த்ரீக்ருத ஸ்வாதந்த்ரிய !
ஸூர்யபுத்ரனான ஸுக்ரீவனைச் சரணடைந்த நீ, சொந்தமான ஸ்வாதந்த்ரியத்தை அவனிட்ட வழக்காக்கினாய்.

44. த்ருட கடித கைலாஸகோடி விகட துந்துபி கங்காள கூட தூர விக்ஷேப தக்ஷ தக்ஷிணேதர பாதாங்குஷ்ட தரசலன விச்வஸ்த ஸுஹ்ருதாசய!
கைலாய மலைச்சிகரம் போல் சிதறிக்கிடந்த துந்துபியின் எலும்புக்குவியலை உன் இடப்பாதத்தின் கட்டை விரலால் ஓச்சி, ஸுக்ரீவனின் (குரங்குபுத்தி) மனச்சஞ்சலத்தைப் போக்கினாய்.

45. அதிப்ரதுல பஹுவிடபி கிரிதரணி விவரயுகபதுதய விவ்ருத சித்ரபுங்க வைசித்ர்ய!
மிகப்பெரிய மலைகள், மரங்கள், பூமி இவைகளூடே ஒரே ஸமயத்தில் ஊடுருவிப்பாயவல்ல பாணப்ரயோக லாவகத்தை உடையவன் நீ.

46. விபுல புஜ சைலமூல நிபிட நிபீடித ராவண ரணரணக ஜநக சதுருததி விஹரண சதுர கபிகுலபதி ஹ்ருதய விசால சிலா தல தாரண தாருண சிலீமுக!
வாலிவதம் - மலைபோன்ற தன் கைகளின் கீழே அகப்பட்ட ராவணனைக் கசக்கிப் பிழிந்து - நான்கு கடல்களையும் ஒரே ஸமயத்தில் தாண்டவல்ல வாலியையும் அவனுடைய கல் போன்ற அகன்ற மார்பில் ஒரு பாணம் விடுத்து வீழ்த்தினாய் நீ.

## ஸுந்தரகாண்டம்

**47. அபார பாராவார பரிகா பரிவ்ரத பரபுர பரிஸ்ருத தவதஹந ஜவந பவநபவ கபிவர பரிஷ்வங்க பாவித ஸர்வஸ்வதாந!**

எல்லையற்ற கடல் சூழ்ந்த லங்கையில் தீ மூட்டினார் அநுமான். அதற்காக அவரை கட்டித்தழுவி "இதுதான் நான் கொடுக்கக்கூடியவற்றுள் தலைசிறந்த பரிசு" என்று மொழிந்தாய்.

## யுத்தகாண்டம்

**48. அஹித ஸஹோதர ரக்ஷ: பரிக்ரஹ விஸம்வாதி விவித ஸசிவ விஸ்ரம்பண ஸமய ஸம்ரம்ப ஸமுஜ்ரும்பித ஸர்வேஶ்வர பாவ!**

சத்ருவின் ஸஹோதரநான விபீஷணன் வந்தபோது அவனைக் கூட்டிக்கொள்ளும் விஷயத்தில் வானரமுதலிகள் பலர் பலவாறு பேசப்புக, அப்போது நீ பேசின உன் பேச்சு ஸர்வேச்வரத் தன்மையைக் காண்பிக்கும் விதமாக இருந்தது.

தன்னுடைய நெருக்காத நீள்வ்ரதமான அஞ்சேல் என்று அருள் கொடுக்கும் அபயப்ரதானத்திற்கு பங்கம் ஏற்படும் படி இருந்த அளவில் பரத்வத்தை வெளியிட்டான் ஸ்ரீராமன். தயையின் மிகுதியால் அவனையும் விஞ்சிப் பரம ரஹஸ்யமான சரமச்லோகம் வெளியிடப்பட்டதன்றோ ! இதை ஸ்வாமி தேசிகன் "தயாகும்பேந விஸ்ரம்பித:" என்று தாமே அநுஸந்தித்துள்ளார். ஸ்ரீராமன் தான் தசரதன் பிள்ளையாகிய ஸாமான்யமான மனிதன்தான் என்று கூறினாலும், அவனுடைய பரத்வம் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

**49. ஸக்ருத் ப்ரபந்ந ஜன ஸம்ரக்ஷண தீக்ஷித !**

ஆகையால் "உமதடிகள் அடைகின்றேனே" என்று ஒருதடவை உரைத்தவரை, எக்காலமும் விடாத வ்ரதம் பூண்டவன் நீ என்றதாகிறது.

**50. வீர !**

இதுவன்றோ வீரனுக்கு உரிய லக்ஷணம்?

(Justifies the title given to this stotram by Swami Desikan)

51. ஸத்யவ்ரத!
இதுவன்றோ உறுதியான வ்ரதாநுஷ்டானம்?

52. ப்ரதிசயன பூமிகா பூஷித பயோதி புளிந!
வெண்மணல் கொண்ட கடற்கரையில் தர்ப்பசயனத்தில் உன் இடையழகு காணவேண்டுமே!

53. ப்ரளய சிகி பருஷ விசிக சிகா சோஷிதா கூபார வாரிபூர!
(அந்த நிலையிலும் சமுத்ரராஜன் வந்து முகம் காட்டாமையால்) நீ ப்ரளயகால அக்னிக்கு ஒப்பான அம்புகளினால் அதனை வற்ற அடித்து வெறும் காடாக்கினாய்.

54. ப்ரபல ரிபு கலஹ குதுக சடுல கபிகுல கரதல தூளித ஹ்ருத கிரிநிகர ஸாதித ஸேதுபத ஸீமா ஸீமந்தித ஸமுத்ர!
எப்பொழுது பெரும் யுத்தமிடப்போகிறோம் என்று எதிர்நோக்கிக்கொண்டிருந்த வாநரப்படைகள் கையிலேந்திக்கொணர்ந்து குவித்த மலைகளாலே கடலின் நடுவில் வகிடுவாருவதுபோல் ஸேதுவைக் காட்டிவைத்தாயே.

55. த்ருதகதி தருமருத வருதிநீ நிருத்த லங்காவரோத வேபது லாஸ்ய லீலோபதேச தேசிக தநுர்ஜ்யாகோஷ!
வானரஸேனை லங்கையை முற்றும் முற்றுகையிட அங்குள்ள அந்தப்புரத்துப் பெண்கள் உடல்கள் நடுக்கத்தினால் அப்போது நாடகமாடுவதை மேன்மேலும் உபதேசிக்கவல்லதாக இருந்தது உமது தநுஸ்ஸின் டங்கார ஒலி.

56. ககந சர கநககிரி நிகமமய நிஜகருட கருதநில லவ களித விஷ வதந சர கதந!
பிறகு நீயும் உன்னைச் சேர்ந்தவரும் நாகபாசத்தால் கட்டுண்டு கிடக்க, அப்போது எங்கோ ஆகாயத்தில் தங்கமலை உருண்டோடி வருவதுபோல் கருடன் தோன்றித் தன் இறகுகளின் வேகத்தில் வீசும் பங்கியினாலேயே விஷமெல்லாம்போகும்படி உபகரித்தார்.

57. அக்ருதசர வநசர ரணகரண வைலக்ஷ்ய கூணிதாக்ஷ பஹுவித ரக்ஷோ பலாத்யக்ஷ வக்ஷ: கவாட பாடந படிம ஸாடோப கோபாவலேபா!

இதற்கு முன் கண்டறியாத குரங்குகள் யுத்தத்தைக்கண்டு வெட்கிப்போன பலபல ராக்ஷஸத்தலைவர்களின் மார்பாகிய கவாடம் பிளந்திட மிகவும் முனிந்தவனே! ஸ்ரீராம ! ஜெய விஜயீபவ !

58. கடுரடத் அடநி டங்க்ருதி சடுல கடோர கார்முக விநிர்கத விசங்கட விசிக விதாடந விகடித மகுட விஹ்வல விச்ரவஸ்த நய விச்ரம ஸமய விச்ராணன விக்யாத விக்ரம!
கேட்போர் காதுகிழிய டங்காரம் செய்கிற கோதண்ட வில் வல வா! நீ விளங்குவாயாக. இத்தகைய பெரும் போரிலும், இராவணனின் மகுடமாத்ரத்தைப் பங்கம் செய்து உயிரை வைத்து ஓடிப்போ என்று விட்ட உன்னுடைய உதாரகுணத்தை உலகமே புகழ்கிறது.

59. கும்பகர்ண குலகிரி விதளந தம்போளி பூத நி:சங்க
கும்பகர்ணன் எனும் பெரும் மலையைப் பிளந்திட்ட வஜ்ரம் எனும்படியான அம்புகளைப் படைத்தவன் நீயே!

60. அபிசரண ஹுதவஹ பரிசரண விகடந ஸரபஸ பரிபதத் அபரிமித கபிபல ஜலதிலஹரி கலகலரவகுபித மதவ ஜிதபி ஹநந கதநுஜ ஸாக்ஷிக ராக்ஷஸ த்வந்த்வயுத்த!
சத்ருக்களை வெல்லவேண்டி அபிசாரயாகத்தை இந்த்ரஜித் செய்திட, அதை அறிந்து லக்ஷ்மணன் வானரஸேனைகளோடு சென்று விலக்க, அப்போது கடல் கலந்ததுபோல இருவரும் கை கலக்க, இவர் அவனைக் கொன்றார். அப்படி எதற்கும் இளையாத இளையபெருமாள் ஸாக்ஷியாகப் பார்த்துக் கொண்டிருக்கும்போதே நீ (இரண்டாம் தடவையாக) தனித்து லக்ஷக்கணக்கிலான ராக்ஷஸர்களுடன் த்வந்த்வயுத்தம் செய் தாய்.

61. அப்ரதி த்வந்த பௌருஷ!
இணையற்ற பராக்ரமமுடையவனே!

62. த்ரம்பக ஸமதிக கோராஷ்ட்ராடம்பர!
சிவனைவிட மேம்பட்ட பாணப்ரயோக லாவகத்தை உடைய வனே!

63. ஸாரதி ஹ்ருத ரத ஸத்ரப சாஸ்த்ரவ ஸத்யாபித ப்ரதாப!

தேரோட்டுபவனின் ஸாமர்த்யத்தாலே தப்பியோடிய எதிரியான ராவணனின் வாயாலேயே நீ புகழ்பெற்றாய்.

64. சித சர க்ருத லவந தசமுக மு தசக நிபதந புநருதய தரகலித ஜனித தர தரள ஹரிஹயநயந நளிநவந ருசிகசித கதல நிபதித ஸுரதரு குஸும விததி ஸுரபித ரதபத!

கூரிய பாணத்தினால் ராவணனின் பத்து தலைகளையும் ஒரு கொத்தாக உரித்தாய். ஆனாலும் (வரபலத்தினால்) அவை மீண்டும் உண்டாயின. இவ்விதம் மீண்டும் மீண்டும் நடந்தது. இதனால் இந்த்ரனின் ஆயிரம் கண்களிலும் மாறிமாறி பயமும், நம்பிக்கையும் தெரிந்தன. கடைசியில் முடிவாக ராவண ஸம்ஹாரமானபோது, இந்த்ரனின் கண் தாமரை ஆயிரமும் அகல ஆச்சர்யத்தால் விரிய, அந்த ஒளியுடன் சேர்ந்த கற்பகத் தருவின் பூக்கள் நீ செல்லும் இடங்களிலெல்லாம் சிந்தின.

65. அகில ஜகததிக புஜபல வரபல தசலபந தசக லவந ஜநித கதந பரவச ரஜனிசர யுவதி விலபந வசந ஸமவிஷய நிகம சிகர நிகர முகர மு முநிவர பரிபணித!

உலகத்தையே ஆட்டிவைத்த புஜபல வரபல மிகுதியை உடைய ராவணனின்தலைகள் பத்தும் கீழே வீழ்த்தப்பட்டதைக்கண்ட அவன் மனைவி மண்டோதரி புலம்பி அழுதபோது, நீ எம்பெருமான் என்பதை நன்கு கண்டு காண்பித்தாள். மஹர்ஷிகளும் அங்கே கூடி, அவ்வாறே உன்னை ஏத்தித் தொழுதார்கள்.

66. அபிகத சதமக ஹுதவஹ பித்ருபதி நிர்ருதி வருண பவந தநத கிரிசமுக ஸுரபதி நுதிமுதித!

எட்டு திசைகளின் பாலகர்களும், மற்ற தேவர்களும் உன்னை அப்போது வந்து வாழ்த்தினார்கள்.

67. அமித மதி விதி விதித கதித நிஜ விபவ ஜலதி ப்ருஷதலவ!

தேவ ச்ரேஷ்டனான நான்முகனும் உன் பெருமைக்கடலில் சிறிதே அறிவார். அறிந்ததிலும் சிறிதே பேசுவார்.

68. விகதபய விபுத பரிப்ருட விபோதித வீரசயந சாயித வானர ப்ருதநௌக!

அப்போது தேவர்களும் பயங்கெட்டுத் தேறி உனக்கு ப்ரத்யு பகாரமாக மாண்ட வானர வீரர்களை மீண்டும் உயிர்பெற்று எழச்செய்தார்கள்.

69. ஸ்வ ஸமய விகடித ஸுகடித ஸஹ்ருதய ஸஹதர்ம சாரிணீக!
தங்களுக்குள் ஏற்பட்ட ஓர் உடன்படிக்கையின்படி முன்பு பிரிந்த ப்ரியதமையான பிராட்டியும், நீயும் இப்பொழுது பழை யபடியே கூடினீர்கள். திவ்ய தம்பதிகளின் பிரிவு மற்றை யோரால் ஏற்படுத்தப்பட்டதல்ல. தாங்களே தங்களுக்குள் ஆடிய நாடகமாகும்.

70. விபீஷண வசம்வதீக்ருத லங்கைச்வர்ய!
விபீஷணாழ்வான் வசத்தில் இப்பொழுது உன்னால் லங்கைச் வர்யம் அடங்கலும் ஒப்படைக்கப்பட்டது.

71. நிஷ்பந்ந க்ருத்ய!
இப்பொழுதுதான் நீ அவதரித்த கார்யம் தலைகட்டிற்று.

72. கபுஷ்பித ரிபுபக்ஷ!
சத்ருக்களையும் கிழங்கெடுத்தாயிற்று.

73. புஷ்கரபஸ கதி கோஷ்பதீ க்ருத ககநார்ணவ!
ஸ்ரீபரதாழ்வானைக் காணவேண்டி கனவேகமாக விமானமேறி ஆகாயக்கடலை குளம்படியாக்கி நீ அயோத்திக்கு ஓடிவந் தாய்.

74. ப்ரதிஜ்ஞார்ணவ தரண க்ருதக்ஷண பரதமனோரத ஸம்ஹித ஸிம்ஹாஸநாதிரூட!
தனது கடும் வ்ரதமாகிய கடலைக்கடந்து கரையேறி, ஸ்ரீபரதனுடைய மநோரதம் நிறைவேற, நீ சிங்தாசனமேறினாய்

75. ஸ்வாமிந்! ஹே, ஸர்வலோக ஈச்வர!

76. ராகவஸிம்ஹ ! ஹே, ரகுகுலதிலகமே!

## உத்தரகாண்டம்

77. ஹாடக கிரிகடக லடஹ பாதபீட நிகட தட பரிலுடித நிகில ந்ருபதி கிரீட கோடி விவித மணிகண கிரண நிகர நீராஜித சரண ராஜீவ!
நீ சிங்காஸனத்திலிருந்து உலக கார்யம் ஆராய்ந்தருளும் போது, மேருவின் மலைச்சாரல் என மிகவும் அழகிய உன் பொற்றாமரை அடிகளில் தலை பதித்து வணங்கிய ராஜ ராஜர்களின் கிரீட மணி ஒளிகள், அவற்றிற்கு ஆலத்தி வழிந்தாற்போல இருந்தன.

78. திவ்யபௌமா அயோத்யாதிதைவத!
இவ்விதம் விண்ணிலும், மண்ணிலும் இரு அயோத்திகளை யும் நீ ஆண்டாய்.

79. பித்ருவத குபித பரசுதர முநி விஹித ந்ருபஹநந கதந பூர்வ கால ப்ரபவ ப்ரதிஷ்டாபித தார்மிக ராஜவம்ச!
தன் தகப்பனாரைக்கொன்ற கார்த்தவீர்யார்ஜுனன் திறத்தில் கொண்ட கோபத்தினால் பரசு(ராம)முனிவன் அழித்திட்ட தார் மிக ராஜ வம்சங்களை முன்னிலும் நூறுமடங்கு தழைக்கும் படி இந்த ராமனாகிய நீ செய்தாய்.

80. சுப சரித ரதபரத கர்வித கர்வ கந்தர்வ யூத கீத விஜய காதா சத!
பரமதார்மீகனான ஸ்ரீபரதாழ்வான் மிக்க கர்வங்கொண்ட கந் தர்வர்களை அடக்க, அதனால் புத்திவந்த அவர்கள், உன் புகழை உள்ளவாறு கண்டு பாடிப்போயினர்.

81. சாஸித மதுஸுத சத்ருக்நஸேவித!
ஸ்ரீசத்ருக்னாழ்வான் மதுவின் பிள்ளையான லவணாஸுரனை வென்று உன்னிடம் விண்ணப்பித்தார்.

82. குசலவ பரிக்ருஹீத குல காதா விசேஷ!
இக்ஷ்வாகு வம்ச சரிதமான ஸ்ரீமத் ராமாயண கதையை உன் திருக்குமாரர்களான லவகுசலர்களாலே நன்கு பாடிக் காண் பிக்கப்பெற்றது, உனது திருவோலக்கத்தில்.

83. விதிவச பரிணமதமர பணிதி கவிவர ரசித நிஜசரித நிபந்தந நிசமந நிர்வ்ருத!

நான்முகன் அருளினால் நாவினால் ஸம்ஸ்க்ருத கவிபாட வந்த வால்மீகி பகவான் அருளிச்செய்த உன் சரித்ரத்தைச் செவிமடுத்து உள்ளமெல்லாம் தாபம் தணிந்தாய்.

84. ஸர்வஜந ஸம்மாநித !
உலகமெல்லாம் கொண்டாட நின்றாய்.

85. புநருபஸ்தாபித விமாந வர விச்ராணன ப்ரீணித வைச்ரவண விச்ராவித யச: ப்ரபஞ்ச!
மீண்டும் புஷ்பகத்தை குபேரனுக்கே வழங்கி உகப்படைந்த அவனால் புகழ்பெற்றாய்.

86. பஞ்சதாபந்ந முநிகுமாரக ஸஞ்ஜீவநாம்ருத!
சம்புகமுனிவரின் தவற்றினால் மாண்டுபோன வேதியன் மகனை மீட்டுக்கொணர்ந்தாய்.

87. த்ரேதாயுக ப்ரவர்த்தித கார்தயுக வ்ருத்தாந்த!
த்ரேதாயுகத்தில் க்ருதயுக தர்மத்தை வரவழித்தவன் நீ.

88. அவிகல பஹுஸுவர்ண ஹயமக ஸஹஸ்ர நிர்வஹண நிவர்தித நிஜ வர்ணாச்ரம தர்ம!
ஸுவர்ண ஸீதையை தர்மபத்னியாகக்கொண்டு ஸ்வர்ண தக்ஷிணைகள் பூரிவழங்கி ஆயிரம் அயமேத யாகத்தை முடித்து உன் வர்ணாச்ரம கடனைத் தீர்த்தாய்.

89. ஸர்வ கர்ம ஸமாராத்ய!
(ஆனால் உண்மையில்) உலகிலுள்ள மற்றவர்களினால் தம் வர்ணாச்ரம தர்மங்களைக்கொண்டு நீ ஆராதிக்கத்தக்கவன்.

90. ஸநாதந தர்ம!
நீயே நிலைநிற்கும் சாச்வத தர்மஸ்வரூபி!

91. ஸாகேத ஜநபத ஜநி தநிக ஜங்கம ததிதர ஜந்து ஜாத திவ்ய கதிதாந தர்சித நித்ய நிஸ்ஸீம வைபவ!
நீ திருநாட்டுக்கு நடந்தபோது, அயோத்தியில் பிறந்து வளர்ந்த சராசரங்கள் (புல்பூண்டுகள் உட்பட) முற்றவும் நற்கதியை அடைந்தன. உன் ஸர்வேச்வர பாவத்தை வெளிப்படுத்தினாய்.

92. பவ தபந தாபித பக்த ஜந பத்ராராம!
ஸம்ஸார தாபம் தாங்காமல் தவிக்கும் உன் அன்பர்களுக்கு நீ எப்பொழுதும் தண்மையான பூங்காவாக விளங்கினாய்.

93. ஸ்ரீ ராமபத்ர!
இப்படி பத்ராராமனான நீ, தலைகீழாக ராமபத்ரன் என்றும் அழைக்கப்பெறுகிறாய்.

94. நமஸ்தே புநஸ்தே நம:
உன்னை வணங்குகிறேன், பலகாலும் வணங்குகிறேன்.

சதுர்முகேச்வர முகை: புத்ரபௌத்ராதி சாலிநே ।
நம: ஸீதா ஸமேதாய ராமாய க்ருஹமேதிநே ॥

அயனும் அரனும் உனக்கு பிள்ளை பேரன்களாக பிராட்டி ஜானகியாருடன் பெரும் குடும்பியான உனக்குப் பல ப்ரணாமங்களைச் செய்கிறேன். இவ்விதம் ராமாவதாரம் எடுத்த பகவானே பரப்ரஹ்மம் என்று வெளியிட்டருளியபடி.

கவிகதகஸிம்ஹ கதிதம் கடோர ஸுகுமார கும்பகம்பீரம் ।
பவபயபேஷஜம் ஏதத் படத மஹாவீர வைபவம் ஸுதிய: ॥

சக்ரவர்த்தித்திருமகனுடைய பரத்வ ஸௌலப்யங்கள் கூடின ப்ரபாவத்தை ப்ரதிபாதிக்கும் இந்த ஸ்துதியும் கடோரஸுகுமார கும்பகம்பீரமாயிருக்கும். இந்த ஸ்தோத்ரம் ஸம்ஸார பயத்திற்கு உத்தமமான மருந்து. மென்மையும்கடினமும் கலந்த கருத்தையுடைய இந்த மஹாவீர கத்யத்தைக் கற்று தேர்ச்சிபெறுங்கள். கவிதார்க்கிக கேஸரியான (ஸ்வாமி தேசிகனால்) பிறவி நோய்க்கு அருமருந்தாக இருக்கவேணுமென்றே இயற்றப்பட்டது இந்த ஸ்துதி.

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ॥

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:



ஸ்ரீ:

# ஸ்ரீபரமார்த்த ஸ்துதி

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

உத்தம புருஷார்த்தமான கைங்கர்யத்தை, அதாவது ப்ரபந்நன் இங்கிருந்த நாள் ஸம்பவிக்கும். பகவதநுபவாதிகளையும் தேஹ வியோகத்திற்குப் பிறகு ஏற்படக்கூடிய மோக்ஷாநுபவாதிகளையும் ப்ரதிபாதிக்கிறபடியால் இத்திருநாமம் ஸ்வாமி தேசிகனாலேயே சூட்டப்பட்ட ஸ்தோத்ரம். பரமார்த்தங்கள் என்பதற்கு சிறந்த பொருள்கள் என்ற பொருள். ஸ்ரீமத் ராமாயணத்தில் உள்ள பரமார்த்தங்களை இங்கு ஸ்வாமி உணர்த்துகிறார்.

ஸீதாதேவியைத் தேடிவந்த ஸ்ரீராமனைக்கண்ட ஜடாயு "ஆயுஷ்மந்" சிரஞ்ஜீவி என்றழைக்கிறான். இந்த மங்களாசாஸனத்தின் பலனாய் ராமன் தன் பிராணனை விடவேண்டும் என்று முயன்றும் அவனால் முடியாது போயிற்று. மஹான்களுடைய மங்களாசாஸனத்தினால் எம்பெருமானுக்கு மஹிமை உண்டாயிற்று. ராம கார்யத்தில் ஈடுபட்ட ஜடாயு என்ற பறவை உயிர் இழந்ததால் ஸ்ரீராமன் தனது தனித்தன்மையால் பறவையை வைகுந்தத்திற்கு அனுப்பிவைத்தான். மேலும் அதன் திருமேனிக்கே அந்திம சடங்கினை நடத்தினான். ஜடாயுவின் ஸம்ஸ்காரம் நடந்த இடம் திருப்புட்குழி (என்ற கலியன் பாடிய) பாடஸ்தலம். பெரியதிருமடலில் இத்தலத்து எம்பெருமானை "போரேறு" என்று மங்களாசாஸநம் செய்தருளுகிறார். பெருமாள் திருநாமம் விஜயராகவன், வீற்றிருந்த திருக்கோலம். ஜடாயுவிற்கு ப்ரத்யக்ஷம். ஜடாயுதீர்த்தம். ஸ்வாமி தேசிகன் பெருமாள் திருநாமத்தை ஸம்ஸ்க்ருதத்தில் "ரணபுங்கவன் - ஸமரபுங்கவன் - ஆஹவபுங்கவன்" என்று இந்த ஸ்தோத்ரத்தில் அருளிச்செய்திருக்கிறார். இவ்வெம்பெருமான் விஷயமாக 9 ச்லோகங்களும், பலச்ருதியாக ஒரு ச்லோகமும் ஆக 10 ச்லோகங்கள் அடங்கியது. இந்த ஸ்தோத்ரம் பகவான் சதுர்வித புருஷார்த்த ப்ரதன்; ஸாக்ஷாத் சத்ருவாய் இருந்தாலும் ரக்ஷிப்பவன் என்கிற அவனுடைய வ்ரதமும், கைங்கர்ய ப்ரார்த்தனையும் கூறப்பட்டுள்ளன. பலச்ருதியில் இந்த ஸ்தோத்ர திருநாமத்தை ப்ரஸ்தாபித்து, இது ப்ரபன்னர்களினால் அனுதினமும் அனுஸந்தேயம் எனப்பட்டிருக்கிறது.

ஸ்ரீமத் க்ருத்ர ஸரஸ்தீர பாரிஜாதம் உபாஸ்மஹே ।
யத்ர துங்கைரதுங்கைஸ்ச ப்ரணதைர் க்ருஹ்யதே பலம் ॥1

பகவான் பாரிஜாத வ்ருக்ஷம்போல் ஸகல பலன்களையும் கொடுப்பவன். ஸ்ரீஜடாயு புஷ்கரிணியின் கரையில் பாரிஜாதம் என விளங்கும் ஸ்ரீவிஜயராகவப் பெருமாளை உபாஸிக்கிறோம். இதற்குக் காரணம் இங்கு பெரியோர்களாயினும் சரி, சிறியோர்களாயினும் சரி வணங்கினவர்களால்தான் பலம் பெறமுடியும்.

குருபிஸ் த்வதனந்ய ஸர்வ பாவை:
குணஸிந்தௌ க்ருத ஸம்ப்லவஸ்த்வதீயே ।
ரணபுங்கவவந்திபாவ மிச்சந்
அஹமஸ்மி ஏகம் அநுக்ரஹாஸ்பதம் ॥ 2

ஸ்ரீராம (ocean of virtues) உன்னையே வேண்டுகின்ற ஆசார்யர்களால் உமது குணக்கடலில் நான் அமிழ்த்தப்பட்டேன். ரணபுங்கவனே! உன்னைத் துதிக்க நினைக்கிறேன். நீ என்னை பரிபூரணமாக அநுக்ரஹிப்பாயாக.

புவனாச்ரய பூஷணாஸ்த்ர வர்கம்
மனஸி த்வந்மயதாம் மமாதனோது ।
வபுராகவபுங்கவ த்வதீயம்
மஹிஷீணாம் அநிமேஷ தர்சனீயம் ॥ 3

உலகங்களுக்கெல்லாம் ஆதாரமான திருவாபரணம், அஸ்த்ரம் முதலியன ப்ரகாசிக்கும் திருமேனி, அடியேனுடைய மனதில் அவ்வண்ணமே ஸேவை ஸாதிக்கவேண்டும். ஆஹவபுங்கவனே! உனது திருமேனி பாங்குபட்ட மஹிஷிகள் கண்கொட்டாமல் பார்க்கும் பாங்குடையதன்றோ?

அபிரக்ஷதும் அக்ரத: ஸ்திதம் த்வாம்
ப்ரணவே பார்த்தரதே ச பாவயந்த: ।
அஹிதப்ரசமைரயத்ந லப்யை:
கதயந்த்யாஹவ புங்கவம் குணக்ஞா: ॥ 4

குணக்ஞா: - ஆழ்வார்கள்

எம்மைக் காக்கவென்றே அர்ஜுனனுடைய தேர்த்தட்டிலும்,

ப்ரணவத்திலும் முன்னால் வீற்றிருக்கும் உன்னைப் பயிலும் குணக் ஞானமுள்ள பெரியோர்கள் மிகச் சுலபமாக நீ சத்ரு நிரஸநம் செய்வதுபற்றி உன்னைப் “போரேறு” (யுத்தத்தில் பயமின்றிப் புகும் காளை) எனப் போற்றுகிறார்கள்.

ஸ்ரீராமாயணத்திலும் “அக்ரத: ப்ரயயௌ ராம” என்று முன்னால் சென்றவன் என்று வால்மீகி பகவானும் அருளியுள் ளார். கலியனும் பெரியதிருமடல் 117ல் உன்னைப் “புட்குழியெம் போரேற்றை” என்று கூறியுள்ளார்.

கமலா நிரபாய தர்மபத்நீ
கருணாத்யா: ஸ்வயம் ருத்விஜோ குணாஸ்தே ।
அவநம் ஶ்ரயதா மஹீந மாத்யம் -
ஸசதர்மஸ்த்வதநந்ய ஸேவநீய: ॥ 5

சரணாகத ஸம்ரக்ஷணம் என்பது புராதனமான அஹீநம் என்கிற புண்ய யாகம். அதை நீ ஒருவனே செய்திடக்கூடும். இறை யும் அகலாத பிராட்டியே உனக்கு அதில் தர்மபத்நீ. கருணை முதலிய உன் கல்யாண குணங்களே, அதைத் தாமே முன்வந்து நடத்திவைக்கும் ரித்விக்குகள்.

க்ருபணா: ஸுதிய: க்ருபா ஸஹாயம்
சரணம் த்வாம் ரணபுங்கவ ப்ரபந்நா: ।
அபவர்கம் நயாதநந்ய பாவா:
வரிவஸ்யா: ரஸம் ஏகமாத்ரியந்தே ॥ 6

க்ருபணர்களாயும், உம்மிடம் விச்வாஸமுடையவர்களாய், புத்திசாலிகளாய் உள்ளவர்கள் கருணையை ஸஹாயமாயுடைய உம்மை சரணமடைந்தனர்கள். அபவர்கம் (மோக்ஷம்) தவிர மற் றதை வேண்டாதவர்கள் நல்ல நிலையை அடைந்து வேறு எதி லும் கருத்தில்லாதவர்களாய் ரஸமான கைங்கர்யத்தையே ஆத ரிக்கின்றனர். ரக்ஷகன் நீதான். அடையப்படவேண்டிய இடமும் நீதான். அதனால்தான் உன்னைச் சரணமடைந்தனர். உன்னைத் தவிர போக்கற்று நிற்கும் நிபுணர்கள், கமலையாகிய கருணை யுடன் கூடின உன்னைச் சரணடைந்து மோக்ஷலோகத்தில் போல் இந்த உலகிலும் பரமைகாந்திகளாக உன் கைங்கர்யம் செய்து உகக்கவே விரும்புகிறார்கள்.

அவதீர்ய சதுர்விதம் புமர்தம்
பவதர்தே விநியுக்த ஜீவித: ஸந் ।
லபதே பவத: பலாநி ஜந்து:
நிகிலாந்யத்ர நிதர்சநம் ஜடாயு: ॥ 7

ஜடாயு எதையும் எதிர்பார்க்கவில்லை. எம்பெருமானுக்கு கைங்கர்யத்தில் ஈடுபட்டார். நான்கு புருஷார்த்தங்களையும் லக்ஷ்யம் பண்ணாமல் உமக்காகவே தன்னை அர்ப்பணம் செய்தார். தம்முடைய ஆத்மார்பணம் செய்தவர்கள் உம்மிடமிருந்து ஸ்வயமாகவே கிடைக்கும் பயன்களைப் பெறுவர்.

சரணாகத ரக்ஷண வ்ரதீ மாம்
ந விஹாதும் ரணபுங்கவ அர்ஹஸித்வம் ।
விதிதம் புவநே விபீஷணோவா
யதிவா ராவண இத்யுதீரிதம்தே ॥ 8

ஸ்ரீமத் ராமாயணத்தில் சரணாகதிதான் பரம தர்மமாகக் கூறப்பட்டது. சரணாகத வேதம் என்றே ராமாயணத்தைக் கூறினார் ஸ்வாமி தேசிகன். வந்தவன் விபீஷணனாக இருந்தால் என்ன? ராவணனாக இருந்தால் என்ன? தஞ்சம் என்று அடைந்த பிறகு அவனுக்கு அபயம் அளிக்கப்பட்டது உன்னால். 'யதிராவண' என்பது எம்பெருமானின் திடமான ஸங்கல்பத்தைக் காட்டுகிறது. நீ வாக்கு தவராதவன். தஞ்சமடைந்தவரை ரக்ஷிப்பதையே வ்ரதமாகக் கொண்டவன். என்னை மட்டும் எவ்வாறு உன்னால் விடமுடியும். உமது வார்த்தையை உலகமெல்லாம் அறியும்.

O! Ranapungava, (ரணவீரனே!) you cannot abondon me who has surrendered at your feet, as you have vowed to protect all those who seek refuge in you.

புஜகேந்த்ர கருத்மதாதி லப்யை:
த்வதநுஜ்ஞாநுபவ ப்ரவாஹ பேதை: ।
ஸ்வபதே ரணபுங்கவ ஸ்வயம் மாம்
பரிசர்யா விபவை: பரிஷ்க்ரியேதா: ॥ 9

ஆதிசேஷன், பெரியதிருவடி முதலியவர்களுக்கே கிடைக்கக்கூடியதும், உன் அனுமதியால் வந்தவையும், அநுபவப்பெருக்குகளையுடையதுமான கைங்கர்யத்தை உமது ஸ்தானத்தில் தேவ

ரீரே அடியேனை சிறப்பிக்கவேண்டும்.

விமலாசய வேங்கடேச ஜந்மா
ரமணீயா ரணபுங்கவ ப்ரஸாதாத் ।
அநஸூயுபிராதரேண பாவ்யா
பரமார்த்த ஸ்துதிரந்வஹம் ப்ரபந்நை: ॥ 10

கல்மஷமல்லாத மனதையுடைய வேங்கடேசனிடம் தோன்றியது இந்த ஸ்தோத்ரம். பகவதநுக்ரஹத்தால் மிகவும் அழகானது. அஸூயையின்றி இத்துதியை ஆதரித்து அநுபவியுங்கள். இந்த பரமார்த்த ஸ்துதியை ப்ரபன்னர்கள் தினந்தோறும் பாராயணம் பண்ணவேண்டும். இதைப்பாராயணம் செய்து ரணபுங்கவனான விஜயராகவனின் அருளைப்பெற்று பெருமையோடு ப்ரபந்நர்கள் விளங்கட்டும்.

இவ்வண்ணம் பரமார்த்த ஸ்துதி அபூர்வமானதொரு ஸங்க்ரஹராமாயணம் என்பதை விண்ணப்பித்துக்கொண்டு ஸ்ரீவிஜயராகவ பட்டாபிஷேகத்துடன் இந்த ஸ்துதியைத் தலைக்கட்டுகிறார்.

கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ॥



ஸ்ரீ:

# ஸ்ரீகாஞ்சீ

சதுர்முக ப்ரம்மா செய்த யாகத்திற்கு உகந்து எம்பெருமான் வரம் தந்தார். அதனால் எம்பெருமான் வரதராஜன் என அழைக்கப்படுகிறான். ப்ரம்மாவினால் - க - அஞ்சிதம் - பூஜிக்கப்பட்டதால் காஞ்சி என்ற பெயர் எனப் புராணம் கூறுகிறது. இந்தக் காரணத்தினால் இந்த தேவப்பெருமாள் வரப்ரஸாதி எனக் கருதப்படுகிறார்.

தொண்டைநாட்டு 22 திருப்பதிகளில் காஞ்சிபுரத்திலேயே உள்ளவை 14. ஆழ்வார்களால் பாடப்பட்ட இவைகளில் இரண்டு சைவ வழிபாடுகள் உள்ள கோவில்களின் உள்ளே இருப்பதால் பாஞ்சராத்ர / வைகானஸ ஆகமங்களால் ஆராதிக்கப்படாதவை. (நிலாத்திங்கள் துண்டம் மற்றும் கள்வனூர்)

அத்திகிரி என்கிற திவ்யதேசத்து எம்பெருமான் திருநாமம் வரதராஜன், பேரருளாளன், தேவாதிராஜன், தே(வ)ப்பெருமாள். மேற்கு நோக்கி திருமுகமண்டலம். அநந்த ஸரஸ் எனும் புஷ்கரிணியுள் அத்திவரதர் (அத்திமரத்தால் ஆன சிலை) அமிழ்ந்திருக்கிறார்.

ஸ்ரீரங்கம் (கோயில்), திருமலை, காஞ்சீ (பெருமாள்கோயில்) என்று ஸ்ரீவைஷ்ணவஸம்ப்ரதாயத்தில் திவ்யதேசங்களுள் முதல் மூன்றாக சொல்வது வழக்கம். காஞ்சியை த்வயம் விளங்கும் திருப்பதி என்றும் நம் ஸம்ப்ரதாயத்தில் சொல்வார்கள். ஸ்ரீகாஞ்சி நகரம் நினைத்த மாத்ரம் முக்தியைக் கொடுக்கவல்லது. ப்ரம்மாவின் நியமனத்தால் விச்வகர்மாவால் நிர்மாணிக்கப்பட்டது. **नगरेषु काञ्ची** என்றும் பெயர்பெற்றது. இங்கு புண்யகோடி விமான மத்தியில் ஸ்ரீவரதன் ப்ரம்மாவிற்கு ப்ரத்யக்ஷமானார்.

கஜேந்த்ரன் தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ள இயலாத நிலையில் ஸ்ரீவரதனை ஸ்தோத்ரம் பண்ணி அவன் திருவடிகளில் சரணாகதி செய்தார். கஜேந்த்ரனை பெருமாளும் கடாக்ஷித்தருளினார். ஸ்வாமி தேசிகன் மெய்விரதமான்மியத்தில் 26ம் பாசுரத்தில் "காதலுயர்ந்த களிற்றைத் திரேதையிற் காத்தளித்து" என்று அநுபவிக்கிறார்.

ஸ்ரீவரதராஜ பஞ்சாசத் எனும் ஸ்தோத்ரம் வடமொழியில் ஸ்வாமி தேசிகனால் அருளப்பட்டது. அத்திகிரி (ஹஸ்திகிரி) க்குப் பெருமாள்கோயில் என ஸம்ப்ரதாயப் பெயர். ஸ்வாமி தேசிகன் ஹஸ்திகிரி மாஹாத்ம்யம் என்ற மணிப்ரவாள நடையில் ஒரு ரஹஸ்ய க்ரந்தம் அருளியுள்ளார். அந்த திவ்யதேசத்தெம்பெருமானான பேரருளாளன் திருவடியில் சரணமடைய அவர் திருவுள்ளம் கொண்டார். அப்படி அவனிடம் அடைக்கலம் (சரணாகதி) புகுந்தமையைப் பத்துப் பாசுரங்களால் "அடைக்கலப்பத்து" என்ற ப்ரபந்தத்தை வெளியிட்டுள்ளார். "ந்யாஸ தசகம்" என்ற ஸம்ஸ்க்ருத ஸ்தோத்ரமும் இதே விஷயத்தில் ஸ்வாமியினால் அருளியதாகும். திருச்சின்னமாலை என்ற தம் தமிழ் ப்ரபந்தத்திலும் பேரருளாளனின் பெருமையைப் பேசியுள்ளார். ஸ்வாமி தேசிகனின் ஸ்தோத்ரரத்ன பாஷ்யத்திலும் (ஸம்ஸ்க்ருதத்தில்) "வேதவேத்யன் நாராயணனே என்றும், அந்த நாராயணனே கலியுகத்தில் வரதனாகத் தோன்றுகிறான்" என்றும் கூறியுள்ளார். அடைக்கலப்பத்தின் முதல் பாசுரத்தில் "முக்திதரும் நகரேழில் முக்கியமாம் கச்சிதன்னில்" என்று வெளியிட்டுள்ளார்.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் முதல் பதிக முதலிலேயே "உயர்வற உயர்நலம் உடையவன் எவனவன்" - அயர்வறும் அதிபதி தேவாதிராஜனே என்று பாராட்டுகிறார். இது வேதவாக்யமான "ஏகோ ஹ வை நாராயண" என்று சொல்வதை தமிழில் அருளியுள்ளார்.

உலக ப்ரஸித்தமான வைஸா உத்ஸவத்தில் கருட உத்ஸவம் மூன்றாம் நாள். காஞ்சி கருட உத்ஸவத்தில் பெருமாள் திருவடியை கையில் ஏந்தி, அதனைத் தாங்கினவனாய், வேதாத்மா விஹகேச்வரன் (கருடன் - பெரியதிருவடி) "இதோ பாருங்கோள் - இவன் தான் நீங்கள் தேடும் பரதத்வம்" என்று நன்கு காட்டுகிறான்.

இனி தேசிக ஸூக்திகளை அநுஸந்திப்போம்.



ஸ்ரீ:

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

*ஸ்ரீவரதராஜபஞ்சாசத்* என்ற தம் க்ரந்தத்தின் பலச்ருதி ச்லோகத்தில் "ச்ருதிஸுபகம்" என்று ஸ்வாமி தேசிகன் ஸாதித்துள்ளார். காதுக்கு இனியதாக மட்டுமில்லாமல் வேதத்தின் பாக்யமாக அமைந்தது என்கிறார்.

1. த்விரதசிகரி ஸீம்நா ஸத்மவாந் பத்மயோநே:
துரக ஸவந வேத்யாம் ச்யாமளோ ஹவ்யவாஹ: ।
கலச ஜலதி கந்யா வல்லரீ கல்ப சாகீ
கலயது குசலம் ந: கோऽபி காருண்ய ராசி: ॥

அத்திகிரியில் எழுந்தருளியிருப்பவரும், ப்ரம்மாவினுடைய அச்வமேத யாகத்தில் நீலமான அக்னியாக இருப்பவரும், பிராட்டியாகிற கொடியோடு கூடிய கல்பக வ்ருக்ஷம் போன்றவருமான வரதன் நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்கவேணும். அத்விதீயமான ஒரு சிகரத்தையுடைய ஹஸ்திகிரியில் அத்விதீயனாக எழுந்தருளியிருக்கிறான் ஸ்ரீவரதன். கூரத்தாழ்வானும் தம் ஸ்ரீவரதராஜஸ்தவத்தின் தொடக்கத்தில் "ஹஸ்திகிரி மஸ்த சேகர:"என்று ஸாதித்துள்ளார். ப்ரம்மா எம்பெருமானின் நாபிக்கமலத்தில் தோன்றியபடியால் இவருக்கு "பத்மயோநி" என்று பெயர். அத்திகிரி மான்மியத்தில் அசரீரி வாக்கு ப்ரம்மாவை "அநவதிக மாஹாத்ம்யமான ஸத்யவ்ரத க்ஷேத்ரத்தின் நடுவிலே ஸர்வ வ்யாபியான ஸர்வேச்வரன் நித்யமாக ஸாந்நித்யம் கொண்டுள்ளவரை, யக்ஞங்களில் ப்ரதானமான அச்வமேதத்தால் ஆராதிப்பாய்" என்றது. ஸர்வபாப ப்ராயச்சித்தமாக வேதங்களில் விதித்த வைஷ்ணவமான அச்வமேதத்தைப் பண்ணப்போவதை "துரகஸவந வேத்யாம்" என்று குறிப்பிடுகிறார். "ஸ்ரீஹஸ்திசைல சிகரோஜ்வல பாரிஜாதம்" என்பர். இந்த கல்பக வ்ருக்ஷத்திற்கு மோக்ஷம் தந்தருளும் பெருமை உண்டு என்பதாம். அளவிட்டுச் சொல்ல இயலாத கருணைக்குவியல் - மனத்திற்கும், வாக்குக்கும் எட்டாத பெருமை உடையவன் ஸ்ரீவரதன். அதனால்தான் இவருக்கு பேரருளாளன் என்று ஒரு திருநாமம்.

இது மங்கள ச்லோகம். அடுத்த 5 ச்லோகங்கள் உபோத்

காதம். பிறகு **10** ச்லோகங்களால் ஸ்வரூபமும், அடுத்த **10** ச்லோகங்களால் ரூபமும், மேல் **13** ச்லோகங்களால் குணங்களும், அதன் மேல் **11** ச்லோகங்களால் விபூதி என்ற வகையில் அமைக்கப்பட்டுள்ளது. **51**ம் ச்லோகம் பலச்ருதி.

**யஸ்யாநுபாவமதிகந் தும் அசக்நுவந்தோ**
**முஹ்யந்த்யபங்குரதியோ மிநிஸார்வபௌமா: ।**
**தஸ்யைவதே ஸ்துதிஷு ஸாஹஸமச்நுவாந:**
**க்ஷந்தவ்யயேஷ பவதா கரிசைல நாத ॥ 2**

எந்த வரதனுடைய மஹிமையை அறியச் சக்தியற்றவர்களாய் முனிஶ்ரேஷ்டர்கள் (நம்மாழ்வார் முதலியவர்கள்) மோஹத்தையடைகிறார்களோ, அந்த வரதனை அடியேன் ஸ்தோத்ரம் செய்யத் தொடங்குகிறேன். இது மிக்கத் துணிவான கார்யம். இதைப் பொருத்தருள வேணும் வரத!

உன்னுடைய பெருமையை அறியவே முடியவில்லை. அபங்குரதிய: - எவ்விதத்திலும் தட்டுப்படாத மதிநலம் பெற்றவர்கள். திருவாய்மொழியில் அமரர்கள் அதிபதியென்றும், மதிநலன் அருளினன் என்றும், அருளாளியம்மான் என்றும் திருவாய்மொழிந்ததை (ஆழ்வாரால்) கண்டு, ஸ்வாமி தேசிகன் "ப்ரதமசதகே வீக்ஷ்யவரதம்" என்று அருளிச்செய்தார். ஸேவித்தார் பாட இயலவில்லை. ஆழ்வார் "யவனவன்" என்று குறிப்பிட்டதை இங்கு "யஸ்ய" என்ற சப்தத்தைக்கொண்டே தொடங்கியது ரஸம். ஸாஹஸம் - முன்பின் பாராமல் நினைத்தவுடனே செய்யும் நிலை. ஆழம் தெரியாமல் குதிப்பது. க்ஷமிக்கவேண்டும் என்றபொழுது பெருமைதரும் சொல்லான "பவதா" என்கிறார். பகவானுடைய பொதுகுணங்களை வர்ணித்திருக்கிறார்களேயன்றி, வ்யாஸாதி மஹர்ஷிகள் ஒரு க்ஷேத்ரத்திலுள்ள பகவானுடைய திவ்ய அவயவ சோபையை வர்ணிக்க முற்படவில்லை. அப்பெருமையும், பாக்யமும் ஆழ்வார்களுடையதே.

**ஜாநந்நநாதி விஹிதாந் அபராத வர்காந்**
**ஸ்வாமிந் பயாத் கிமபிவக்துமஹம் நசக்த: ।**
**அவ்யாஜவத்ஸல ததாபி நிரங்குசம் மாம்**
**வாத்ஸல்யமேவ பவதோ முகரீ கரோதி ॥ 3**

வெகுகாலமாய் செய்துவரும் அபராதங்களை அறிந்துகொண்டிருக்கிற நான் பயத்தினாலே ஒன்றும் சொல்லமுடியாமல்

இருக்கிறேன். ஆனாலும் காரணத்தை எதிர்பாராமல் இருக்கும் வரதனுடைய வாத்ஸல்யம் என்கிற குணம் தடங்கலின்றி ஸ்தோத்ரம் செய்யும்படி தூண்டிற்று.

நிரங்குசம் - பாதிப்பு ஏதுமின்றி
முகரீ கரோதி - பேசவைக்கிறது.

**கிம் வ்யாஹராமி வரத ஸ்துதயே கதம் வா**
**கத்யோதவத் ப்ரலகு ஸங்குசித ப்ரகாச: I**
**தந்மே ஸமர்பய மதிம்ச ஸரஸ்வதீம் ச**
**த்வாமஞ்ஜஸா ஸ்துதிபதைர் யதஹம் திநோமி II 4**

வரதனுடைய வாத்ஸல்யம், க்ஷமை முதலிய குணங்களை நினைத்து ஸ்தோத்ரம் செய்யலாமென்றாலும், பகவத் குணங்களை அறியத்தக்க ஜ்ஞானம், அவைகளைச்சொல்ல வாக்யங்கள் என்னிடத்தில் இல்லை. வரத! மஹான்கள் என்னுடன் இந்த ஸ்தோத்ரத்தை அநுபவித்துப் புகழக்கூடிய ஜ்ஞானத்தையும், வாக்கையும் தேவரீரே தந்தருளவேணும். வரத! என்று ஸம்போதநம் - கொடுப்பவனிடம்தான் கேட்கவேணும். நீ சிறந்ததையே கொடுப்பாயே. அதையே எனக்குக் கொடு என்பதாம். ஸரஸ்வதீ - வாக்கு. ஜ்ஞானத்தை வெளிப்படுத்துவது வாக்குதானே. ஸமர்பய - நன்றாக அளித்துவிடு. திநோமி - தேவரீரை மகிழ்விப்பேனோ!

**மச்சக்தி மாத்ர கணனே நிமிஹாஸ்தி சக்யம்**
**சக்யேந வாதவ கரீச கிமஸ்தி ஸாத்யம் I**
**யத்யஸ்தி ஸாதய மயா ததபி த்வயா வா**
**கிம்வா பவேத் பவதி கிஞ்சிதநீஹமானே II 5**

அநீஹமாநே ! - நம்மாழ்வார் - நின் திருவருளில்லையேல் என்றதை ஸங்க்ரஹித்தபடி. என்னுடைய சக்தியை மாத்திரம் நினைத்துப் பார்த்தால் என்ன செய்யமுடியுமென்று நினைக்கவேண்டியிருக்கிறது. என்னைக்கொண்டு ஸ்தோத்ரத்தை செய்விப்பதினால் உமக்கு என்ன ஆகவேண்டும்? ஒன்றுமில்லை. அவாப்தஸமஸ்த காமன் நீ, குறையொன்றுமில்லா கோவிந்தன். தேவரீர் இசையாதபோது ஒன்றும் நடவாது. நான் ஸ்தோத்ரம் செய்வது தேவப்பெருமாளின் ஸங்கல்பத்தினால்தான். என்னைக்கொண்டு ஏதாவது ஒன்றை (ஸ்தோத்ரத்தை) செய்துவைக்கவேணுமானால் செய்துவையும். அதுவும் உம்மாலேயே செய்யப்பட்டதாகும். ஸ்வாமி தேசிகனைக்கொண்டு குறைதீர பாடச்செய்து விலக்ஷணமான

ஆனந்தத்தையுடைய கரிகிரி நாதன் ஸங்கல்பிக்கிறான். ஆசார்யர்கள் துதிகள் இருப்பினும் போக்யதமாய் அமையத் தேவையாகின்றது என்பதைப் பேரருளாளனே ஸங்கல்பித்துவிட்டான் போலும்.

**ஸ்தோத்ரம் மயா விரசிதம் த்வதீந வாசா**
**த்வத் ப்ரீதயே வரதயத் ததிதம் ந சித்ரம் ।**
**ஆவர்ஜயந்தி ஹ்ருதயம் கலு சிக்ஷிகாணாம்**
**மஞ்ஜூநி பஞ்ஜர சகுந்த விஜல்பிதாநி ॥ 6**

உமக்கு ஆதீனமாயுள்ள என்னுடைய வாக்கைக்கொண்டு, உம்முடைய ப்ரீதிக்காகச் செய்யப்பட்ட இந்த ஸ்தோத்ரமானது, கூட்டிலிருக்கும் கிளியானது ஸம்பந்தமற்றதாயும், முரண்பட்டதாயும் பேசினாலும், வளர்ப்பவர்களுக்கு ப்ரீதியை எப்படிக் கொடுக்கிறதோ, அதுபோல உமக்கு ப்ரீதியைக் கொடுக்கிறதாகும். இப்படி ஸாத்வீக த்யாகம் செய்தருள்கிறார் போலும்.

ஸ்தோத்ரம் குணங்களைச் சொல்லுவது என்பது பொருள். சாஸ்த்ரமும் பகவானுடைய ஸ்வரூப ரூப குணவிபவ ஐச்வர்யங்களைக் கூறுவதால் ஸ்தோத்ரமாகும். நீ சொன்னவண்ணம் செயல்படும் வாக்கு கிடைக்கப்பெற்றுவிட்டால், நீ சொற்களை அளிக்க, அவற்றைக்கொண்டு ஸ்தோத்ரமாய் அமைக்கிறேன். பீஷ்மர் "ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய: ஸ்தோத்ரம் ஸ்துதிஸ்தோதாரணப்ரிய:" என்று தொகுத்தார். ஸ்தோத்ரமும் அவனே, ஸ்தோத்ரப்ரியனும் அவனே, ஸ்துதிப்பவனும் அவனே என்கிறார்.

ஆவர்ஜயந்தி கலு - கவருகின்றனவே. சிக்ஷிப்பவரின் இதயத்தை மகிழ்விக்குமல்லவா. வரதன் - வரமான வஸ்துவையே அளிப்பவனாயிற்றே. வரதனுடைய ப்ரீதியைக்காட்டிலும் நாம் ப்ரார்த்திப்பது வேறு உள்ளதோ? ஸ்ரீவரதராஜ பஞ்சாசத் ஸகலலோக ஆவர்ஜகம் த்வததீநவாசா - என்பதால் ஒவ்வொரு சொல்லும் தேவப்பெருமாள் சொல்லச்செய்ததேயாம்.

**7** தொடக்கமாக **10** ச்லோகங்களில் ஸ்வரூபம் வர்ணிக்கப்படுகிறது.

**யம் சக்ஷுஷாம் அவிஷயம் ஹயமேத யஜ்வா**
**த்ராகீயஸா ஸுசரிதேந ததர்ச வேதா: ।**

தம் த்வாம் கரீச கருணா பரிணாமதஸ்தே
பூதாநி ஹந்த நிகிலாநி நிசாமயந்தி ॥ 7

ப்ரம்மா அச்வமேத யாகம் செய்து அந்தப் புண்யத்தாலே கண்ணுக்குப் புலப்படாதவனான உன்னை ஸாக்ஷாத்கரித்தான். அத்துடன் நின்றுவிடாமல் எல்லோரும் காணும்படி செய்துகொண்டீர்.

வேதங்களால் மட்டுமே அறியப்படவேண்டியவன். நீ கண்களுக்குப் புலனாகாத உன்னைத் தன் பலமே கொண்டு காணக்கருதினான். ப்ரம்மா உனது அருளினால் அசரீரி சொன்ன வார்த்தையைக்கேட்டு அச்வமேத யாகத்தைச் செய்தான். அதன் பலனால் ப்ரம்மா பரமனைக் கண்டான். அவனைப்போல் வேள்வியாற்றும் ஆற்றலில்லாத சாஸ்த்ரங்களையும் அறியாத, காண அறிவில்லாத ஸகல ஜீவராசிகளும் உன்னை ஸேவிக்கின்றனரே! உனது பேரருளின் பெருமைதான் என்ன! இது பரத்வ ஸௌலப்யங்களைக் காட்டும் ச்லோகம்.

ஹயமேத யஜ்வா - அச்வமேத யாகம் செய்தவர் ப்ரம்மா. இதுவே பெரிய (ப்ரும்ம) யாகம். ப்ரம்மா முதலானோர் கர்ம வச்யரே. இருந்தாலும் இந்த யாக பலனாக பார்க்கமுடியாததைப் பார்த்துவிட்டார்.

கருணாபரிணாமத: - கருணையின் பலனாக மதிநலம் அருளியதால் அருளாளன். நாம் எல்லோரும் ஸேவிப்பதற்கு அவனுடைய கருணைதான் காரணம்.

பரிணாம் - விளைவு. பரப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்காரம் திவ்ய த்ருஷ்டியுடையவர்களுக்குத்தானே.

பூதாநி நிசாமயந்தி - ஜந்துக்களும் கண்டுகளிக்கின்றன.

தத்தத்பதைருபஹிதேऽபி துரங்கமேதே
சக்ராதயோ வரத பூர்வமலப்த பாகா: ।
அத்யக்ஷிதே மகபதௌ த்வயி சக்ஷுஷைவ
ஹைரண்ய கர்ப ஹவிஷாம் ரஸமந்வபூமந் ॥ 8

ப்ரம்மா தான் செய்த அச்வமேத யாகத்தை ஸாத்விக த்யாகபூர்வமாய்ச் செய்தபடியினால் அக்னி, இந்த்ரன் முதலிய பதங்களினால் குறிப்பிட்ட தேவதைகள் அந்த ஹவிஸ்ஸை அடையவில்லை. அவர்களுக்கு அந்தர்யாமியான தேவரீரே அவற்றைப்

பெற்றுக்கொண்டீர். இறுதியான வபாஹோமத்தில் தேவரீரே திரு வவதாரம் செய்த ரூபத்தை அவர்கள் எல்லோரும் ஸேவித்தார் கள். அவர்கள் ஹவிஸ்ஸின் ரஸனையை சுவைக்காமல் கண்களி னால், அந்த ஹவிஸ்ஸின் ரஸத்தை அனுபவித்தனர். தேவாதிரா ஜனே நேரில் வந்துவிட்டதால் மகிழ்ந்தனர். எம்பெருமானே அச் வமேத ஆராதியனான அதிபதி "அஹம் ஹி ஸர்வயக்ஞாம் போக் தாச ப்ரபுரேவச" என்று பகவானின் வாக்கு - கீதை IX- 24

த்வயி சக்ஷுஷைவ அத்யக்ஷிதே - "ஏவ" காரம் ரஸமா னது. (See also slokam - 44).

ஸர்க ஸ்திதி ப்ரலய விப்ரம நாடிகாயாம்
சைலூஷவத் விவித வேஷ பரிக்ரஹம் த்வாம் ।
ஸம்பாவயந்தி ஹ்ருதயே கரீச தந்யா:
ஸம்ஸார வாரிநிதி ஸந்தரணைக போதம் ॥ 9

ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன் என்கிற மூன்று ரூபத்தையும் தேவரீரே எடுத்துக்கொண்டு ஸ்ருஷ்ட்யாதி கார்யங்களைச் செய் கிறீர். ஆகையால் உம்மை ஸம்ஸாரத்தைத் தாண்டுவதற்குத் தெப் பமாக த்யானித்திருக்கிறார்கள் தன்யர்கள்.

தன்யர்கள் - ப்ரபத்தி பண்ணிக்கொள்வதன் முன்னம் யாரும் தன் யனாவதில்லை. பகவத் ஸ்வரூபத்தை இவர்கள் த்யானிப்பதால் ஸாக்ஷாத்கரிக்கிறார்கள். எம்பெருமான் நம்மை அக்கரைக்கு சேர்த் துவைக்கும் படகு ஆவார். எம்பெருமான் தானே தன்னை அடை விக்கிறான் என்பதாம். ஏகபோதம் - தேவதாந்த்ர ஸம்பந்தம் எக் காரணத்தைக்கொண்டும் இல்லை என்று கூறுகிறார்.

ப்ராப்தோதயேஷு வரத த்வதநுப்ரவேசாத்
பத்மாஸனாதிஷு சிவாதிஷு கஞ்சுகேஷு ।
தந்மாத்ர தர்சந விலோபித சேமுஷீகா:
தாதாத்ம்ய மூட மதயோ நிபதந்யதீரா: ॥ 10

In verses 9 to 15, Swami Desika incorporates the teachings of Sri Bashyam (D.R.) நீ ப்ரம்மா, சிவன் முதலிய தேவர்களின் அந்தர் யாமியாய் இருந்து நியமிக்கின்றாய். உள் இருப்பதினாலேயே அவர் கள் பற்பல பெருமைகளைப்பெற்று விளங்குகின்றனர். கஞ்சுகம் போன்றவர்களே அவர்கள். உனக்கு சட்டை போன்றவர்கள்

அவர்கள். இந்த ரஹஸ்யம் அறியாத மதிகேடர்கள் மேல் உருவத்தை மட்டும் கண்டு, அவர்கள் எல்லாம் உலகைக்காக்கும் தேவர்கள் என்று பிரமித்து ! அவர்களோடு உன்னையும் ஒருவனாக நினைத்தால் மோஹமடைந்து ஸம்ஸாரிகளாகவே அவர்கள் என்றைக்குமே இருந்துவிடுகின்றனர். அந்தர் த்ருஷ்டியில்லாதவர்கள் தாங்களே விழுந்து அழிகின்றனர். நீர் ஸம்ஸார ஸாகரத்தைத் தாண்ட அமைந்த படகாக இருக்கிறீர்.

மத்யே விரிஞ்சி சிவயோர்விஹிதா
க்யாதோऽஸி தத்ஸமதயா ததிதம் நசித்ரம் ।
மாயா வசேந மகராதி சரீரிண் த்வாம்
தாநேவ பச்யதி கரீச யதேவ லோக: ॥ 11

ப்ரும்ம ருத்ராதிகளுக்கு ஒத்தவராகவே உம்மைச் சிலர் சொல்லுவது ஆச்சர்யமல்ல. மத்ஸ்யாவதாரம் முதலிய அவதாரங்கள் எடுத்த உம்மை அந்த மத்ஸ்யம் முதலியவைகளாகவே அவர்கள் நினைக்கிறார்களல்லவா.

இத்தகைய எண்ணம் உடையவர்கள் மூடமதிகள் என்றும் அவர்கள் அதீனர்கள் என்றும் கூறப்பட்டது. ப்ரம்மா, ருத்ரன் பிறக்கிறார்கள் என்று ச்ருதி கூறப்படுவதால், விஷ்ணுபாரம்யம் சொல்ல இயலாது. ஸ்ருஷ்டிக்கு ப்ரமனையும், ஸம்ஸாரத்துக்கு சிவனையும் படைத்து நியமித்த நீ, ரக்ஷணம் என்கிற வ்யாபாரம் இடையே நடைபெற வேண்டியிருந்ததால், அப்பொருப்பை ஏற்று அவர்களின் இடையே வந்து நின்றாய். இடையே வந்து நிற்பதால் அவருக்கு நிகர் என்று சொல்ல இயலுமோ? உயர்ந்த தத்வத்தை சிலருடைய உள்ளம் ஏற்க மறுத்துவிடுகிறது. இவர்கள் அஸுர ப்ரக்ருதிகள். ஜகத்காரணத்வம் அப்பரம்பொருளன்றி வேறு யாருக்கும் இல்லை. இவ்வாறு இருக்க மூவரும் ஸமம் என்று மயங்குவார் பாமரர்களே. விஷ்ணுவே பரப்ரும்ம சப்த வாக்யன். இவரது ஸங்கல்பத்தால் மத்ஸ்ய முதலான அவதாரங்கள். மத்ஸ்யாதிகள் சரீரமாத்ரம். அதற்குள்ளே அந்தர்யாமியாக விளங்குபவர் பரமாத்மாவே. இதை நாம் அறியாததற்கு காரணம் பாபங்களேயாகும்.

ப்ரஹ்மேதி சங்கரஇதி இந்த்ரஇதி ஸ்வராட்இதி
ஆத்மேதி ஸர்வமிதி ஸர்வ சராசராத்மந் ।
ஹஸ்தீச ஸர்வ வசஸாமவஸாநஸீமாம்
த்வாம் ஸர்வகாரணமுசந்த்யநபாய வாச: ॥ 12

வேதங்களில் ப்ரஹ்மத்தைக் குறிக்கும் பதங்களாகிய ப்ரஹ்ம, சங்கர, இந்த்ர, ஸ்வராட், ஆத்மா, ஸர்வம் என்பவை உண்மையே சொல்லுகின்றன. அத்திகிரியில் ஈசனாய் விளங்கும் அருளாளனே! நீ ஸகலவிதமான சராசரங்களுக்கும் உள்ளே நின்று அவற்றை நடத்திக்கொண்டு விளங்குகின்றாய். ஆகையால் நீதான் அந்தராத்மாவாக இருப்பவன். “அஜாயமானோ பஹுதா விஜாயதே” என்பதற்கு ஏற்ப அவதாரங்கள் பலவானாலும், த்ரிமூர்த்தியந்தர்கத விஷ்ணு ஸாக்ஷாத் பரமபுருஷனுடைய அவதாரமே. அதுதான் ஜகத் காரணம். அதுதான் பரப்ரஹ்மம்.

அசாதிபேஷு கிரிசேஷு சதுர்முகேஷ்வபி
அவ்யாஹதா விதி நிஷேத மயீ தவாக்ஞா ।
ஹஸ்தீச நித்யமநுபாலந லங்கநாப்யாம்
பும்ஸாம் சுபா சுப மயாநி பலாநி ஸூதே ॥ 13

திக்பாலர்களைப்போல் ருத்ரர்களும், ருத்ரர்களைப்போல் ப்ரம்மாக்களும் உனது கட்டளையைப் பின்பற்றித் தம் கடமைகளைச் செய்து வருகின்றனர். திக்பாலர்களுக்கு ஆசாதிபர்கள் என்றும், ருத்ரர்களுக்கு கிரீசர் என்றும், ப்ரம்மாக்களுக்கு சதுர்முகர்கள் என்றும் பெயர்கள் இருப்பினும், அவர்கள் ஸ்வதந்த்ரமாக ஏதும் செய்யகில்லரே! முன் ச்லோகத்தில் எம்பெருமானின் ஸர்வ காரணத்வமும், இந்த ச்லோகத்தில் ஸர்வ நியந்தா பகவான் என்பதும் கூறப்படுகிறது. திக்பாலாதிகள் இடத்திலும் தடையின்றிச் செல்லுகின்ற தேவரீருடைய ஆஜ்ஞையை அநுஸரித்தவர்கள் ஸுகத்தையும், மீறினவர்கள் துக்கத்தையும் அநுபவிக்கிறார்கள்.

த்ராதாதிபதி ஸ்திதி பதம் பரணம் ப்ரரோஹ:
சாயா கரீச ஸரஸாநி பலாநி சத்வம் ।
சாகாகத த்ரிதச ப்ருந்த சகுந்தகானாம்
கிம்நாம நாஸி மஹதாம் நிகம த்ருமாணாம் ॥ 14

தேவதைகளாகிற பக்ஷிகள் உட்கார்ந்திருக்கும் வேதங்களாகிற மரங்களுக்கு மூலாதாரமும், போஷகனும், விழுதும், நிழலும், பழங்களும் எல்லாம் தேவரீரே. “த்ரிதண்ட தாரிணா பூர்வம் விஷ்ணுநா ரக்ஷிதா த்ரயீ”. ஸர்வசப்த வாச்யதீவம் எம்பெருமானுக்கு சொல்லப்பட்டது. நித்யமான வேதத்துக்கு ப்ரளயகாலத்தில் மறைவு ஏற்பட்டு, மறுபடியும் அதை ஸ்ருஷ்டி காலத்தில் காத்து அளிக்கிறபடியால் பகவானே ஸர்வவேதவேத்யன்.

ஸாமாந்ய புத்தி ஜநகாஸ்ச ஸதாதி சப்தா:
தத்வாந்தர ப்ரமக்ருதஸ்ய சிவாதி வாச: I
நாராயணே த்வயி கரீச வஹந்த்யநந்யம்
அந்வர்த வ்ருத்தி பரிகல்பிதமைக கண்ட்யம் II 15

நாராயணனான கரீசனே! 'ஏகோஹவை நாராயண ஆஸீத்! "ந ப்ரஹ்ம ந சங்கர:" என்று ச்ருதிகளில் சொல்லியிருக்கிறது. ஸத், அஸத், ஆத்மா, சிவன் முதலான சொற்களெல்லாம் பொருளாய், காரணமாய் இருப்பவன் நீரே! நாரணனே' இப்பதங்கள் நாரணனாகிய தேவரீர் ஒருவரிடத்திலேயேதான் பொருந்தியிருக்கின்றன. மற்றவர்களிடம் பொருந்தாது.

ஸஞ்சிந்தயந்த் யகில ஹேய விபக்ஷ பூதம்
சாந்தோதிதம் சமவதா ஹ்ருதயேந தந்யா: I
நித்யம் பரம் வரத ஸர்வகதம் ஸுஸூக்ஷ்மம்
நிஷ்பந்த நந்தது மயம் பவத: ஸ்வரூபம் II 16

உனது ஸ்வரூபத்தை பாக்யசாலிகள் த்யானிக்கிறார்கள். அந்த ஸ்வரூபம் எத்தகைய தீயகுணங்களும் கலசாதது. தீயகுணங்களுக்கு எதிர் தட்டில் இருப்பது நித்யமானது, எங்கும் உள்ளது, மிகவும் ஸூக்ஷ்மானது, எல்லாவற்றையும் விடச் சிறந்தது, ஆனந்தவடிவமானது.

சாந்தோதிதம், நித்யோதிதம் என்ற இருவகைப்பட்ட உம்முடைய ரூபத்தைப் பெரியோர்கள் த்யானிக்கிறார்கள். ஸம்ஸாரிகள் த்யானிப்பதற்காக ஜ்ஞானாநந்த மயமான விக்ரஹத்துடன் ஸேவை ஸாதிக்கிறார். ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் பரவாஸுதேவனுடைய நிலையை நித்யோதிதம் எனப்படும் சாந்தியுடைய மனதில் சாந்தோதிதத்தை நினைக்கிறார்கள்.

பரத்வ - உயர்ந்தது. எதைக்காட்டிலும் உயர்ந்தது வேறு இல்லையோ அதை பரம் என்று குறிப்பிடுகிறார். எம்பெருமானையே விஷ்ணு என்பது எங்கும் எப்பொழுதும் உள்ளது என்பதனை விளக்க அமைந்தது. "அந்தர் பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்த நாராயண: ஸ்தித:" என்றும் "கறந்த பாலுள் நெய்யே போல கறந்தெங்கும் பரந்துளன்" என்றும் உபயவேதாந்தங்களினால் கூறப்பட்டவர்.

விச்வாதி சாயி ஸுகரூப! யதாத்மகஸ்த்வம்
வ்யக்திம் கரீச! கதயந்தி ததாத்மிகாம்தே ।
யேநாதி ரோஹதி மதிஸ்த்வதுபாஸ காநாம்
ஸாகிம் த்வமேவ தவ வேதி விதர்க டோலாம் ॥ 17

ஒப்பற்ற ஸுகஸ்வரூபனே ! கரீச ! விச்வத்தில் ஆனந்தரூபமான நீர் எந்த உருவத்தைப் பின்பற்றுபவன் என்று அதிசயிக்கத் தக்கது. அகத்தின் அழகு முகத்தில் தெரியும். பகவத் விக்ரஹங்களுக்கு ஜ்ஞானானந்த ஸ்வரூபம் உண்டு.

மோஹாந்தகார விநிவர்த்தந ஜாகரூகே
தோஷா திவாபி நிரவக்ரஹ மேதமாநே ।
த்வத்தேஜஸி த்விரத சைலபதே விம்ருஷ்டே
ஸ்லாக்யேத ஸந்தமஸ பர்வ ஸஹஸ்ர பாநோ: ॥ 18

ஹஸ்திகிரி அதீசனே! உம்முடைய திவ்யமங்கள தேஜஸ்ஸை ஆராய்ந்து பார்த்தால், அதன் எதிரில் ஆயிரம் கிரணங்களுடைய ஸூர்யனும், இருள் என்னும்படியான நிலையை அடைகிறான். இத்தகைய பரஞ்ஜோதிஸ்ஸாக பெருமாள் எழுந்தருளியிருக்கிறார்.

உள்ளத்தில் உள்ள இருளை ஆயிரம் ஸூர்யன் ஏற்பட்டாலும் அகற்றமுடியாது. எம்பெருமான் ஒருவனால்தான் அகற்ற முடியும். இத்தகைய "பகலோன் பகல் விளக்காகப் பரம் சுடர் தோன்றியதே" என்று மெய்விரதமான்மியத்தில் ஸ்வாமி தேசிகன் பேசுகிறார் (15ம் பாசுரம்)

ரூடஸ்ய சிந்மயதயா ஹ்ருதயே கரீச
ஸ்தம்பாநுகாரி பரிணாம விசேஷபாஜ: ।
ஸ்தாநேஷு ஜாக்ரதி சதுர்ஷ்வபி ஸத்வவந்த:
சாகா விபாக சதுரே தவ சாதுராத்ம்யே ॥ 19

கரிகிரி சிகரி காளமேகமே ! வைகுண்டத்தில் உள்ள விசாகஸ்தம்பத்தில் நான்கு இடங்களில் ஒவ்வொன்றிலும் நான்கு ரூபங்களுடன் கூடிய வ்யூஹரூபங்களில் உம்மை மஹான்கள் த்யானிக்கிறார்கள். ஒவ்வொரு கிளையிலும் ஜாக்ரத், ஸ்வப்ந, ஸுஷுப்தி, மூர்ச்சா என்றே அவஸ்தைகளோடு த்யானிப்பவரின் ஜ்ஞான சக்தியாதிகளின் தாரதம்யத்திற்கேற்பத் தம்மை த்யானிக்கும்படியாக வ்யூஹரூபத்தில் ஸேவை ஸாதிப்பவரும் தேவரீரே.

நாகாசலேச ! நிகில உபநிஷந்மனீஷா
மஞ்ஜூஷிகா மரகதம் பரிசிந்வதாம் த்வாம் ।
தந்வீ ஹ்ருதி ஸ்புரதி காபி சிகாமுநீநாம்
ஸௌதாமநீவ விப்ருதா நவமேககர்பா ॥ 20

நாகமலை நாயகனே ! உபநிஷத்துக்கள் அனைத்தும் உம்மைத் தம்மிடத்தில் பொக்கிஷமாகக்கொண்டு விளங்குகின்றன. இந்த ச்லோகத்தில் எம்பெருமானின் அந்தர்யாமி ரூபத்தை துதிக்கிறார்.

உபநிஷத்துக்களாகிற பெட்டியில் வைக்கப்பட்ட உயர்ந்த ரத்னம் போன்ற வரதனை நீலமேக மயமான திருமேனியில் மின்னல்போல் முனிகள் த்யானிக்கிறார்கள். முனிவர்களின் இதயத்தில் விலக்ஷணமானதொரு ஜ்வாலை மிகமிக நுண்ணியதாக ஸ்புரிக்கும். அதுதான் அந்தர்யாமி ரூபம்.

பத்மகோஶ ப்ரதிகாஶம் ஹ்ருதயம் சாப்யதோமுகம்
நீலதோயத மத்யஸ்தா வித்புல்லேகபாஸ்வரா ।
நீவார ஶூகவத் தந்வீ வீதா பாஸ்யத் தநூபமா
தஸ்யா: ஶிகாயாமத்யே பரமாத்மா வ்யவஸ்தித: ॥

இந்த புருஷஸூக்த வாக்யங்களே இந்த ச்லோகத்திற்கு ஆதாரம்.

ஔதந்வதே மஹதி ஸத்மநி பாஸமாநே
ஸ்லாக்யே ச திவ்ய ஸதநே தமஸ: பரஸ்தாத் ।
அந்த: கலேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம்
ஜாதம் கரீச ! கதமாதரணாஸ்பதம் தே ॥ 21

பரமபோக்யமான திருப்பாற்கடலையும், திவ்யமான ஸ்ரீவைகுண்டத்தையும் வாஸஸ்தானமாகவுடைய உமக்கு ஹே கரீச ! இந்த ப்ராக்ருத மாநுஷ சரீரத்தையுடைய மனுஷ்யர்களின் ஹ்ருதயத்தில் வசிப்பது எப்படி இருக்கிறது?

திருப்பாற்கடலில் கமலை பிறந்ததால் அவன் உகந்த ஸ்தலம் அது ஆதலால் "மஹதி" வைகுந்தமும் துயில்கொண்ட இடமானதால் புவநமே பவநம். ஹ்ருதயமோ இருள் சூழ்ந்தது. இந்த ஆபாஸ இதயத்துக்குள்ளே நித்யவாஸம் பண்ணுவது தான் விந்தை ! வாத்ஸல்யம் என்கிற உமது குணமே இவ்வாறு உம்மை செய்துவிட்டது. பிராட்டியை நீ எப்படி பிரிவதில்லையோ

அப்படியே அடியேனையும் விட்டுப் பிரிவதில்லை - வாத்ஸல்யம் மேலிடுவதால்.

பாலாக்ருதேர் வடபலாச மிதஸ்ய யஸ்ய
ப்ரஹ்மாண்ட மண்டலம பூத்உதரைக தேசே ।
தஸ்யைவ தத் வரத ஹந்த கதம் ப்ரபூதம்
வாராஹமாஸ்தித வதோ வபுரத்புதம் தே ॥ 22

விபாவாவதாரங்களில் வடபத்ரஸயன, வராஹ, நரஸிம்ஹ, த்ரிவிக்ரம, ராமாவதாரங்களைச் செய்ததெல்லாம் பகவானின் தயை யினால் ஏற்பட்டவை என்று வைஷ்ணவர்கள் அறிகிறார்கள். மற்றவர்கள் இப்படி அறிவதில்லை. ச்லோகங்கள் 22 முதல் 26 வரை இவ்வவதாரங்களைப்பற்றி கூறுகிறார்.

ஆலிலையில் சிறிய உருவம்கொண்டு பாலகனாய் அடங்கி இருந்தாய். அப்பொழுது அந்த உனது திருமேனியில் திருவயிற் றில் ஒரு மூலையில் அகண்ட ப்ரம்மாண்டங்களும் அடங்கி விட்டன. அத்தகைய ஆலிலை பாலகனான நீ வராஹாவதாரம் எடுத்தாய். அந்த அத்புதமான திருமேனி எப்படித்தான் அவ்வ ளவு பெரியதானதோ ! சிறியதாயிருக்க, ப்ரம்மாண்டங்கள் மூலை யில் அடங்கிவிட்டன. பெரியதாய் வராஹனாய் ப்ரம்மாண்டங் களை எப்படி வியாபித்தாய்? பூலோகத்தை அவ்வுருவின் கொம்பினால் வெளிக்கொணர்ந்தாயே - என்ன அத்புதம் இது.

உபாஸக அநுக்ரஹத்திற்காக, ஸங்கல்பத்தினால் பரிமித னாகிறாய். இதெல்லாம் இந்த்ரஜாலம்போல் மாயை என்றனர் சிலர். அசிந்த்ய - அத்புத - அனந்த சக்தியும், அகடித கடநா சக் தியும் உம்மிடத்தில் இருப்பதை மறந்துவிட்டனரே ! நீர் மஹத் தான கோலவராஹமாய் அவதரித்தருளியபோது, இந்த அண்டம் முழுவதும் உம்முடைய கோரப்பற்களுக்கு எவ்வாறு பற்றும்?

பக்தஸ்ய தாநவசிசோ: பரிபாலநாய
பத்ராம் ந்ருஸிம்ஹ குஹநாமதிஜக்முஷஸ்தே ।
ஸ்தம்பைக வர்ஜ மதுநாபி கரீச நூநம்
த்ரைலோக்ய மேததகிலம் நரஸிம்ஹ கர்பம் ॥ 23

தன் பக்தனாகிய ப்ரஹ்லாதனுடைய "பகவான் எங்கும் உளன்" என்ற வார்த்தையை மெய்ப்பிப்பதற்காக ஸர்வஜகத்துக் குள்ளும் அந்தர்யாமியாய் இருப்பது போதாது என்று, அந்த ஹிரண்யனை ஸம்ஹாரம் செய்வதற்குத் தகுந்ததான

ஸ்ரீநரஸிம்ஹரூபியாய் ஜந்துதோறும் கர்பவாஸம் செய்தருளினாய். அப்போது அந்த மஹாஸுரனுடைய வீட்டிலுள்ள ஒரு தூணிலிருந்து (அளந்திட்டதூணை அவன் தட்ட) வெளிவந்தாய். அத்தூண் தவிர மூவுலகிலுள்ள மற்றபொருள்கள் அனைத்தும் நரஸிம்ஹனைத் தன்னுள்ளே இப்போதும் கொண்டிருக்கின்றன. எந்த பக்தனை அநுக்ரஹிக்கக் காத்திருக்கிறாயோ? வராஹரூபம் அத்புதம் என்றால் ந்ருஸிம்ஹாவதாரம் அத்யத்புதம்.

**க்ராமந் ஜகத் கபடவாமநதாமுபேத:**
**த்ரேதா கரீச ஸ பவாந் நிதகே பதாநி ।**
**அத்யாபி ஜந்தவ இமே விமலேந யஸ்ய**
**பாதோதகேந வித்ருதேந சிவா பவந்தி ॥ 24**

கபடமான வாமன உருக்கொண்டாய்; ஜகத்தை ஆக்ரமித்தாய்; மூன்று விதமான அடிகளை வைத்தாய்; அதன் பயனாக இன்றும் ஜீவர்கள் உமது ஸ்ரீபாததீர்த்தமான கங்கையை சிரஸ்ஸில் தரித்துக்கொண்டு மங்களத்தை அடைகின்றனர்.

த்ரேதா நிததே பதம் - என்பது உபநிஷத் வாக்யம்.

க்ராமந் - அளக்கின்றவராய். மூவடி மண் தா என இரந்தான். பத்ப்யாம் பூமி: என்பதற்கிணங்க, காலால் அளப்பது யுக்தமாயிற்று. மண்ணையளந்தவன் ஜகத்தையே ஓரடியால் அளந்துகொண்டான். கபடவாமநதாம் உபேத: - சிறுமை வேடம் கொடியவனை ஏமாற்ற வஞ்சனை குணமேயாகும். மஹாபலி சிறுமை கண்டு மயங்கினான். குருவின் உபதேசம் குருவாகப்படவில்லை. தோற்றம் சிறுவனாக கார்யத்துக்கு ஏற்ற நடிப்பு. ஒரு திருவடியில் மண்ணையும், மற்றொரு திருவடியால் விண்ணையும் அளந்தான். ஒரு திருவடியில் பிரமன் ஸமர்ப்பித்த பாத்யமே, அவன் புதல்வனால் (சங்கரனால்) சிரமேற்கொள்ளப்பட்டு அவனை சிவனாக்கி, பகீரத ப்ரயத்னத்தினால் பெருகி அனைவரையும் பவித்ரமாக்குகின்றது. "விஷ்ணோ: யத் பரம் பதம்" என்று புருஷஸூக்தவாக்யம். அது நாபி என்றும் அத்யாபி என்றும் பதப்ரயோகம் வியப்பினையே காண்பிக்கிறது. பாகுபாடின்றி உலகம் முழுவதும் தனது திருவடி வைப்பினால், உபாய ப்ரஸங்கமே இல்லாத ஜந்துக்கள் எல்லாம் கூட பெருமாள் திருவடி ஸம்பந்தம் பெற்றனர்.

சிவாபவந்தி - சிவ என்ற சொல்லுக்கு மங்களத்தன்மை உடையவன் என்ற பொருள்.

நாம் ஆசார்ய ஸ்ரீபாததீர்த்தத்தை ஸ்வீகரிக்கும்போது முதலில் சிரஸ்ஸில் ப்ரோக்ஷித்துக்கொள்வதும், பிறகு ஸாதிப்ப தையே உட்கொள்வதையும் அநுஸந்திக்கிறோம்.

வாமனனாய் தோன்றினதால் இந்த்ரன் ஸ்வராஜ்யம் பெற்றான். மஹாபலி அடக்கமடைந்தவனாய் தனித்திருவடி பெற்றான். பரமசிவன் ஸ்ரீபாததீர்த்தம் பெற்றான். உலகம் திருவடி ஸம்பந்தம் பெற்றது.

யேனாசல ப்ரக்ருதினா ரிபுஸம்க்ஷயார்த்தீ
வாராம் நிதிம் வரத பூர்வமலங்க்யஸ்த்வம் ।
தம் வீக்ஷ்ய ஸேதுமதுநாபி சரீர வந்த:
ஸர்வே ஷடூர்மி பஹுலம் ஜலதிம் தரந்தி ॥ 25

ஸ்ரீராமனாய் அவதரித்தாய். ராவணன் ஸபுத்ர க்ஞாதி பாந்தவமாக அழியும் வகையை ஸங்கல்பித்தாய். அதற்காக மலைகளைக்கொண்டு திருவணை (ஸேது) அமைத்து, கடந்து சென்றாய். நீ தென்னிலங்கைக்குச் செல்ல ஏதுவாக எந்த ஸேது இருந்ததோ, அந்த ஸேதுவை இன்றும் ஸேவித்து, சரீரம் படைத்த அத்தனை ப்ராணிகளும் காமம், க்ரோதம், லோபம், மோகம், மதம், மாத்ஸர்யம் ஆகிய ஆறு அலைகள் நிறைந்த பெரும் ஸம்ஸாரம் என்னும் கடலைத் தாண்டிச்செல்கின்றன.

ஆண்டாளும் "அன்று சென்று அங்குத் தென்னிலங்கை செற்றாய்" என்று கூறியுள்ளார். கரைசேர வேணும் என்பதுதானே கருணைக் கடலான பெருமாள் லக்ஷ்யம். ஸங்கல்பமும் என்றோ கட்டின ராமஸேதுவால் இன்றும் உலகம் உய்வு பெறுகிறது. அத்புதம் !

இத்தம் கரீச ! துரபஹ்நவ திவ்ய பவ்ய
ரூபாத்விதஸ்ய விபுதாதி விபூத் ஸாம்யாத் ।
கேசித் விசித்ர சரிதாந் பவதோऽவதாராந்
ஸத்யாந் தயா பரவசஸ்ய வதந்தி ஸந்த: ॥ 26

எம்பெருமானாரும் ஸ்ரீகீதாபாஷ்ய ப்ரவேசத்தில்

"தேஷு தேஷு லோகேஷு அவதீர்ய அவதீர்ய ............
அதிமாநுஷ சேஷ்டிதானி குர்வந் ஸகல மநுஜ நயந விஷயாம் கத:"

என்று அருளிச்செய்ததை ஸ்வாமி தேசிகன் சுருக்கமாக "விசித்ர சரிதாந்" என்கிறார். எம்பெருமான் தானே "விஸ்ருஜாமி" என்றும்

"ஸம்பவாமி யுகே யுகே" என்றும் கீதையில் (IV - 7 & 8) கூறியதி னால் அவதாரங்கள் ஸத்யங்கள் தான். அவதார ஸங்கல்பத்திற்கு தயைதான் முக்ய காரணம். தயையின் ப்ரேரணையால்தான் அவதாரம் ஏற்கிறான் என்பதை தயாசதகம் ச்லோகம் 82ல் கூறுகி றார். இதையெல்லாம் நல்லோர் ஸ்ரீவைஷ்ணவர்கள் அறிகின்ற னர். மற்றவர்கள் இப்படி அறிவதில்லை. வெறும் இந்த்ரஜாலம் போன்று பொய்யல்ல.

ஸௌசீல்ய பாவிததியா பவதா கதஞ்சித்
ஸஞ்சாதிதாநபி குணாந் வரத த்வதீயாந் ।
ப்ரத்யக்ஷயந்த்யவிகலம் தவ ஸந்நிக்ருஷ்டா:
பத்யுஸ்தித் விஷாமிவ பயோத மயூகாந் ॥ 27

ஸௌசீல்யம் என்கிற திவ்யமான கல்யாண குணம் படைத் தவன் நீ. அந்த குணம்தான் அனைவரையும் நெருங்கச்செய்யும் பெருமையுடையது. ஸர்வசக்தனான நீ கல்யாண குணங்களை மறைக்க முற்பட்டால் உனது கடாக்ஷத்திற்கு புறமாயுள்ளவர்களோ காருண்யத்துக்கு இலக்காகாமல் வெகு தூரத்தில் உள்ளார்களோ புரிந்துகொள்ளாமல் போகலாம். உனது அருளுக்கு இலக்கான வர்கள் உனது பரத்வம் முதலிய கல்யாண குணங்களை நேரிடை யாகவே கண்டுவிடுகின்றனர்.

ஜீவாத்மாக்களான நமக்கு பகவானை நெருங்குவதற்கு ஸௌசீல்யம், ஸௌலப்யம் இவை இரண்டே துணையாய் இருப் பவை. விபவத்தில் குஹனை ஆத்ம ஸம: ஸகா என்கிறார் (உற்ற நண்பன் என்கிறார் ஸ்ரீராமன்) ஸௌசீல்யம் - தாழ்மையுடையவர் களாலும் நெருங்கிப் பழகக்கூடியவன். ஆய்ச்சிகளோடு அகமகிழ்ந் தார். அவர்கள் அன்பில் கட்டுப்பட்டார். உரலிலும் கட்டுப்பட்டார் ஸ்ரீக்ருஷ்ணனாக. ஸர்வசக்தனான எம்பெருமான் ஸௌசீல்ய குணத் தில் புகுந்தபொழுது, பரத்வம் முதலான தன்மைகளை மறைக்க முயன்றான். "அஹம் வேத்மி" என்றால் "ஆத்மாநம் மாநுஷம் மந்யே" என்றான். திருமார்பில் பிராட்டியை (வாமனாவதாரத்தில்) மறைத்தான். மஹாபலியின் கண்ணில் படவில்லை. லக்ஷ்மீ கடா க்ஷம் அவன் பெறவில்லை.

நித்யம் கரீச திமிராவில த்ருஷ்டயோऽபி
ஸித்தாஞ்ஜனேன பவதைவ விபூஷிதாக்ஷா: ।
பச்யந்த்யுபர்யுபரி ஸஞ்சரதாமத்ருச்யம்
மாயா நிகூடமநபாய மஹாநிதிம் த்வாம் ॥ 28

நிதி போன்ற உம்மை நீராகிய ஸித்தாஞ்ஜனத்தைக்கொண்டு காண்கிறார்கள். பகவத் கடாக்ஷம் பெற்றவர்களுக்கு உம்முடைய ஸௌசீல்யம் முதலிய குணங்கள் தோன்றுமே. நாம் பார்க்க இயலவில்லை என்பது நமது குறையே. அர்ச்சாவதாரத்தில் ஸௌசீல்யாதி குணங்கள் உள்ளன. ஸித்தாஞ்ஜனம் அவைகள் இருப்பதை அப்படியே காட்டக்கூடியது. தேவரீரை சரியாக ஸேவிக்க தேவரீரே ஸித்தாஞ்ஜனம். முதல் ஸேவை ஸித்தோபாயம். இரண்டாவது ஸேவை பரம பலம். "திவ்யம் ததாமிதே சக்ஷு:" என்றான் கண்ணன். சகாவின் கலங்கின கண்களின் தோஷத்தை அவனே அகற்றினான். கண்ணைக் கொடுத்த கண்ணன், எதையும் தாங்கும் இதயத்தை அர்ஜுனனுக்கு அளிக்கவில்லை. அவன் அலறினான். "உபஸம்ஹார" என்றான். அருளாளன் ஆனபடியால் சதுர்புஜனாய் ஸேவை ஸாதித்தான். அப்பொழுது "அஹமேவபரம் தத்வம்" என்று சொன்னான். அப்பொழுது "பரப்ரஹ்மம்" என்று அறியமுடிகிறது. மாயையால் ஒளிந்து கிடக்கும் அழிவற்ற பெருநிதியான உன்னை "பச்யந்தி" அபாயம் ஏதுமில்லாத "மஹாநிதி" என்கிறார் ஸ்வாமி தேசிகன் சாச்வத நிதி என்பதாம்.

ஸத்யஸ்த்யஜந்தி வரத த்வயி பத்தபாவா:
பைதாமஹாதிஷு பதேஷ்வபி பாவபந்தம் ।
கஸ்மை ஸ்வதேத ஸுகஸஞ்சரணோத்ஸுகாய
காராக்ருஹே கநக ஸ்ருங்கலயாபி பந்த: ॥ 29

உம்மை த்யானிப்பவர்கள் பொன் விலங்கானாலும், சிறை சிறையேயாதலால் ப்ரஹ்மாதி பதங்களை ஆசைப்படுவதில்லை. உன்னிடம் ஈடுபாடு கொண்டவர்கள் பதத்தை உடனே விட்டுவிடுகின்றனர். அசையாமல், அலையாமல் மனதை வைத்து மற்றொன்றினைக் காணாவே. ராமதத்வம் கண்ட விபீஷணன் "பரித்யக்தா" என்றான் பரமஸாரமாக. பகவத் ஸாக்ஷாத்காரம் பெற்றவருக்கு மற்றவை அஸாரமே. காராக்ருஹம் போன்றதே இந்த ஸம்ஸாரம். அதைவிட்டு ஸுகமாக ஸஞ்சரிக்க வேண்டும். உலாவவேண்டும். ஸ்வர்கம் முதலான போகங்களைவிட பகவத் ஸம்பந்தம்தான் உயர்ந்தது.

ஹஸ்தீச துக்க விஷதிக்த பலாநுபந்திநி
ஆப்ரஹ்ம கீடம் அபராஹத ஸம்ப்ரயோகே ।
துஷ்கர்ம சஞ்சயவசாத் துரதிக்ரமே ந:
ப்ரத்யஸ்த்ரம் அஞ்ஜலி ரஸௌதவநிக்ரஹாஸ்த்ரே॥ 30

எம்பெருமானே நீயே ஈசன்! நாங்கள் செய்த தீவினைகள் குவிந்துகிடக்கின்றன. அவைகளை அனுபவித்தே ஆகவேண்டும் என்ற நிலை. எங்கள் மீது நிக்ரஹம் - புறக்கணித்தல் என்ற அம்பை விடுகிறாய். நிக்ரஹம் என்ற அஸ்த்ரத்திற்கு நாங்கள் செய்யும் அஞ்ஜலி எதிர் அம்பாகும்.

சஸ்த்ரம் வேறு, அஸ்த்ரம் வேறு. சஸ்த்ரம் சாதாரண அம்புகள், அஸ்த்ரம் மந்த்ரப்ரதானம். அஸ்த்ரத்தை ப்ரயோகித்தால் தடுப்பது இயலாது. See Srimad Ramayana Sloka.

ப்ரஹ்மாஸ்வயம்பூ: சதுரானநோவா
ருத்ர: த்ரினேத்ர: த்ரிபுராந்தகோவா ।
இந்த்ரோ மஹேந்த்ர: ஸுரநாயகோவா
த்ராதும் ந சக்தா யுதி ராகவத்யம் ॥

ஸுந்தரகாண்டம் 1-LI-44

இந்த்ரன், சிவன், பிரமன் முதலானோர்கள் ராமதண்டத்திற்குக் காரணாய் இருக்கும் ஒருவனை, அத்தண்டத்தினின்றும் காப்பதற்கு ஆற்றல் உடையவர்கள் அல்லர்.

பாபங்கள் சூழ்ந்துகொண்டு அதன் வசமானால் மீறமீளமுடையாதது. இவை பகவானின் நிக்ரஹ ஸங்கல்பம் எனும் அஸ்த்ரத்தை ப்ரயோகித்தால் எங்களை அழிக்கும். இதற்கு ப்ரத்யஸ்த்ரம் - எதிரம்பு அஞ்ஜலி ஒன்றுதான் - ப்ரபத்தியைக் குறிக்கும். அஞ்ஜலியாகிற முத்ரை பற்றி ஸ்தோத்ரரத்ன "த்வதங்க்ரிமுத்திஸ்ய" என்ற 28 ச்லோகத்தை அனுஸந்திக்கவும். பக்தி சரணாகதியாகிற உபர்யங்களைச் செய்ய வொட்டாமல் தடுக்கிற ப்ரதிபந்தங்களான ஸமஸ்த பாபங்களையும் இவ்வஞ்ஜலி போக்கடிக்கிறது. அஞ்ஜலி வைபவம் என்ற க்ரந்தத்திலும் அனுஸந்திக்கப்பட்டிருக்கிறது.

த்வத்பக்தி போதமவலம்பிதுமக்ஷமாணாம்
பாரம் பரம் வரதகந்துமநீஶ்வராணாம் ।
ஸ்வைரம் விலங்கயிஷதாம் பவ வாரி ராசிம்
த்வாமேவ கந்துமஸி ஸேதுரபங்குரஸ்த்வம் ॥ 31

உன்னிடத்தில் பக்தி செய்தால் உன்னை அடையலாம். அது இயலாதது. கரையை அடைய நீயே அழிவற்ற ஸேதுவாக விளங்குகிறாய். அபங்குர ஸேது: - கெட்டியான அணை - வேகாஸேது ஸ்தோத்ரம் 7ம் ச்லோகம் காண்க.

ஸம்ஸார ஸாகரத்தில் தவிப்பவர்கள் பக்தி என்கிற படகைப் பிடித்துக்கொள்ள முடியாது. உன்னையே அடைவதற்கு கவிழாத அணை நீயேதான். பெருமாளையே உபாயமாகப் பற்றி னவனுக்கு அப்பெருமாளே பலன் ஆகிறார். ஸம்ஸாரமாகிற கானலில் கஷ்டப்படுபவர்களை பகவானுடைய கடாக்ஷம் தான் உயிர்ப்பிக்கிறது.

அச்ராந்த ஸம்ஸரண கர்மநிபீடிதஸ்ய
ப்ராந்தஸ்ய மே வரதபோக மரீசிகாஸு ।
ஜீவாதுரஸ்து நிரவக்ரஹமேத மானோ
தேவ த்வதீய கருணாம்ருத த்ருஷ்டி பாத: ॥ 32

பக்தியோகத்தை அனுஷ்டிக்க சக்தியில்லாதவர்களுக்கு பகவானே உபாயமாயிருந்து ஸம்ஸாரமாகிய கடலில் கஷ்டப்ப டுபவர்களை பகவானுடைய கடாக்ஷம் உயிர்ப்பிக்கிறது.

ஸம்ஸாரத்திற்கோ (துக்கம் கலந்த வாழ்க்கை) ஓய்வு என் பதே இல்லை. நிலையற்றதான போகங்களில் ப்ரமித்துக்கொண்டு அதிலேயே சுழன்ற வண்ணம் இருக்கின்றேன். அஜ்ஞான, அசக்தி, விலம்பம், ஸஹியாமை ஆகிய நிலையில் உள்ளவர்களுக்கு எம் பெருமானே தன்னை அடையச்செய்யும் ஸேதுவாக அமைகிறான். மோக்ஷத்தைப்பற்றிய ஜ்ஞானமோ, ஆசையோ, ப்ரவ்ருத்தியோ கோடியில் ஒருவருக்குத்தானே ஏற்படுகிறது. ஸதாசார்யன் கிடைக் கக் காரணமாய் அமைந்தது விஷ்ணுவின் கடாக்ஷமே. இதை ஜாயமான கடாக்ஷம் என்பர்.

ஸம்ஸாரம் தாபத்ரயத்தைத் துணைகொண்டது. உள்ளதை உள்ளபடி அறியாமலும், மாறாக அறிந்தும் அல்லல்படுவது. ஸம் ஸாரத்தில் ப்ராந்திதான் அதிகம். தேவரீருடைய கருணையெனும் அமுதம் தோய்ந்த பார்வையில் விழுதல் - கடாக்ஷம் தான் என்னை உயிர்ப்பிக்கவேண்டும். உமது கடாக்ஷம் என்மேல் விழுந்தால்தான் வறட்சி அகலும். உமது கடாக்ஷம்தான் ஆசார்யனை அடைய வழிபண்ண வல்லது.

அந்த: ப்ரவிச்ய பகவந்நகிலஸ்ய ஜந்தோ:
ஆஸேது ஷஸ்தவ கரீசப்ருசம் தவீயாந் ।
ஸத்யம் பவேய மதுநாபி ஸஏவபூய:
ஸ்வாபாவிகீ தவ தயா யதி நாந்தராயா: ॥ 33

உன்னிடத்தில் ஸ்வாபாவிகமான தயை என்கிற கல்யாண குணம் இருக்கிறது. இதுதானே உன்னை என்னைவிட்டு வெகுதூரம் செல்ல வொட்டாமல் தடுத்து வைத்திருக்கிறது.

ஈச்வரனுடைய நல்ல எண்ணம் (ஸௌஹார்தம்) ஒரு ஸதாசார்யனை அடைவிக்க அமைகிறது. நீ என் உள்ளத்தின் அருகில் இருந்தும், நான் உனது ஸ்வரூபம், ரூபம், குணங்கள் இவைகளால் ஏற்பட்ட பெருமைகளை அறியாதுபோனேன். உனது இயற்கையான தயைதான் நான் நல்ல ஆசார்யனை அடையச்செய்கிறது.

அஜ்ஞாத நிர்கம அனாகம வேதிநம் மாம்
அந்தம் ந கிஞ்சித் அவலம்பநம் அஶ்நு வாநம் ।
ஏதாவதீம் கமயிது: பதவீம் தயாளோ:
ஶேஷாத்வலேச நயநே க இவாதிபார: ॥ 34

ஸம்ஸாரத்திலிருந்து கரையேற முடியாதவர்களைக் கைகொடுத்து ரக்ஷித்து பகவான் மேலும் உதவுவான்.

ஸம்ஸாரஸாகரத்தில் தவிப்பவனும், ஒரு நல்ல கார்யத்தைச் செய்யாதவனும், கண்கள் இருந்தும் வழிதெரியாதவனும், நான். உனது தயையன்றி எனக்குத் தஞ்சமேது! க்ஷிபாமி - தள்ளித் தொலைத்துவிடுகிறேன் என்ற நிக்ரஹ ஸங்கல்பம் பண்ணாமல், படிப்படியாக உயர்ந்த பதம் தந்தது தயா கார்யம் என்கிறார் (சரணாகதி தீபிகையில் 15ம் ச்லோகம்).

ப்ரஸ்தாந சக்தி ஸஹிதாந் ப்ரதிபோத்ய ஜந்தூந் ।
நேதும் முகுந்த யதஸே தயயா ஸஹத்வம் ॥

ஸர்வஜ்ஞனான நீ என் போன்ற ஜந்துக்களிடம் தயை கொண்டு உன்னுடைய பதத்துக்கு அழைத்துச்செல்ல விரும்புகிறாய். விச்வாமித்ரரின் பௌத்ரனாகவும், அநந்தஸூரியின் குமாரனாகப் பிறக்கச் செய்து, வாதிஹம்ஸாம்புதர் என்ற வைநதேய அம்சரான அப்புள்ளாரிடம் விசேஷ ஜ்ஞானத்தைப் பெறச்செய்து, பண்ணின உதவிகள் கூறத்தான் ஆகுமோ !

பூயோऽபி ஹந்த! வஸதி: யதிமே பவித்ரீ
யாம்யாஸு துர்விஷஹ வ்ருத்திஷு யாதனாஸு ।
ஸம்யக் பவிஷ்யதி தத: சரணாகதானாம்
ஸம்ரக்ஷிதேதி பிருதம் வரத த்வதீயம் ॥ 35

முந்திய ச்லோகத்தில் சொல்லியபடி படிப்படியாக பரஸ்வீ கரண பர்யந்தமான ஆசார்ய ப்ராப்தி ப்ரகாரத்தை விவரித்து பேரருளாளனான நீ இவ்வளவு தூரம் வழிநடத்திவந்தாய் இவ்வ ளவு ஸௌபாக்யம் இருப்பினும் காரண விசேஷங்களால் சில் வான பாபராசிகள் ஸம்பவிக்க, அது ஶரணாகதியை பூர்த்தியாக் காமல் செய்துவிடுமோ? பாகவத அபசாராதிகள் ஏற்பட்டு இது தடைபடுமே !

உமக்கு "ஶரணாகதாநாம் ஸம்ரக்ஷிதா" என்கிற மாபெ ரும் பிருதாய் அமைந்தது. தாஸஸத்யன் என்று சொன்னால் பெரு மாள் ஜயிக்கவும், நாம் தோற்கவும் வாய்ப்புண்டு. ஆதலால் "தாஸேஷு ஸத்ய இதி தாரய நாமதேயம்" என்று கூறினேன். ப்ரபந்நனுக்குபாபங்களை ஸம்பவிக்கச் செய்வதும், சரணாகதரே இல்லாமல் செய்துவிடும். உமது பிருதம் போய்விடும். வரதன் என்ற திருநாமம் உடைய தேவரீர் சரணாகதி என்கிற வரமான வஸ்து வைக் கொடுத்துவிட்டு, நரகாதிகளில் இழியச்செய்வது ந்யாயமன் றே. என்னைக் காப்பாற்றாமல் யமவேதனைக்கு உட்படும்படி விட் டீரேயாகில், ரக்ஷகன் என்ற உமது விருது போய்விடும். (See சரணாகதிதீபிகா 53 & ஸ்தோத்ரரத்னம் 25)

பர்யாகுலம் மஹதி து:க பயோநிதௌமாம்
பச்யந் கரீச ! யதி ஜோஷமவஸ்திதஸ்த்வம் ।
ஸ்பாரேக்ஷணேऽபி மிஷதி த்வயி நிர்நிமேஷம்
பாரே கரிஷ்யதி தயா தவ துர்நிவாரா ॥ 36

பகவானுடைய தயையே நம்மை ரக்ஷிக்கிறது. சரணாக தன் நரகவேதனைக்குட்பட்டால் ரக்ஷையே இல்லை. லகு சிக்ஷா திகளைப்பண்ணி, ப்ரபந்நனைக் குற்றமற்றவனாக்கி அருள்வதே ஸம்ரக்ஷணம். ஆசாபாசங்கள், பத்நீபுத்ராதிகள், ஸ்வர்கநரகாதி கள் மேலும் கீழும் அவதிப்படுவதால் ஸம்ஸாரம் என்னும் வற்றாத ஒரு பெருங்கடல் ஸர்வஜ்ஞனான ஸர்வசக்தன் இதை எல்லாம் பார்த்துக்கொண்டு வாளாயிருப்பது எங்ஙனேயோ ! உம்மாலே தடுத்து நிறுத்தமுடியாத உமது தயை என்ற பிராட்டி புருஷகாரபூதையாய் இரந்து, எம்மைக் காப்பது உறுதி. "தவ தயா துர்நிவாரா பாரேகரிஷ்யதி" என்பது உறுதி.

கிம் வா கரீச க்ருபணே மயி ரக்ஷணீயே
தர்மாதி பாஹ்ய ஸஹகாரி கவேஷணேந ।

நந்வஸ்தி விச்வ பரிபாலந ஜாகரூக:
ஸங்கல்ப ஏவ பவதோ நிபுண: ஸஹாய: II 37

ஆனுகூல்ய ஸங்கல்பம், ப்ராதிகூல்ய வர்ஜனம் என்பவை வாழ்க்கையில் அவச்யமாகக் கடைசிவரை இருக்கவேண்டும்.

நான் க்ருபணன். ஏதுமில்லாதவன், ரக்ஷிக்கப்படவேண்டியவனும் கூட, கர்மயோக ஸம்பந்தமில்லாதவன். ஆதலால் ப்ரபத்தி என்கிற உபாயத்தாலேயே ரக்ஷிக்கப்படவேண்டியவன். உமது ஸங்கல்பம் தான் நிபுணமான ஸகாயம். தர்மாதிகளை எதிர் பார்க்காமல் ஆகிஞ்ஜன்யாதிகளைப் பார்த்து, பகவான்தான் தன் ஸங்கல்பத்தினால் ரக்ஷிக்கவேண்டும்.

நிர்யந்த்ரணம் பரிணமந்தி ந யாவதேதே
நீரந்த்ர துஷ்க்ருத பவா துரித ப்ரரோஹா: I
தாவந்நசேத் த்வமுபகச்சஸி சார்ங்கதந்வா
சக்யம் த்வயாபி நஹிவாரயிதும் கரீச II 38

பாபங்களைச் செய்தால் மேலும் பாபங்களைச் செய்ய நேரிடும். இந்த நிலையைத் தடுக்கவேண்டும். பகவான் வில்லும், கையுமாக விரைந்து வந்து நம்முடைய பாபங்களை அழிக்க வேண்டும்.

நான் செய்திருக்கும் தீய செயல்களை கணக்கிடமுடியாது. மேலும் மேலும் அவை அடர்த்தியாக வளர்ந்துகொண்டே இருக்கின்றன. எனது பாபங்கள் தடையேதுமின்றி பரிணமிப்பதற்குமுன் காத்திடுவாய். நீர் சார்ங்கம் வில்லாண்டவனாயிருந்து எம்மிடத்தில் த்வரையுடன் எழுந்தருளவேண்டும்.

யாவந் ந பச்யதி நி காமம் அமர்ஷணோமாம்
ப்ரூபங்க பீஷண கராலமுக: க்ருதாந்த: I
தாவத் பதந்து மயிதே பகவந் தயாளோ:
உந்நித்ர பத்ம கலிகா மதுரா: கடாக்ஷா: II 39

யமகிங்கர்களால் பயமுண்டாவதற்குமுன் நீர் என்னை ரக்ஷணம் செய்யவேண்டும்.

யமனுடைய பார்வை என்மீது விழுவதற்கு முன்னாலேயே தயை மிகுந்தவனான உனது மலர்ந்த தாமரைமொட்டு போன்ற

கடாக்ஷங்கள் என்மீது விழவேண்டுமே ! க்ருதாந்த: - யமன் அடுத்த ஜன்மத்தில் சரணாகதியின் பலன் பலிக்கட்டுமே என்று வாளாவி ருக்கவேண்டாமென்று ப்ரார்த்திக்கிறார். ஏனெனில் இந்த சரீரம் முடியும்பொழுதே மோக்ஷத்தை அடையவேண்டுமே ! பகவன் என் பதால் பரத்வமும், தயாளோ என்பதால் ஸௌலப்யம் கூடிய எம் பெருமானைக் கூறுகின்றன.

ஸ த்வம் ஸ ஏவ ரபஸோ பவதௌப வாஹ்ய:
சக்ரம் தேதேவ சித தாரமஹம் ச பால்ய: ।
ஸாதாரணே த்வயி கரீச ஸமஸ்த ஜந்தோ:
மாதங்க மாநுஷ பிதா ந விசேஷ ஹேது: ॥ 40

ரக்ஷண விஷயத்தில் உமக்கு எல்லா ஜந்துக்களும் ஸமம். என்னை ரக்ஷிப்பதில் உமக்கு ஏன் விளம்பம்? நீர் வைலக்ஷண்யம் காட்டுகிறீரோ? ஆச்ரித ரக்ஷணத்தில் கண்ணும் கருத்தும் உடைய வன் நீர்தான் ஸர்வஜ்ஞன், ஸர்வசக்தன், ஸமஸ்த ஜந்துக்களின் ஸம்ரக்ஷணம் தானே உமது லக்ஷ்யம்.

இந்த ச்லோகத்தில் கஜேந்த்ர ரக்ஷணம் சொல்லப்படுகிற து. திருவல்லிக்கேணியில் கருடாரூடனாக வரதன் ஸேவைஸா திப்பதைக் கூறியபடி. (திருமங்கைமன்னன் பெரியதிருமொழி 2-3-9ம் பாசுரம்)

நிர்வாபயிஷ்யதி கதா கரிசைலதாமந்
துர்வார கர்ம பரிபாக மஹாதவாக்நிம் ।
ப்ராசீன து:கமபி மே ஸுகயந்நிவத்வத்
பாதாரவிந்த பரிசார ஏஸ ப்ரவாஹ: ॥ 41

உமது செந்தாமரை மலரையொத்த திருவடியில் கைங்கர் யம் பண்ணவேணும். அதில் ஏற்படும் ரஸம் விலக்ஷணமானது. அந்த கைங்கர்ய ரஸப்ரவாஹம் எனது பயங்கரமான விலக்கமுடி யாத பாபமாகிற காட்டுத்தீயை எப்பொழுதுதான் அணைக்குமோ? கைங்கர்ய ரஸம் கிடைத்துவிட்டால் கடந்த காலத்திய கஷ்ட மெல்லாம் ஸுகத்தையன்றோ அளித்துவிடும். துர்வார - போக்க டிக்க முடியாத, கஜேந்த்ரனைக் காக்க எழுந்தருள்வது போலவே பல முதலைகளால் ஈர்க்கப்பெற்று ஸம்ஸாரத்தில் தவிக்கும் என் னையும் காத்தருளவேண்டும் என்கிறார். அவனுடைய த்வரை வேண்டப்படுகின்றது. பரதன் "கதாத்ரக்ஷ்யாமி சக்ஷுஷா" என்று

காட்டில் திரியவில்லையா. இவ்வகையில் பல இடங்களில் "கதா" என்கிற சாதக வ்ருத்தியைக் காணலாம். உனது திருவடிகளில் பரிசர்யை பண்ணும்போது உண்டாகும் ரஸம் அலாதியானது. உமது திருவடிகளில் கைங்கர்ய ரஸம் எப்பொழுதும் வெள்ளமிட்டு, அத்தால் என் பாபமாகிற காட்டுத்தீ அணையவேண்டும்.

**முக்த: ஸ்வயம் ஸுக்ருத துஷ்க்ருத ஸ்ருங்கலாப்யாம்**
**அர்சிர் முகை: அதிக்ருதை: அதிவாஹிதாத்வா ।**
**ஸ்வச்சந்த கிங்கரதயா பவத: கரீச**
**ஸ்வாபாவிகம் ப்ரதிலபேய மஹாதிகாரம் ॥ 42**

புண்யபாபங்களிலிருந்து விடுபட்டு, மோக்ஷம் அடைந்து, யதாமநோரதம் கைங்கர்யம் செய்யவேண்டும்.

என்னை முதற்படியாக அதிகாரி புருஷர்கள் அழைத்துச் செல்கின்றனர். இனி நான் விரும்பியபடி கைங்கர்யம் செய்யும் பேற்றினையும் பெற்றுவிட்டேன். உன் அருளினாலேயே இது எனக்கு இயற்கையாக கிடைத்த பெரிய அதிகாரமே.

அதிகாரி புருஷர்கள் - எம்பெருமானாலே ப்ரபந்நர்கள் வழி நடக்க அவர்களுக்கு உபகாரர்களாக நியமிக்கப்பட்டவர்கள்.

ஸ்வாபாவிகம் - நித்ய தாஸஸ்ய ஸ்வபாவமானது, இந்த மஹாதிகாரம் ப்ரபந்நனுக்கு ஏற்படுவது.

**த்வம் ஸேத் ப்ரஸீதஸி தவாஸ்மி ஸமீபதஸ்சேத்**
**த்வய்யஸ்தி பக்திரனகா கரிசைல நாத ।**
**ஸம்ஸ்ருஜ்யதே யதி ச தாஸ ஜனஸ் த்வதீய:**
**ஸம்ஸார ஏஷ பகவந் அபவர்க ஏவ ॥ 43**

உம்முடைய க்ருபையும் பெற்று, உமதருகில் வர்த்தித்து, உம்மிடத்தில் பக்தியும் வளர்ந்துவந்து, பாகவதஸமாகமும் கிட்டிற்றேயாகில் இந்த ஸம்ஸாரமே மோக்ஷமாகிவிடுகிறது. (See also 49th Sloka)

அநகா - ஒப்பற்றதான, ஸம்ஸ்ருஜ்யதே - இணையுமாகில், ஏஷ: - இந்நிக்ருஷ்டமான ஸம்ஸாரம், அபவர்கஏவ - மோக்ஷமே.

உமது கடாக்ஷம் பெறப்பெறின் இதுவே மோக்ஷமாகிவிடும். உமது ஸமீபத்தில் இருப்பது என்று ஏற்பட்டுவிட்டால் பகவத் ப்ரஸாதம் அபேக்ஷிதம். நீர் ப்ரஸந்நமானால் ஸாமீப்யம் என்பதும் மோக்ஷமே.

உமது ஸமீபத்தில் இருக்கும் நிலையை அடைந்துவிட்டேன். பாகவத ஸம்ஸர்கம் கிடைப்பது மிகவும் அறிது. பாகவத சேஷமாயிருந்தால் சேஷியும் உகப்பான், பகவத் ப்ரஸாதமும் இங்குதான் கிடைக்கிறது. அதனால் சமீபத்தில் இருந்து ஸேவிக்கும் பாக்யமும் கிடைக்கிறது. பகவத் பக்தி பாகவத பக்தியுடன் கலக்கிறது. இணைந்து செயல்படும் நிலையும் இங்கே கிடைத்துவிட்டால் மோக்ஷநுபவம் இங்கேயே கிடைத்துவிடும்.

“த்வம் சேத் ப்ரஸீதஸி” - அவன் க்ருபை செய்தருளினால் அவனிடம் பக்தி இருக்கவேண்டும். அருள்பெருவதற்கு. அதற்கு அவன் ஸமீபத்தில் இருக்கவேண்டும் - அதை “தவாஸ்மி ஸமீபஸ்சேத்” என்ற பதத்தால் தெரிவிக்கப்பட்டது. கேவலம் இந்த ஸம்ஸாரத்தில் இருப்பதினால் மட்டும் அபவர்கமாகிற புருஷார்த்தத்தை இழந்துவிட்டோமே என்று சோகிக்க வேண்டாம். பகவானுடைய திவ்யமங்கள விக்ரஹத்தின் சோபையில் ஈடுபட்டவர்களாய் அதன் பரீவாஹமாக பாகவத கைங்கர்யங்களைச் செய்பவர்களுக்கு மோக்ஷத்தில் பெறப்போகிற கைங்கர்யம் இங்கேயே கிட்டியதாகும்.

ஆஹூயமாநம் அநபாய விபூதி காமை:
ஆலோகலுப்த ஜகதாந்த்வயம் அநுஸ்மரேயம் ।
ஆலோஹிதாம் சுகம் அநாகுல ஹேதிஜாலம்
ஹைரண்ய கர்ப ஹயமேத ஹவிர்புஜம் த்வாம் ॥ 44

ப்ரம்மாவின் அச்வமேத யாகத்தில் ஹவிஸ்ஸை ஸ்வீகாரம் செய்துகொண்டிருக்கும் உம்மை எப்பொழுதும் த்யானிக்கும்படி அருள்புரிய வேண்டும். “காரணம்து த்யேய:” என்பது உபநிஷத் வாக்யம். நாரணன் தான் காரணம். நாரணனை நினைத்து நிறம் பெறுவேன் என்பதாம். இந்த ச்லோகத்தை 8ம் ச்லோகத்துடன் கலந்து பொருள்கொள்ளவேண்டும். உத்தரவேதியில் வரதன் அவதரித்தார். அவரை ஸ்மரித்து நிற்கவேண்டும். அத்தகைய எம்பெருமானை த்யானிக்கவேண்டும். (அநுஸ்மரேயம் - த்யானிக்க வேண்டும்)

பூயோபூய: புளக நிசிதை ரங்க கைரேத மாநா:
ஸ்தூல ஸ்தூலாந் நயந முகளைர் பிப்ரதோ பாஷ்பபிந்தூன் ।
தந்யா: கேசித் வரத பவத: ஸம்ஸதம் பூஷயந்த:
ஸ்வாந்தை: அந்தர் விநய நிப்ருதை: ஸ்வாதயந்தே பதம் தே ॥ 45

Those who are found with the entourage of Sri Varadaraja are the real wealthy people.

பாக்யசாலிகள் உம்மை ஸேவித்து மயிர்கூச்சமுற்று மெய் மறப்பர். கூச்சம் அடங்கும்முன், மறுபடியும் ஒரு அநுபவம் தோன் ற, மேலும் மயிர்கூச்சம் என்று இப்பெருமை பெற்று புலகாங்கித காத்ரராய் விளங்குவர். மேலும் ஆனந்தம் உள்ளடங்காமல், ஆனந் தக் கண்ணீர் துளிகளை உதிர்த்தவண்ணம் இருப்பர்.

முந்திய ச்லோகத்தில் பெருமாளையும், அக்னியையும் உத் தேசித்து தான் எப்பொழுதும் நினைவில் கொண்டிருப்பேன் என் றார். இந்த ச்லோகத்தில், பகவத் சேஷத்வத்தைக் காட்டிலும் பாக வத சேஷத்வம் மிகவும் போக்யமானது என்று பாகவதர்களின் வைபவத்தை விண்ணப்பிக்கிறார். வரதனுடைய கோஷ்டி மிகவும் அழகாக இருக்கிறது. அவர்களே தந்யர்கள் என்கிறார். பரமை காந்திகள் பெருமாளை ஸேவிக்க, பிறகும் அதைக்கண்டு உண் மையைக் கண்டுகொண்டு ரஸிப்பர் என்று கூறியபடி.

வரத தவ விலோகயந்தி தந்யா:
மரகத மதுர மாத்ருகாய மானம் ।
வ்யபகத பரிகர்ம வார வாணம்
ம்ருகமத பங்க விசேஷ நீலமங்கம் ॥ 46

வரத! உனது திருமேனியை ஸேவிப்பவர்கள் பாக்யசாலி கள். உனது திருமேனியோ மரகதக்குன்றிற்கு மூலப் பொருளா யும், முதல் உருவமாகவும் அமைந்துள்ளது. மேலும் திருவாபர ணங்களை அகற்றி, தனதுத் தனிப்பொலிவுடன் விளங்குகிறது. கஸ்தூரிக்குழம்பு சாத்தப்பட்டு மேலும் நீலநிறமாக உள்ளது. உம் முடைய ஸ்வாபாவிகமான திருமேனியை (திவ்யமங்கள விக்ரஹத் தை) ஸேவிக்கும்படியான பாக்யம் பெற்றவர்களே தந்யர்கள்.

அனிப்ருத பரிரம்பை: ஆஹிதாமிந்திராயா:
கநக வலய முத்ராம் கண்டதேசே ததாந: ।
பணிபதி சயனீயாத் உத்திதஸ்த்வம் ப்ரபாதே
வரத ஸதத மந்தர் மானஸம் ஸந்நிதேயா: ॥ 47

பிராட்டியினுடைய ஸ்வர்ண வலய ரேகைகளைப் பின் கழுத்தில் தரித்தவராய், அநந்தாழ்வானைவிட்டு தேவரீர் எழுந்தி

ருக்கும் திருக்கோலம் என் மனதில் ஸாந்நித்யம் செய்யவேண்டும். தேவநாயகபஞ்சாசத் 28ம் ச்லோகத்தையும் காண்க. பிராட்டி உன்னை ஆலிங்கனம் பண்ணினபோது அவள் கை வளையல்கள் உனது கழுத்தில் நன்றாகப் பதிந்துவிட்டன. காலையில் சேஷஸய னத்திலிருந்து எழுந்திருக்கும்போது, பெருமாளாகிற நீ இந்த அடை யாளத்தைப் பெரிதும் உகந்து, யாமும் ஸேவிக்கும்படி பண்ணுகி றாய். இந்த ஸேவையோடு கூடிய நீ, எனது மனத்தில் என்றைக்கு மாக எழுந்தருளியிருக்கவேண்டும்.

தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்
பபூவத்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே

என்ற ஸ்ரீமத்ராமாயண ச்லோகத்தில் சொன்னபடி, ஹர்ஷ பரவ சத்தினால் ஸீதாபிராட்டி ஆலிங்கனம் செய்தாள் ராமனை. காடாச் லேஷத்துக்கு குறிப்பாக, பெருமாளும் பிராட்டியும் இணைந்து இருக்கும் இருப்பு மக்களாகிற நமக்கு பேரின்பம் பயக்குமே.

பங்குனிஉத்தர இரவு பிராட்டிமார் சேத்தி கண்டருளி, மறு நாள் அதிகாலை ஸ்ரீபேரருளாளன் ஸாதித்தருளும் காட்சியை இந்த ச்லோகத்தில் ஸ்வாமி தேசிகன் வெளியிடும் தெய்வீக படைப்பை நம் கண்முன் நிறுத்தும்.

துரக விஹரராஜ ஸ்யந்தநாத் தோளிகாதிஷு
அதிகமதிக மந்யா மாத்ம சோபாம் ததாநம் ।
அநவதிக விபூதிம் ஹஸ்திசைலேச்வரம்த்வாம்
அநுதிந மநிமேஷைர் லோசனைர் நிர்விசேயம் ॥ 48

தேவரீருடைய ப்ரஹ்மோத்ஸவத்தில் வாஹனாதிகளில் அப்பொழுதைக்கப்பொழுது உம்மை இமையாத கண்களால் ஸேவிக்கக்கடவேன்.

குதிரை, கருடன், தேர், பல்லக்குகளில் தேவரீர் எழுந்த ருளி ஸேவைஸாதிப்பதை என்ன என்று சொல்ல இயலும். மேன் மேலும் தனது சோபையை அதிகமதிகமாக அளித்துவரும் அத்தி கிரிநாதனை தினந்தோறும் கண் இமைகொட்டாமல் ஸேவித்து அனுபவிக்கும்படி அருளும்படி ப்ரார்த்திக்கிறேன். "ரதஸ்தம் வர தம் த்ருஷ்ட்வா புனர்ஜன்மந விந்ததே" என்ற வசனம் பொருந்தும்.

நிரந்தரம் நிர்விசதஸ்த்வதீயம் அஸ்ப்ருஷ்டசிந்தாபதமாபிரூப்யம் ।
ஸத்யம் ஸபே வாரண சைலநாத வைகுண்டவாஸேऽபி
நமேபிலாஷ: ॥ 49

உம்முடைய திருமேனி அழகை இடைவிடாது அனுபவிக்கப்பெறும் எனக்கு வைகுண்ட வாஸத்திலும் ஆசை உண்டாவதில்லை.

நிரந்தரம் நிர்விஶத: - த்யானம் தைலதாரை போல விச்சின்னமில்லாமல் இருக்கவேண்டும். ஆதலால் ப்ரஹ்மோத்ஸவ ஸேவையில் பரிபூர்ணாக அநுபவித்து எப்பொழுதும் இருக்கவேண்டும் என்று விரும்புகிறார். தேவப்பெருமாள் இப்படி ஸேவைஸாதிக்க, அதை அநுபவிக்கும் எனக்கு வைகுந்தத்திலும் விருப்பமில்லை என்று சபதமிடுகிறார். உன் வடிவழகை மறவாதார் பிறவாதாரே என்பர். வாரணசைலநாதனே! நீயும் ஸத்யன். இந்த தேசமும் ஸத்யவ்ரத க்ஷேத்ரம். அடியேனும் ஸத்யம் செய்கிறேன். "இச்சுவை தவிர யான்போய் இந்திரலோகமாளும் அச்சுவை பெறினும் வேண்டேன் அரங்கமாநகருளானே" என்றார் தொண்டரடிப்பொடியாழ்வார். மேலும் "ஏரார் முயல்விட்டுக் காக்கைப்பின் போவதே" என்கிறார் கலியன் இப்படி அர்ச்சா ஸௌந்தர்யத்தில் ஈடுபட்டுள்ளனர் ஸ்வாமி தேசிகன் உள்பட.

வ்யாதந்வானோ தருணதுளஸிதாமபி: ஸ்யாமபிக்யாம்
மாதங்காத்ரௌ மரகத ருசிம் புஷ்ணதீ மானஸே ந: ।
போகைச்வர்ய ப்ரியஸஹசரை: காபிலக்ஷ்மீ கடாக்ஷை:
பூய: ச்யாமா புவந ஜநநீ தேவதா ஸந்நிதத்தாம் ॥ 50

இதை தேவப்பெருமாள் த்யான ச்லோகம் என்பர்.

ஸ்ரீபெருந்தேவித்தாயார், ஸ்ரீபேரருளாளனை எப்பொழுதும் புதிதான ஆவலோடு ஸேவித்துக்கொண்டிருப்பதால், அவளுடைய கடாக்ஷங்கள் ஸ்ரீவரதன் திருமேனிக்கு அலங்காரமாய் அமைந்துள்ளன. (பெருமாள், தாயார் ஸந்நதிகள் எதிரும், புதிருமாக அமைந்துள்ளன) ஸ்ரீரங்கத்தில் பெருமாள் - தாயார் சேர்த்தியில் ஜனங்களுக்கு ஸேவைஸாதிப்பது வருஷத்தில் ஒரேநாள்தான். (பங்குனிஉத்ரம்) திருமலையில் பெருமாள், திருச்சானூர் தாயார் சேர்த்தியில் ஸேவை கிடைக்கவே கிடைக்காது. பெருமாள்கோயிலிலே அர்ச்சாவதாரப்பெருமாள் , தாயார் சேர்த்திஸேவை அடிக்கடி அருளுகிறார்கள். வருஷத்தில் பல உத்ஸவாதிகள் சேர்த்தியிலேயே (e.g. நவராத்ரி உத்ஸவம், தூப்புல் தேசிகன் திருநக்ஷத்ரம் etc.)

பசுமையானதிருத்துழாய் மாலைகள் மார்பில் விளங்குகின்றன. இதனால் தேவரீருடைய காந்தி மேலும் பரவுகின்றன. அத்தி

கிரியில் மரகதமணியின் காந்தியை மேலும் வளர்க்கின்றாப் போலும். போகம், ஐச்வர்யம் இவற்றைத் துணைகொண்ட பிராட்டியின் கடாக்ஷங்களைப்பெற்று மேலும் நிறத்துடன் விளங்குகிறார் தேவாதிராஜன். இத்தகைய திருமேனியுடைய ஜகத்காரணனான ஒப்பற்ற தேவதையான வரதராஜன் நமது மனதில் உறைந்திருக்கவேண்டும் என்ற ப்ரார்த்தனையுடன் ஸ்தோத்ரத்தை முடிக்கிறார் ஸ்வாமி தேசிகன்.

**இதிவிஹிதமுதாரம் வேங்கடேசேந பக்த்யா**
**ச்ருதி ஸுபகமிதம் ய: ஸ்தோத்ரம் அங்கீகரோதி ।**
**கரிசிகரி விடங்க ஸ்தாயிந: கல்பவ்ருக்ஷாத்**
**பவதிபலமசேஷம் தஸ்ய ஹஸ்தாபசேயம் ॥ 51**

இந்தகம்பீரமான ஸ்தோத்ரம் ஸ்வாமி தேசிகனால், பக்தியின் மிகுதியால் இயற்றியது. இதை ஒருவன் ஏற்றுக்கொள்வானேயாகில், அத்திகிரியின் உச்சியில் இருக்கும் வரதனாகிற கல்பக வ்ருக்ஷத்திலிருந்து அவன் வேண்டும் பலம் எல்லாம் தனது கையினாலேயே பறித்துக்கொள்ள இயலும். ஶ்ருதிஸுபகம் - ச்ருதிகளுக்கும், செவிகளுக்கும் இன்பமானது.

இந்த ஸ்தோத்ரத்தை அங்கீகரிப்பவனுக்கு கைகண்ட பலனும், இவ்வண்ணம் ஸகல பல ப்ராப்தியுடன் இந்த வரதராஜ பஞ்சாசத் முடிவுபெறும்.

**கவிதார்க்கிக ஸிம்ஹாய கல்யாணகுணசாலிநே ।**
**ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ॥**



## காஞ்சீபுரம் - பெருமாள்கோயில் - பேரருளாளன்

ஆழ்வார்கள் பன்னிருவராலும் மங்களாசாஸனம் செய்யப் பட்டமையால் கோயில் எனும் திருவரங்கம் முதல் இடம் பெற்றது.

திருமலை - தொண்டரடிப்பொடியாழ்வார் தவிர்த்து மற்ற ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்றமையால் இது திவ்யதேசங்களுள் இரண்டாவது ஸ்தானம் பெற்றது.

பெருமாள்கோயில் எனும் சொல் நம் ஸம்ப்ரதாயத்தில் காஞ்சியை மட்டும் குறிக்கும். ஒரே ஊரில் ஒருங்கே பாடல் பெற்ற அநேக திவ்யதேசங்கள் அடங்கிய பெருமை காஞ்சி நகருக்கு மட்டுமே உள்ளது. பேரருளாளன் எழுந்தருளியிருக்கும் காஞ்சியையே பெருமாள்கோயில் என்று மூன்றாவது இடமாகக் கருதப்படுகிறது. ஸ்வாமி தேசிகன் மெய்விரதமான்மியம் எனும் ப்ரபந்தத்தில் "வாழ் அருளாளர்" என்று அத்திகிரிப் பெருமாளை மங்களாசாஸனம் இட்டுள்ளார்.

ஆளவந்தார் ஸ்வாமியும் பகவத் ராமானுஜரை தனது தர் சன ஸ்தாபனராக ஆக அருள்புரியும்படி வேண்டினார். அவர் ப்ரார்த்தனையும் நிறைவேறின எம்பெருமானை பேரருளாளன் எனப்போற்றினார். பகவத்ராமாநுஜருக்கும் இவ்வெம்பெருமான் பலவிதமாக அருள்பாலித்ததாக சரித்ரம்.

சோளஸிம்ஹபுர மலை அடிவாரத்தில் தேவப்பிரானும், மலைமேல் அழகியசிங்கரும் ஸேவைஸாதிக்கிறார்கள். பெருமாள் கோயிலில் அத்திகிரி அடிவாரத்தில் அழகியசிங்கரும், மலைமேல் தேவப்பிரானும் இடம் மாறி ஸேவைஸாதிக்கின்றனர். தொட்டை யாச்சாரியார் ஸ்வாமி ப்ரதி வருஷமும் காஞ்சி கருடஸேவையை ஸேவிப்பது வழக்கம். தனது வயது முதிர்ந்த நிலையில் அவரால் ஒருதடவை கருடஸேவையை கோபுர வாசலில் ஸேவிக்கமுடியா மல் வருந்தினார். அவர் ப்ரார்த்தனைக்கு இணங்கி, தேவராஜன் கருடாரூடனாகக் காட்சியளித்ததாக வரலாறு. இப்படி அருள் பாலித்த பெருமாளை "தேவாதிராஜ பஞ்சகம்" என்ற ஸ்தோத் ரத்தால் வணங்கினார். இப்படிப்பட்ட பேரருளாளனை நாம் ஸேவித்து, அவனுடைய க்ருபையைப் பெற்று, க்ருதார்த்தர்களா கச்செய்துகோள்வோமாக.

கஜேந்த்ரனின் சரணாகதி வரலாற்றை ஸ்வாமி தேசிகன் மெய்விரதமான்மியத்தில் (பாசுரம் 26ல்) விவரித்துள்ளார்.

கஜேந்த்ரன் தன்னைத்தானே ரக்ஷித்துக்கொள்ள இயலாத நிலையில், ஸ்ரீவரதனை பஹுப்ரகாரம் ஸ்தோத்ரம் பண்ணி ஒரு தாமரை புஷ்பத்தின் மத்தியில் பெருமாளை ஆவாஹனம் செய்து, தன்னை ரக்ஷித்தருளவேணும் என்று வரதனுடைய திருவடிகளில் சரணாகதி செய்தார். ஸ்ரீஹஸ்திகிரிநாதனும் ஹஸ்தீசனை கடாக்ஷித்தருளினார். "காதலுயர்ந்த களிற்றைத் திரேதையில் காத்தளித்து" என்று பதப்ரயோகம்.

ஸ்ரீகாஞ்சிநகரமும், ஸ்ரீஹஸ்திகிரியும் நினைத்தமாத்திரத்தில் முக்தியைக் கொடுக்கவல்லவை. ப்ரஹ்மாவின் நியமனத்தால் விச்வகர்மாவினால் நிர்மாணிக்கப்பட்ட இந்நகரில் புண்யகோடி விமான மத்யத்தில் ஸ்ரீவரதன் ப்ரஹ்மாவிற்கு ஸாக்ஷாத்க்ருதராக ஆனார்.

காஞ்சீ த்வயம் விளங்கும் திருப்பதி. The God and Goddess, the twin inseparable Supreme Reality shine with a special and sacred glory. The Goddess Shri bears the name Mahadevi celebrated in the Vedic Mantras (D.R.)



ஸ்ரீ:

# ஸ்ரீவைராக்ய பஞ்சகம்

இந்த ஸ்தோத்ரம் இதர ஸ்தோத்ரங்களைப்போல் ஒரு திவ்யதேசத்தில் எழுந்தருளியிருக்கும் அர்ச்சாரூபியான பகவானையோ, அல்லது அவனது திவ்யமஹிமைகளையோ, அல்லது ஆசார்யர்களையோ, அல்லது நமது ஸம்ப்ரதாய ப்ரபத்தி மார்க்கத்தைப் பற்றியோ உத்தேசித்து அமைந்த ஸ்துதியன்று. ஸ்வாமி தேசிகனின் வாழ்க்கையில் நேர்ந்த ஒரு சம்பவத்தைத் தெரியப்படுத்தும் வகையில், அவருடைய உயர்ந்த வைராக்ய நிஷ்டையை வெளியிடுவதன்மூலம் ஸ்ரீபேரருளாளனுடைய விசேஷப்பெருமையும் இதில் விளக்கப்பட்டுள்ளது.

விஜயநகர ஸாம்ராஜ்யம் விளங்கிவந்த காலத்தில் அங்கு ஓர் அரசனிடம் மஹாபண்டிதராக இருந்த வித்யாரண்யர் தமது பள்ளித்தோழமையைக் கருதி ஸ்வாமி தேசிகன் உஞ்சவ்ருத்தி செய்து வாழ்வதை நோக்கி, பண்டிதர்களை விசேஷித்து த்ரவ்யஸஹாயம் செய்து ஆதரித்து கௌரவிப்பதற்காக விஜய நகரம் வரும்படி ஒரு அழைப்பு பத்திரிகையை அனுப்பினார். அதற்கு பதிலாக ஸ்வாமி தேசிகன் இந்த ஸ்தோத்ரத்தில் உள்ள முதல் ச்லோகத்தை அனுப்பினார். இத்தால் மனம் தளராமல் வித்யாரண்யர் இத்தகைய வித்வான்களுக்கே த்ரவ்யோபகாரம் செய்யவேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் மற்றொரு வரவேற்புப் பத்திரிகையை அரசாங்க சார்பில் அனுப்பினார். அதற்கு பதிலாக இதில் உள்ள அடுத்த ஐந்து ச்லோகங்களையுடைய பதிலை அனுப்பினார் ஸ்வாமி தேசிகன். இந்த ஐந்து ச்லோகங்களை ப்ரதானமாகக்கொண்டு வைராக்க பஞ்சகம் என்னப்படுகிறது. The summary of this stotra is "The image of Varadaraja is Brahma's property as He decided to stay at Kanchi at Brahma's request. The grandson is entitled to his grandfather's property. Desika, as the grandson, was enjoying the eternal wealth of the Lord which will lead to liberation and purification of heart." Hence, he turned down the request of Vidhyaranyar to proceed to Vijayanagar to receive the financial assistance of the ruler.

ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இந்த குணம் (வைராக்யம்) மிகவும் அவச்யமானதாகையால் இந்த ஸ்தோத்ரம் இடம்பெறுகின்றது என்று பெரியோர்கள் கூறுவார்கள். ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவரும் இதில் கூறிய அநுஸந்தானத்தைப் பின்பற்றவேண்டும் என்பது தான் ஸ்வாமியின் திருவுள்ளம் என்று தோன்றுகிறது.

ஸ்வாமி தேசிகன் தனியன்களில் ஒன்றான
ராமாநுஜ தயாபாத்ரம் ஜ்ஞான வைராக்ய பூஷணம்
ஸ்ரீமத் வேங்கடநாதார்யம் வந்தே வேதாந்த தேசிகம்

ஸ்ரீப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயரால் இயற்றப்பட்டது. உத்தமமான ஜ்ஞானத்தையும், வைராக்யத்தையும் தமக்கு ஆபரணமாக உடையவர் ஸ்வாமி தேசிகன் என்று பொருள். இந்த ஸ்வாமியும், ஸ்வாமி தேசிகனுடைய சிஷ்யர்களுள் ஒருவர். இந்தத் தனியன் ஆசார்யர் காலத்திலேயே இயற்றப்பட்டு அவருடைய அங்கீகாரம் பெற்றது.

இந்த ஸ்துதிக்கு மூலம் திருவாய்மொழி 3-9-1ம் பாசுரம் “சொன்னால் விரோதமிது”

நிரவதிக ஸம்பத்தையுடைய நித்யகல்யாணகுண மஹோததியாயிருக்கிற எம்பெருமானை ஒழிய “க்ஷுத்ர நரேந்த்ர”ர்களிடம் நரஸ்துதி செய்யமாட்டோம். குசேலருக்கு யோக ஐச்வர்யம் கொடுத்த எம்பெருமானையே ஸேவிப்பதில் உறுதிகொண்டோம் என்று ஸ்வாமி தேசிகன் அருளியுள்ளார். ஒன்றிலும் பற்றில்லாமல் விரக்தனாக தானாகவே அமைந்த வஸ்துக்களாலேயே தேஹ யாத்ரை நடந்துவிடும். பகவானிடத்திலும் மோக்ஷத்தைத் தவிர இதர ஐஹிகப் பொருள்களைவிரும்பாத பரமைகாந்தி மற்றொருவரிடமிருந்தும் சரீரயாத்ரைக்காக ஒரு த்ருணத்தையும் யாசிக்க மாட்டோம் என்கிறார் ஆசார்யர்.



ஸ்ரீ:

# வைராக்யபஞ்சகம்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்க்கிககேஸரீ ।
வேதாந்தாசார்யவர்யோ மே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

**க்ஷோணீ கோண சதாம்ச பாலந கலா துர்வார கர்வாநல -**
**க்ஷுப்யத் க்ஷுத்ர நரேந்த்ர சாடு ரசனா தந்யாந்ந மந்யாமஹே ।**
**தேவம் ஸேவிதுமேவ நிஸ்சிநுமஹே யோऽஸௌ தயாளு:புரா**
**தாநா முஷ்டி முசே குசேல முநயே தத்தேஸ்ம வித்தேசதாம் ॥ 1**

பூமண்டலத்தில் ஒரு சிறு பகுதியை ஆளும் சிற்றரசர் இறுமாப்பினால் குமுறுகிறார். அவருக்கு தாஸ்யராக முகஸ்துதி பேசி, மோஹித்து கிடப்பவர்களும் உண்டு. அப்படிப்பட்டவர்களை என் மனதில் கொஞ்சமும் கருதமாட்டேன். தேவதேவனையே வழி பட விரும்புகிறேன். அவ்வெம்பெருமானல்லவோ குசேலருக்கு குபேர ஐச்வர்யத்தைக் கொடுத்தருளினான். பற்றில்லாத விரக்தன் உண்டிக்கும், உடைக்குமாக சிற்றரசரை ஆச்ரயிக்கவேண்டியதில் லை.

ஸிலம் கிமநலம் பவேதநலமௌதரம் பாதிதும்
பய: ப்ரஸ்ருதி பூரகம் கிமுந தாரகம் ஸாரஸம் ।
அயத்ந மல மல்லகம் பதி படச்சரம் கச்சரம்
பஜந்தி விபுதாமுதா ஹ்யஹஹ குக்ஷித: குக்ஷித: ॥ 2

ஸிலம் - scattered grains

களத்துமேடுகளில் இறைந்துகிடக்கும் உதிரி தான்யமணி கள் என் வயிற்றுப்பசியை தணிக்கப்போதாதோ? குளத்து நீர் ஒரு கையளவு முகந்துகொண்டால் உயிர்வாழ அமையாதோ? கிழிந்த துணிகள் வழியில் விழுந்து கிடக்கும். அவை போதாதோ மானத்தை மறைக்க. இவைகளை விட்டுவிட்டு பெரிய வித்வான்க ளும் பிழைப்புக்காகப் பண்பற்ற அரசர்களையும் அண்டி வாழ்கி றார்களே ! அந்தோ!

ஜ்வலதி ஜலதி க்ரோட க்ரீடத் க்ருபீட பவ ப்ரபா -
ப்ரதிபட படு ஜ்வாலா மாலா குலோ ஜடராநள: ।
த்ருணமபி வயம் ஸாயம் ஸம்புல்ல மல்லி மதல்லிகா
பரிமளமுசா வாசா யாசாமஹே ந மஹீச்வராந் ॥ 3

பசி தீக்கொழுந்துவிட்டு வளரட்டும். ஊஹூம் ! ஒரு நாளும் நாம் ஒரு புல்லையும் பெறக் கருதி, மாலையில் மலர்ந்த மணம் வாரிவீசும் மல்லிகை போலுள்ள மிருதுவான எனது பேச்சாலே வாயைத் திறந்து ஓர் அரசனிடமும் இரந்து எளிவரவு படமாட்டோம்.

தனத்தினால் கர்வம் பிடித்துத் திரிகிற ஈச்வரர்களின் வாசலில் உட்கார்ந்து காத்திருக்கும் ஸமயத்தில் பெரியோர்களின் பரிஹாஸத்திற்கு இடமாவதில் உள்ள துன்பத்தைச் சொல்லி யாசிப்பதின் இழிவை அடுத்த ச்லோகத்தில் கூறுகிறார்.

துரீச்வர த்வார பஹிர்விதர்திகா
துராஸிகாயை ரசிதோऽயமஞ்ஜலி: ।
யதஞ்ஜநாபம் நிரபாய மஸ்தி மே
தநஞ் ஜய ஸ்யந்தந பூஷணம் தநம் ॥ 4

இரக்கமற்ற சில பிரபுக்களின் வீட்டுத் திண்ணைகளில் அண்ணாந்து பார்த்துக்கொண்டு குந்திப் பழி கிடப்பதை நான் அறவே வெறுக்கிறேன். அதற்கு ஒரு அஞ்ஜலி தூரத்திலிருந்தே செய்கிறேன். அர்ஜுனனின் தேரை அலங்கரித்த பணம் எனக்கு மிகுதியான பணம். கருப்பு பணமல்ல, கள்ள வழியே வந்ததல்ல. அள்ள அள்ள மாளாத பணம் அது.

சரீர புதனாவதி ப்ரபு நிஷேவணா பாதநாத்
அபிந்தந தநஞ்ஜய ப்ரசமதம் தநம் தந்தநம் ।
தநஞ்ஜய விவர்தநம் தநமுதூட கோவர்தநம்
ஸுஸாதநமபாதநம் ஸுமநஸாம் ஸமாராதநம் ॥ 5

இதில் நாலாம் பாதத்தில் உள்ள நாலு பதங்களும் சரீரக சாஸ்த்ரத்திலுள்ள நாலு அத்யாயங்களின் அர்த்தங்களை ப்ரதிபாதிக்கும். ஸ்வாமி தேசிகன் ஸமயம் நேர்ந்தபோதெல்லாம் தம்முடைய க்ரந்தங்களில் ஆங்காங்கு சாரீரக சாஸ்த்ரத்தின் நான்கு அத்யாயங்களின் அர்த்தங்களை ப்ரதிபாதிப்பது வழக்கம்.

உலகில் சிலர் சாகும் வரை பிறருக்கு உழைத்து வயிற்றுப் பசியை தீர்த்துக்கொள்கிறார்கள். இப்படி நாயின் பிழைப்பு செய்து ஈட்டும் பொருள் ஒரு தனமா? தந்தனமே, மிகவும் கீழானதே. எனது தனம் அப்படியல்ல. தநஞ்ஜயனை (அர்ஜுனனை) வர்த்த

னம் செய்து காத்தது. கோவர்த்தனத்தைத் தாங்கி ஆய்ப்பாடியைக் காத்த தனம் அது. அந்த தனம் ஸுகஸாதனமானது, கெடுதியற்றது, பாகவதர்களுக்கு ஸமாராதனம் (ஸந்தோஷம்) செய்யும் தனம் அது.

தனம் எனும் சப்தத்தை பலதடவை உபயோகித்து அழிவில்லாததான, சாச்வதமான பகவானாகிற தனத்தை நிரூபிக்கிறார்.

**நாஸ்தி பித்ரார்ஜிதம் கிஞ்சிந்நமயா கிஞ்சிதார்ஜிதம் ।**
**அஸ்திமே ஹஸ்தி சைலாக்ரே வஸ்து பைதாமஹம் தநம் ॥ 6**

நான் ஸம்பாதித்ததாயோ, தன் பிதா ஸம்பாதித்ததாயோ உள்ள தனம் இல்லையேயாகிலும், பாட்டனார் ஸம்பாதித்த தனம், அதாவது ப்ரம்மாவின் அச்வமேத யாகத்தில் தோன்றிய பகவானாகிய தனம் அத்திகிரி உச்சியில் இருக்கிறது. அனைவரையும் காக்கும் பொறுப்பை ஏறிட்டுக்கொண்டு பேரருளாளன் நிற்கும் பொழுது, மற்ற தனம் தமக்கு வேண்டியதில்லை என்று தம்முடையதான நிர்ணயத்தை இந்த ச்லோகத்தினால் வெளியிட்டு, இந்த ஸ்தோத்ரத்தை முடிவுகட்டியுள்ளார் ஸ்வாமி தேசிகன்.



ஸ்ரீ:

# திருவஹீந்திரபுரம்

இந்த திவ்யதேசம் நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டில் ஒன்று; மற்றொன்று திக்கோவலூர். திருமங்கை ஆழ்வாரால் பாடப் பட்ட ஸ்தலம். பெரியதிருமொழியில் 3-1 ம் பதிகம் - இருந்தண் மாநிலம் - இவ்வூர் எம்பெருமான் விஷயமாக உள்ளது. தமிழில் ஆழ்வாரால் உரைத்தபெயர் திருவயிந்திரபுரம். ஆதிசேஷன் நிர்மாணித்த ஸ்தலம் ஆதலால் “அஹீந்த்ரபுரம்” எனப்பெயர்.

அஹீந்த்ரபுரநாதன் இந்த ஸ்தலத்திற்கு ஆதிபுருஷன். இவருக்கு ஸந்நதி கோயிலில் உள்ளது. காஞ்சீபுரத்தில் கண்டா வதாரமாக அவதரித்த ஸ்ரீவேங்கடநாதன் தமது இருபது வயதிற் குள் ஸகலசாஸ்த்ரங்களையும், ரஹஸ்ய க்ரந்தங்களையும், கருட மந்த்ரத்தையும் தம் அம்மானும், ஆசார்யரூபமான அப்புள்ளாரி டம் கற்றபின், காஞ்சீபுரத்திலிருந்து திருவஹீந்திரபுரத்திற்கு எழுந்தருளி அங்குள்ள பெருமாள், பிராட்டிமாரின் அனுக்ரஹம் பெற்று, அருகிலுள்ள ஔஷதகிரியில் ஓர் அச்வத்த மரத்தின்கீழ் அமர்ந்து ஸ்ரீவைநதேயனைக் குறித்து கருடமந்த்ரத்தை ஆவ்ருத்தி செய்தார். அதன் பலனாக ஸ்ரீவைநதேயன் ப்ரத்யக்ஷமாகி ஸ்ரீஹயக்ரீவ மந்த்ரத்தை அவருக்கு உபதேசம் பண்ணினார். ஹயக்ரீவ மந்த்ரத்தை வேங்கடநாதன் பலதடவை ஆவ்ருத்தி செய்ததன் பலனாக ஸ்ரீஹயக்ரீவன் ப்ரத்யக்ஷமாகி, தம் திருவாய் அமுதத்தை நம் ஸ்வாமிக்கு அளித்தார். ஸ்ரீவேங்கடநாதனுக்கு ஜ்ஞானமும், ப்ரவசன சக்தியும் மேன்மேல் விளங்கவேண்டுமென்று கடாக்ஷித்தார். இதன் பிறகுதான் ஸ்வாமியும் பல ஸூக்திகளை அருளிச்செய்தார். இந்த க்ரந்தங்கள் ஸம்ஸ்க்ருதம், தமிழ், ப்ராக் ருத மொழிகளிலும் அருளிச்செய்தார். இந்த ஸ்வாமி ப்ரபந்நர்க ளுக்கு வழிகாட்டியாக விளங்கியதால், பக்தர்கள் இவரை ஸ்ரீதேசிகன் என்றே அருளப்பாடினர். திருவஹீந்திரபுரம் கோயிலுக்குள் உள்ள ஸந்நிதிகளில் மிகவும் ப்ரஸித்தமானது ஸ்வாமி தேசிகன் ஸந்நிதி. ஸ்வாமி இவ்வூரில் பல வருஷங்கள் எழுந்தருளியிருந்து அவரது அடிச்சுவடுபட்ட இடமாதலால் இத்திவ்யதேசம் ப்ரபலமடைந்து விளங்குகிறது.

ஸ்வாமி தேசிகன் தங்கியிருந்த இடம் தேசிகன் திருமா ளிகை, அவர் திருக்கையாலேயே படைத்த திருக்கிணறு, அவர் திருக்கரத்தாலேயே உருவாக்கின தம் விக்ரஹமும் சேர்ந்து

இவ்வூரின் மஹிமையை மேலும் விளக்குகின்றன. இவைகளை ஸேவித்து சிஷ்யர்கள் மகிழ்ச்சி அடைகிறார்கள்.

ஸ்ரீதேசிகன் ஸந்நதியின் முன் பெரிய ஸ்வர்ணமுலாம் பூசியுள்ள த்வஜஸ்தம்பம் உள்ளது. ஸ்ரீதேவநாதனுக்கு ப்ரதி வருஷம் சித்திரை மாதம் ப்ரஹ்மோத்ஸவம் நடப்பதுபோல், ஸ்வாமி தேசிகனுக்கு புரட்டாசி மாதத்தில் வெகு விமரிசையாக பத்துநாள் ப்ரஹ்மோத்ஸவம் நடைபெறுகிறது. புரட்டாசி திருவோணத்தன்று ஸ்வாமி ரத்ன கவசம் சாத்திக்கொண்டு பன்னிருநாமத்துடன் ஔஷதகிரி மலைக்கு எழுந்தருளி ஸ்ரீஹயக்ரீவனுக்கு மங்களாசாஸனம் நடைபெறும். மலையிலிருந்து படிக்கட்டு வழியே கீழே எழுந்தருளும் காக்ஷி அத்புதமாக இருக்கும். நூற்றுக்கணக்கான ஸ்ரீவைஷ்ணவக்குழு புடைசூழ மலைஅடிவாரத்திற்கு வாத்ய கோஷங்களுடன் எழுந்தருளும் ஸேவையை எழுத்தால் வர்ணிக்க இயலாது. நேரில் கண்டு அனுபவிக்கவேண்டிய விஷயம். மிகுந்த பாக்யம் பெற்றவர்களுக்குதான் இந்தப் புண்யம் சேரும்.

ஸ்வாமி தேசிகன் அயிந்தையிலிருந்து திருத்தண்கா திவ்ய தேசம் செல்லப் புறப்பட்டு அன்றிரவு பெண்ணையாற்றின் கரையில் அப்பொழுது நத்தப்பட்டு எனப்படும் க்ராமத்தில் தங்கினார். அன்றிரவு ஸ்ரீதெய்வநாயகன் இவருடைய ஸ்வப்னத்தில் தோன்றி “பிள்ளாய் ! என்ன அழகு ! உமக்கு நாம் விசேஷ அநுக்ரஹம் எதற்காகச் செய்தோம்? நம் விஷயமாயும், விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாய விஷயமாயும் எல்லோரும் ஸுகமாகவும், ஸுலபமாகவும் அனுஸந்திக்குமாறு க்ரந்தங்களை அருளிச்செய்ய வேண்டாமோ?” என நியமித்தருள ஸ்வாமியும் மீண்டும் அயிந்தை எழுந்தருளி பல ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்தார். எம்பெருமான் அடியவர்க்குமெய்யனுடைய நியமனத்தைத் தலைகட்டுவதாக அமைந்த ஸ்ரீஸூக்திகள் – ஸ்ரீதேவநாயகபஞ்சாசத் ஸம்ஸ்க்ருத மொழியில், ஸ்ரீஅச்யுதசதகம் ப்ராக்ருதமொழியில், மும்மணிக்கோவை, நவமணிமாலை தமிழ்மொழியில்.

இந்தப் புத்தகத்தில் ஸம்ஸ்க்ருதத்தில் பரிசயமில்லாதவர்களும் ஸுலபமாக அறிந்துகொள்ளுமாறு, ச்லோகங்களையும், அர்த்தங்களையும் தமிழ் லிபியில் / மொழியில் அச்சிடப்பட்டுள்ளன.



ஸ்ரீ

# ஸ்ரீதேவநாயகபஞ்சாசத்

ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய: கவிதார்கிக கேஸரீ ।
வேதாந்தாசார்ய வர்யோமே ஸந்நிதத்தாம் ஸதாஹ்ருதி ॥

ஜ்ஞானம், பகவத்பக்தி, கைங்கர்யம் முதலான செல்வம் நிரம்பியவரும், மறைகளின் முடிதேசிகனும் ஆன, தூப்புல் வேங்கடநாதன் எனப்பெற்ற ஸ்வாமி அடியேனுடைய மனதில் நிலைத்து எழுந்தருளி இருக்கவேண்டும். ஸ்வாமி தேசிகனின் கவித்திறனைக் கண்டு ஆன்றோர்கள் வழங்கிய விருது - கவிதார்கிககேஸரீ, வேதாந்தாசார்யன் என்பது. இவரது வேதப் புலமையைக்கண்டு வியந்து ஸ்ரீரங்கநாதன் அருளியது. இந்தத் தனியனை ஸ்ரீப்ரஹ்ம தந்த்ரஸ்வதந்த்ர ஸ்வாமி (ஸ்ரீபரகாலமட ஸ்தாபகர்) அருளியது.

ப்ரணதஸுரக்ரீடப்ராந்த மந்தார மாலா
விகளித மகரந்த ஸ்நிக்த பாதாரவிந்த: ।
பசுபதி விதிபூஜ்ய: பத்ம பத்ராய தாக்ஷ:
பணிபதிபுர நாத: பாதுமாம் தேவநாத: ॥ 1

இந்திராதி தேவர்களின் மகுடங்களில் உள்ள மந்தாரமலர்களினால் உண்டான (வெளிக்கிளம்பிய) பூந்தாதிகளுடன் கூடிய தேனால் நனைந்த தாமரைகளையொத்த திருவடியிணைகளை உடையவரும், சிவன், பிரமன் இவ்விருவர்களால் வழிபாடு செய்யப்பட்டவனும், தாமரை இதழ்களைப்போல் நீண்ட திருக்கண்களையுடையவனும், திருவஹீந்திரபுரத்தின் தலைவனுமான தெய்வநாயகன் அடியேனைக் காத்தருளவேண்டும். "எம்பிரானே பரதத்வம்" என்று உணர்த்த, மற்றைய தெய்வங்கள் முறைமுறையே வந்து வழிபட்டு உய்யும்படியை அருளிச்செய்தார். இந்த திவ்யதேசப்பெருமாளை மங்களாசாஸனம் செய்யும்போது, திருமங்கையாழ்வார் "தேவர்தானவர் சென்று சென்றிறைஞ்சத் தண்திருவயிந்திர புரத்து மேவிசோதியை" என்றருளிச்செய்தார்.

தேவர்கள் அணியும் தலைப்பாகை - க்ரீடம் போன்றது. எம்பெருமான் அணியும் மணிமகுடம் முழு தலையையும் மறைக்கும். தேவர்கள் சிற்றரசர்கள் அணிவது தலைப்பாகை நடுத்தலையை மறைக்காத ஓர் தலையணியாகும். சடைமுடியன் (சிவன்), பிரமன் கர்மவச்யர்கள் ஆனபடியால் க்ரீடம் இல்லை. பத்மபத்ரா

யதாக்ஷ: என்பதால் எம்பெருமான் (பெருமாள்) ஒருவரே மோக்ஷ மளிப்பவர் என்பதை சூசிப்பிக்கிறார். பணிபதி என்பதால் பாம் பின் படங்கள் - அவைகளுக்குத் தலைவன் பெயரால் விளங்கும் திவ்யதேசம் இது. ஆதிசேஷன் தன் வாலால் பூமியைப் பிளந்து சேஷலோகத்திலிருந்து தீர்த்தம் கொண்டுவரப்பட்டு பெருமாளுக்கு ஸமர்ப்பித்ததாக ஸ்தலபுராணம். ஆதிசேஷன் சிரஸ்ஸில் உள்ள படத்தைப் போன்ற திருமண்காப்புகளை நித்யம் திருமேனியில் தரித்து எம்பெருமானை ஸேவித்துவரும் பரமபாகவதர்கள் நித்ய மாய் உறையும் திவ்யதேசம் இது. இந்த ஸ்தலத்தில் நித்யவாஸம் செய்தருளும் அடியவர்க்குமெய்யன் அடியேனைக் காத்தருளவேண் டும் என்று ப்ரார்த்தனையுடன் ஸ்தோத்ரத்தை ஆரம்பிக்கிறார். 'ப்ரணத:' என்ற ஆரம்ப பதத்தால் சரணாகதியே நம் ஸித்தாந்தத் தின் முக்யமான உபாயம் என்பதும், பூஜ்ய: என்ற பதத்தால் இவன் ஒருவனே பூஜ்யன் - அவனுக்குத் தொண்டுபுரிவதே ஜீவனின் பர மபுருஷார்த்தம் என்றும், தேவநாத: - என்பதால் இவனே பரதத் வம் என்பதும் குறிப்பிடத்தக்கது.

**தேவாதிநாத கமலா ப்ருதனேச பூர்வாம்**
**தீப்தாந்தராம் வகுள பூஷண நாத முக்யை: ।**
**ராமாநுஜ ப்ரப்ருதி: பரிபூஷிதாக்ரியாம்**
**கோப்த்ரீம் ஜகந்தி குருபங்க்திம் அஹம் ப்ரபத்யே ॥ 2**

தன்னை வழிமறித்து அநுக்ரஹம் பண்ணி அருளியபடியா லும் தேவநாதன் தொடக்கமாய் தமது ஆசார்யரான கடாம்பு அப் புள்ளார் பர்யந்தமுள்ள பரம்பரையை சரணம் புகுந்து ஸ்தோத் ரம் செய்ததாய் அருளுகிறார். எம்பெருமான் ப்ரதம குருவாகி, நம் ஆசார்யர்கள் உருவில் அவதரித்தருளினார். குருபரம்பரை ப்ரபந் நர்களைக் காக்கவந்தனர்.

மகிழம்பூ வாடினாலும் மணம் வீசும். அதுபோல் ஆழ்வார் திருவாக்கு மணம் வீசுகிறபடியால், எம்பெருமான் மகிழ்ந்து இம்மா லையை ஆழ்வாருக்கு அளித்ததாய் ஆன்றோர்கள் பகர்வர்கள்.

**திவ்யே தயா ஜலநிதெள திவிஷந் நியந்த:**
**தீர்த்தம் நிதர்சிதவத: த்ரிஜகன்னிஷேவ்யம் ।**
**ப்ராச: கவீன் நிகம ஸம்மித ஸூந்ருதோக்தீன்**
**ப்ராசேதஸ: ப்ருப்ருதிகான் ப்ரணமாம்யபீக்ஷ்ணம் ॥ 3**

உலகில் பேரிலக்கியங்களைப் படைப்பவர்களை வணங்கு கிறார். பராசரர், வ்யாஸர் முதலானோரே முதன்முதலில் சரணா கதி மார்க்கத்தை உலகுக்கு வெளியிட்டு உய்யும் வகை வகுத்தவர் கள். இவர்களை இந்த ஸ்லோகத்தில் நமஸ்கரிக்கிறார். தேவநாத னைக் கருணைக்கடலாக இங்கு உருவகப்படுத்தி, இந்தக் கடலில் எப்பொழுதும், யாவரும் பயமின்றி இரங்க, இறங்கும் துறையை, அதாவது சரணாகதி மார்க்கத்தை வால்மீகி முதலானோர் வகுத் துக் கொடுத்துள்ளனர். (ஸமுத்ரத்தில் கண்ட கண்ட இடங்களில் இறங்கி அனுஷ்டானம் செய்வது உசிதமல்ல. குறிப்பிட்ட பர்வ காலங்களில்தான் திருக்கடல்மல்லை, திருவல்லிக்கேணி, ஸேது முதலான இடங்களில்தான் செய்யவேண்டும்) நிகமஸம்மித ஸூந் ருதோக்தீன் - மறைகளுக்கு ஒப்பான, மங்களமானதும், இனிமை யானதுமான ஸ்ரீஸூக்திகள். ப்ராச: கவீன் - திருவஹீந்திரபுரத் தின் பெருமைகளை, நாலுகவிப்பெருமாளான திருமங்கைமன்னன் உலகுக்கு வெளியிட்டதால் ஸ்வாமி தேசிகன் திருவுள்ளத்தில் தோன்றினார். அனுகூலர், ப்ரதிகூலர் இரண்டுமில்லாத உதாஸீ னர் என்ற மூவகையினரை - த்ரிஜகத் நிஷேவ்யம் - என்று சரணா கதி உபாயத்தைக்கொண்டு உய்வுபெறலாம் என்கிறார். அபீக்ஷ் ணம் - அடிக்கடி, பலமுறை எனப்பொருள். உத்தாய, உத்தாய புன: புன: ப்ரணம்ய என்று ஸ்ரீபாஷ்யகாரர் அருளியபடி ப்ரதக்ஷிண நமஸ்காரங்களை ஒற்றையாகவில்லாமல் பலமுறை செய்ய ஆக்ஞை.

**மாதஸ்த்வம் அம்புருஹவாஸிநி ! கிம்சிதேத்**
**விக்ஞாப்யதே மயிகுருஷ்வ ததா ப்ரஸாதம் I**
**ஆகர்ணயிஷ்யதி யதா விபுதேச்வரஸ்தே**
**ப்ரேயாநஸௌ ப்ருதுக ஜல்பிதவத் மதுக்திம் II** 4

ஆசார்ய பரம்பரையை அனுஸந்தானம் பண்ணினபிறகு, இந்த ஸ்துதி நிர்விக்னமாய் முடிவுபெற, செங்கமலத் தாயாரை சரணம் புகுகின்றார். பெரியபிராட்டியின் கருணைவேண்டியதால் இப்படியருளியது. எம்பெருமான் அவனுடைய சொல்லை எப்படி கேட்பானோ ! என் வினைகளைத் தீர்த்து, உசிதமாக அவனைக் கேட்கும்படி அருளவேண்டும். மாதரம் பத்மமாலிநீம் என்ற ச்ருதி வாக்யத்தின்படி, வாத்ஸல்யம் நிரம்பிய ‘மாத:’ என்று குறிப்பாக உணர்த்துகிறார். ஈனச்சொல்லாகிலும் கேட்டருளவேண்டும்.

மாத: என்ற பதத்தால், இவளே உலகு யாவற்றிற்கும் தாய் என்பதை விளக்கியருள்கிறார். இப்படி இந்த ஸ்லோகத்தில், பிராட்டியிடம் புருஷகார ப்ரபத்தியை அனுஷ்டிக்கிறார்.

**நிர்விச்யமான விபவம் நிகமோத்தமாங்கை:**
**ஸ்தோதும் க்ஷமம் மமசதேவபதே ! பவந்தம் ।**
**காவ: பிபந்து கணச: கலசாம்புராசிம்**
**கிம் தேந தர்ணககணா: த்ருணமாததாநா: ॥ 5**

வேத வேதாந்தங்களால்துதிக்கப்பட்டு வரும் பெரும் புகழ் வாய்ந்த தேவரீரை சிற்றறிவோனாகிய அடியேனும் என் அறிவிற்கு ஏற்றவாறு துதிக்கிறேன். திருப்பாற்கடலில் வாய்வைத்தவனுக்கு இதரபோகங்கள் த்ருணமாகும். எம்பெருமானின் குணங்கள் கடல் போன்றவை. ஸ்ரீதேவநாதனையொழிய மற்ற விஷயங்களை அடியேன் அநுபவிப்பேனா? மற்றைய போகங்கள் உமக்குப் புல்லையொக்கும். திருப்பாற்கடலைப் பருகியே உயிர்வாழும் இளங்கன்றுக்ளோடு தம்மை ஒப்பிட்டு அவைகள் அதன் ஸாரத்தையே எதிர்பார்க்கும். அதேபோல் தாமும் பூர்வாச்சாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டே எம்பெருமானை அநுபவிப்பதால் தமக்கு எந்தவிதமான சிரமமுமில்லை. மேலும் பூர்வர்கள் இரங்கின துறையிலேயே அடியேன் இழிவதால், குற்றமற்ற காமதேனுவின் பாலேபோன்ற சுவையான இந்த அம்ருதம் யாவருக்கும் நன்மை பயக்கும்.

**அஜ்ஞாத ஸீமகமநந்த கருத்மதாத்யை:**
**தம் த்வாம் ஸமாதி நியதைரபி ஸாமித்ருஷ்டம் ।**
**துஷ்டூஷதோ மம மனோரத ஸித்திதாயீ**
**தாஸேஷு ஸத்ய இதி தாரய நாமதேயம் ॥ 6**

நித்யஸூரிகளுள் அனந்த கருடவிஷ்வக்ஸேனர்கள் மூவர்களை தலைவர்களாகவும் எம்பெருமானுக்குசிறந்த அந்தரங்க கைங்கர்யபரர்களாகவும் ஸம்ப்ரதாயத்தில் கொண்டாடப்பட்டவர்கள். அவர்களாலும் எம்பெருமானின் பெருமைகள் கரைகாணமுடியாதவை. இத்தகைய எம்பெருமானைத் துதிக்கப் புகுந்த அடியேன் மனோரதம் ஈடேற தேவரீரே அனுக்ரஹிக்கவேண்டும். கலியனுடைய மங்களாசாஸனத்தில் அநிதரஸாதாரணமாக "அடியவர்க்குமெய்யன்" என்கிற திருநாமத்தை இட்டுள்ளபடி நிலைநிறுத்திக்கொள்வீராக. எம்பெருமானையே தாரக போஷக போக்ய

மாய் கொண்டவர்களுக்கு இவர் மெய்யன். மற்றையோருக்கு "பொய்யனாகும் புறமே தொழுவார்க்கெல்லாம்" திருவாய்மொழி 9-10-7ல் அருளிச்செய்தபடி.

சேஷவ்ருத்தியும், தாஸவ்ருத்தியுமே தமக்கு ருசித்ததாய் தெரிவித்து, அதற்குத் தக்க வாசிக கைங்கர்யத்தில் அடியேன் ஈடுபட அருளவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார். ஸ்ரீவைநதேய அம்சரான பெரியாழ்வார். (திருமொழி 5-3-6ல்) எம்பெருமானை மருத்துவன் எனத்தெரிவித்ததால், கருத்மதாத்யை: எனக்குறிப்பாக உணர்த்தியுள்ளார்.

**விச்ராயணந் மம விசேஷவிதாம் அநிந்த்யாம்**
**அந்தர்வதீம் கிரமஹீந்த்ர புராதிராஜ ।**
**ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய இதீவ தபோதனோக்தம்**
**ஸ்தோதேதி ச த்வதிபாதநமவந் த்யய த்வம் ॥ 7**

தெய்வநாயக ! பெரியோர்கள் கேட்டு பாராட்டும்படி புஷ்டியுள்ள வார்த்தைகளை நீயே எனக்குத் தந்து உன்னை என் னையிட்டு இந்த ஸ்தோத்ரத்தை இட்டுக்கொள்ளவேண்டும். எம் பெருமான் எவராலும் எப்பொழுதும் துதிக்கத்தக்கவன் - ஸ்தவ்ய: ஸஹஸ்ரநாமம் நெ. 684. யாரோ எந்த மொழியிலோ எப்படியா வது செய்யும் துதியை உகந்து கொண்டாடுவான் எம்பெருமான் - ஸ்தவப்ரிய: - நெ. 685. ஸஹஸ்ரநாம் ஸ்தோதா - துதிப்பவன் - ஸஹஸ்ரநாமம் நெ. 688 திருவாய்மொழி 7-9-2ல் செஞ்சொற்களை எனக்குப் பாடித் தருவதற்காகவே உம்மை இங்கு வைத்திருக்கி றேன் என்றார் பகவான். இத்திருநாமங்கள் வீண்போகாதே தமக்குத் தகுந்த அறிவை அளிக்குமாறு ப்ரார்த்திக்கிறார்.

**ஸம்ரக்ஷணீயம் அமராதிபதே ! த்வயைவ**
**தூரம் ப்ரயாதமபி துஸ்த்யஜ காடபந்தம் ।**
**ஆக்ருஷ்டவானஸி பவாநுகம்பமாந:**
**ஸூத்ராநுபத்த சகுநி க்ரமத: ஸ்வயம்மாம் ॥ 8**

பரசமயவாதியரை வெல்ல ஸ்வாமி தேசிகனை உடனே வரும்படி அழைப்பு வந்தது. நம் தர்சனத்தைக் காக்க ஸ்வாமி திருவயிந்தையிலிருந்து நடையாக எழுந்தருளும்போது, நத்தப் பட்டு என்ற க்ராமத்தில் (பெண்ணையாற்றின் கரையில்) ஓர் இரவு தங்கியிருந்தபோது, ஸ்ரீதேவநாதன் ஸ்வாமியின் ஸ்வப்நத்தில்

தோன்றி தம்மைப் பற்றி ஸ்தோத்ரங்களை அருளும்படி நிய மித்ததாய் சரித்ரம் நவமணிமாலை எனும் தமிழ் ப்ரபந்தம் 10ம் பாசுரத்தில்

"முந்தை மறைமொய்ய வழிமொழி நீ என்று
முகுந்தன் அருள் தந்த பயன் பெற்றேன் நானே"

என்று அடியவர்க்குமெய்யனுடைய நியமனத்தைக் தலைக்கட்டுவ தற்காக அருளிச்செய்தவை என்று ஸ்வாமியே மீண்டும் அயிந்தை எழுந்தருளியதாக கூறியுள்ளார். எம்பெருமானைத் தவிர வேறு காப்பாளர் தமக்கில்லை என்பதை "த்வயைவ ஸம்ரக்ஷணீயம்" என்ற பதத்தால் தெரிவிக்கிறார். ஜீவனை மோக்ஷபர்யந்தம் பரி பூர்ணாய் ரக்ஷிப்பது மற்ற தேவதைகளால் முடியாது. அமரர்கள் ஒருவராலும் வந்து காப்பாற்றமுடியாது. "அமராதிபதே" என்ற பதத்தால் அமரர்களுக்கும் இவர் நாயகன். அவரைவிட்டு வெகு தூரம் சென்றபோதிலும், ஸ்வாமியைத் தடுத்தாட்கொண்ட நீர்மை தான் என்னே? - தூரம் ப்ரயாதமபி என்பதால் விளங்கும். துஸ்த் யஜகாடபந்தம் - விடவொண்ணாத நெருக்கமான தொடர்புள்ள வன். இது நாராயண சப்தார்த்தமாகும். த்வயைவ என்பதால் ப்ர ணவார்த்தம் - எம்பெருமான் ஒருவனுக்கே அடியேன் உரியவன் என்பதைத் தெரிவிக்கிறது. மூலமந்த்ரார்த்தம் உணர்த்தப்பட்டுள் ளது. "ஆக்ருஷ்டவாந் இதிபவாந்" என்றபதம் ஸ்ரீதேவநாதன் தம்மை வேறு இடம் செல்ல இருந்தபோது, அப்படி விடாமல் மீண்டும் அயிந்தைக்கிழுத்து வந்தமையை அநுஸந்திக்கப்பட்டி ருக்கிறது. வருடந்தோரும் தைமாதம் ஐந்தாம் தேதி இந்த தேவ நாத ஸ்வாமி பெண்ணையாற்றுக்கு எழுந்தருள்கிறார் - சிறப்பு வாய்ந்த உற்சவம்.

வ்யாமோஹிதா விவித போக மரீசிகாபி:
விச்ராந்திமத்ய லபதே விபுதைக நாத ।
கம்பீர பூர்ண மதுரம் மமதீர்பவந்தம்
க்ரீஷ்மே தடாகமிவ சீதமநுப்ரவிஷ்டா ॥ 9

சீதமான மடுவில் வெய்யிலில் அடிபட்டவன் இறங்குமாப் போலே பரப்ரஹ்மத்தை ஸ்வாமி அநுபவிக்கிறார். ஸம்ஸாரச் சூட்டில் அடிபட்டவன், அதனின்று விடுபட்டு பரப்ரஹ்மத்தை அனுபவிக்கும் ப்ரகாரம் கூறுகிறார். அந்த மடு சீதளமாயிருப்பது டன் மிகவும் ஆழமாயும், பூர்ணமாயும், மதுரமான ஜலத்தையுடை யதாயும் இருக்கும் என்றபடி.

பலவிதமான சிற்றின்பங்களால் அடியேனுடைய மதிமயங்கியது. கானல்நீரை ப்ராணிகள் தேடி ஓடி அடைவதைப்போல், இவற்றையே உண்மையான போகம் என எண்ணி ஓடியோடி பல பிறப்புகளையும் பிறந்து உழல்கிறேன். ஆசார்ய கடாக்ஷத்தால் சாஸ்த்ரம் மூலம் தேவரீருடைய பெருமைகளைச் செவிமடுத்த பிறகு, இன்று ஒரு தடாகத்தைக்கண்டு குள்ள குளிரடைந்து நீராடுவதுபோல் ஸகலவிதமான தாப சாந்தியையும் பெறுகிறது. ஜீவன் ஆசார்யர்களின் காலக்ஷேபங்களில் ஸத்விஷயங்களைக் கேட்பது பயன்பெற ஹேதுவாகும். கானலில் எப்படி நீர் கிடைக்காதோ, அப்படி இந்த ப்ரக்ருதியில் நிலையான போகம் கிடைக்காது. இன்று என் புத்தி களைப்பு நீங்கியது - விச்ராந்தி அத்யலபதே என்கிறார். பூர்ண கல்யாணகுணங்கள் நிரம்பிய நம்பி, எம்பெருமான் ஒருவனே. மற்ற யாவரும் ஸ்த்ரீப்ராயமிதரஞ்ஜகத் என்பதையும் விளக்கியபடி.

ஆழ்வாரும் திருவாய்மொழி 8-5-1 ல் (மாயக்கூத்தா பதிப்பகம்) எம்பெருமான் இருக்கும் இடம் தடாகம். அவயவங்கள் தாமரை என்று 9-7-3 ல் அருளியிருக்கிறார்.

**திவ்யேபதே ஜலநிதௌ நிகமோத்தமாங்கே**
**ஸ்வாந்தே ஸதாம் ஸவித்ரு மண்டலமத்யபாகே ।**
**ப்ரஹ்மாசலே ச பஹுமானபதே முனீனாம்**
**வ்யக்திம் தவ த்ரிதசநாத ! வதந்தி நித்யம் ॥ 10**

மிகப்பழமையான இந்த திவ்யதேசம் எம்பெருமானின் ஸ்வயம்வ்யக்த க்ஷேத்ரங்களுள் ஒன்று என்பதை அறிவித்து, இத்தேசத்தின் பெருமையை வெளியிடுகிறார். (ஒருவரது ப்ரயத்னமும் இன்றி தாமாகவே எம்பெருமான் ஆவிர்பவத்த திவ்யதேசம் ஸ்வயம்வ்யக்தம் எனப்படும்). ஜலநிதௌ - ஜலங்களுக்கு இருப்பிடமான திருப்பாற்கடலையே குறிக்கும். திருமங்கையாழ்வாரும் தம் பாசுரத்தில் "கருந்தண் மாகடல் கண்டுயின்றவனிடம் . . . திருவயிந்திரபுரமே" என்று அருளியுள்ளார். "நிகமோத்தமாங்கே" - வேதங்களில் சிரோபாகமான உபநிஷத்துகளில் எம்பெருமானைப் பரம்பொருளாக தெரிவிக்கின்றன. இவனே பரமபுருஷன் என்றபடி. ஸதாம் - எம்பெருமான் ஒருவன் உளன் என்று அறிந்தவர்களுக்கு இவர் பரதேவதை. மற்றவருக்கு அறியாதபடியால் அவர்கள் அஸத்துக்கள். அவர்கள் மனதில் கடவுள் வாழ்வதில்லை. ஸவித்ருமண்டல மத்யபாகே - எம்பெருமான் சூர்யமண்டலத்தில் நித்யவாஸம் செய்வதை "த்யேய: ஸதா ஸவித்ருமண்டல மத்ய

வர்தோ நாராயண: ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட:” என்று நரஸிம்ம புராணத்தில் உள்ள இந்த வசனத்தை தினமும் அந்தணர்கள் ஸந்த்யையை உபஸ்தானம் செய்யுங்கால் அநுஸந்திக்கிறார்கள். சூர்ய மண்டலமத்யவர்த்தி - ஸ்ரீமந்நாராயணனே “பஹுமானபதே முநீனாம்” - பலமுனிவர்களின் அபிமானஸ்தலம் என்கிறார்.

த்ரிதசநாத - மூன்றுதசைகளுக்கும் தலைவனே ! என்று ஸம்போதிக்கிறார். (1) பால்யம், கௌமாரம், யௌவனம் என்ற மூன்று நிலைகள். (2) பக்தர், முக்தர், நித்யர் (3) ஐச்வர்யார்த்தி, கைவல்யார்த்தி, மோக்ஷார்த்தியான நிலை. (4) கர்ம, ஜ்ஞான, பக்தியோக தசையில் உள்ளவர்களால் ஆராதிக்கப்படுகிற நிலை. (5) ஸ்வரூப, ஸமர்பண, பலஸமர்பண தசையிலும் இவனே தலைவன் (6) பரபக்தி, பரஜ்ஞான, பரமபக்தி என்ற மூன்று நிலைகளிலும் அடியேனை நல்வழிப்படுத்தி ஆட்கொண்டவனே. “மூவராகிய ஒருவனை” என்று கடைசிபாசுரத்தில் கலியன் அருளிச்செய்தபடி. வீரசைவனான ஒரு சோழ சிற்றரசனுக்கு, அவனுடைய இஷ்டதைவ உருவத்திலேயே அடியவர்க்குமெய்யன் ஸேவைஸாதித்ததாய் ஒரு கதை வழங்கிவருகிறது.

ரிஷிகள் கொண்டாடும் ப்ரஹ்மாசலத்திலும் இவ்வெம்பெருமான் நித்யவாஸம் செய்வதாகப் பெரியோர் பணிப்பர்.

**தீர்த்தைர்வ்ருதம் வ்ருஜிந துர்கதி நாசநார்ஹை:**
**சேஷக்ஷமா விஹகராஜ விரிஞ்ச ஜுஷ்டை: ।**
**நாதத்வயா நதஜனஸ்ய பவௌஷதேந**
**ப்ரக்யாதமௌஷதகிரிம் ப்ரணமந்திதேவா: ॥ 11**

பாபங்களை தீர்க்கிற சேஷ, கருட, ப்ரஹ்ம, பூமிதீர்த்தங்கள், ஔஷதகிரியும் உள்ள இந்த ஸ்தலம் அடியவர்களுக்கு ஸம்ஸார நோய்க்கும் விமோசனம் அருளும் உமக்கு நிவாஸஸ்தலமாக அமைந்துள்ளது. தேவர்களும் வந்து தூரத்திலேயே இருந்து வணங்குகிறார்கள். பெரியதிருமொழி 3-1-10ல் பரகாலனும் “கலிகன்றி விரித்துரைத்த பாவுதண்டமிழ் பத்திவைப் பாடி பாவங்கள் பயிலாவே” என்று அருளிச்செய்திருப்பதைக் காண்க.

விஹகராஜ ஜுஷ்டதீர்த்தம் - செழுநதி வயல்புகு திருவயிந்திரபுரமே என்று கலியன் மங்களாசாஸனம் செய்த கருடநதி. இது மேற்கு மலையில் உற்பத்தியாகி இந்த திவ்யதேசத்தில் உத்தரவாஹினியாக - வடக்கு நோக்கி பாய்ந்து வருவதாலும் ஸமுத்ரக் கரையில் தனித்து மற்றொன்றோடு கலக்காமல் செல்வதால்

மிகவும் புண்யநதி.

ப்ரஹ்மஜுஷ்டதீர்த்தம் - பிரமன் தவமியற்றியமலையிலிருந்து (கேப்பர்குவாரி என்னுமிடமிருந்து) பெறுகுவதாகப் பெரியோர் தெரிவிப்பர்.

ஸ்வாமி தேசிகன் மும்மணிக்கோவையில் (9ம் பாசுரம்) அருளிய பாசுரம் "வெற்புடனென்றி அயிந்தையில் வெவ்வினைதார் மருந்தொன்று அற்புதமாக அமர்ந்தமைகேட்டு அருள் வேண்டி நிற்க............." திருவயிந்தையில் விளங்கும் ஔஷதகிரி என்ற மலையில் கொடியதான வினைகளையெல்லாம் தீர்க்கும் மருந்தாய் தானே மலையுடம்பாய் ஆச்சர்யமாக அமர்ந்திருக்கின்றன என்பதைக் கேட்டு அவனுடைய அருளைவேண்டி பக்தர்கள் வருகிறார்கள். ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தில் ஔஷதம் ஜகத: ஸேது (288) என்று இவ்வெம்பெருமானையே குறித்து அருளியிருக்கவேண்டும்.

பவௌஷதந த்வயா - என்ற பதத்தால் ப்ரார்த்தனை செய்துகொண்டும், சேஷதீர்த்த ப்ரஸாதத்தாலும், இந்த ஸ்லோகத்தில் உடல்நோய்களை நீக்கிக்கொள்வதை இன்றும் காணலாம்.

நதஜனஸ்ய - சரணாகதர்களுடைய நமஸ்காரம்.

ப்ரணமந்திதேவா: - நிகழ்காலத்திலும் நித்யஸூரிகளான அநந்த கருடநதி முதலானோர், இந்த திவ்யதேசத்தில் தொழுதெழுவதைக் கருதுகிறார்.

**ஸ்வாதீந விச்வ விபவம் பகவன் ! விசேஷாத்**
**த்வாம் தேவநாயகம் உசந்தி பராவரஜ்ஞா: ।**
**ப்ராய: ப்ரதர்சயதும் ஏதத் இதி ப்ரதீம:**
**தத்பக்தி பூஷித தியாமிஹ தேவபாவம் ॥ 12**

உம்மிடம் பக்தியுள்ளவர்கள் இங்கேயே தேவத்தன்மையை அடைந்துவிடுகிறார்கள். அதனால் "பத்துடையவர்க்கு" தேவனாகும் நிலைவந்து விடுவதால் அந்த பக்தர்களுக்கு தலைவன் என்று பொருள் கூறுவர். எனவே தேவர்களுக்கு மட்டுமே தலைவன் என்பது தப்பு. உன்னிடத்தில் நிரவதிக பக்தி பூண்ட அடியார்களும் இங்கேயே தெய்வத்தன்மை பெற்றவர்களாக வாழ்வார்கள்.

ஸ்வாதீந விச்வ விபவம் - தனக்கு அடங்கி எல்லாப் பொருட்களையும் செல்வமாகப் பெற்றவர் எம்பெருமான். கலியனும் "வையமேழும் உண்டாலிலை வைகிய மாயவன்" என்றருளுகிறார். நான் ஈச்வரன் எனப்பறைசாற்றிவரும், எம்பெருமான் உண்டுமிழ்ந்த

எச்சில் தேவர்களும் இவன் நாயகன். பகவத் சப்தம் நாராயணாதி சப்தங்களைப்போல் எம்பெருமான் ஒருவனையே குறிக்கும் சொல் லாகும். மற்ற தைவங்களை உபசார வழக்காய் குறிக்கும். அத னால் பாகவதம், பகவத்கீதை என்ற சாஸ்த்ரங்கள் எம்பெருமான் ஸம்பந்தப்பட்டவை என உலகில் வழங்கிவருகின்றன. இதேபோல் ஜயந்தி சப்தம் கண்ணன் அவதரித்த புண்யமான ஸமயத்தையே கூறும்.

தேவநாயகம் - "தேவர் தானவர் சென்று சென்றிரைஞ் சத்தன் திருவயிந்திரபுரத்து மேவு சோதி"யான இவனே தேவர் தலைவன்.

பராவரஜ்ஞா: - பலவாறாக பராவர தத்வங்களை விளக் கிய வேதம் தமிழ் செய்த மாறன், பரதத்வம் இவனே என்று "ஒன் றும் தேவும் உலகும்" பதிகத்தில் (திருவாய்மொழி 4-10-1) அருளி யுள்ளார்.

த்வத்பக்தி பூஷிததியாம் - தேவரீரிடம் பக்தியால் சிறப்ப டைந்த புத்தியுடையவர்களுக்கு - வெறும் ஜ்ஞானத்தால் மோக்ஷம் ஸித்திக்காது. பக்திரூபபன்னமான ஜ்ஞானமே தேவை. எம்பெரு மானை அறிவது ஜ்ஞானமூலம். அது முதற்படி. அறிந்து அவனை த்யானம், சரணாகதி என்றவாறான ஓர் உபாயத்தில் மூண்டால் தான் அவனை அடையமுடியும் என அறிவித்தபடி.

மும்மணிக்கோவை 10ம் பாசுரத்தில்

"நின்றனுக்கு நிகர் நின்னடி அடைவார்" என்றருளியபடி உனக்கு நிகர் உன் திருவடியை அடைந்தவர்களே ! உன்னிடம் பக்தியொன்றினைக்கொண்டே அவர்கள் ஜீவித்திருப்பர்.

**தத்வாநி யாநி சிதசித் ப்ரவிபாக வந்தி**
**த்ரய்யந்த வ்ருத்த கணிதாநி ஸிதாஸிதாநி ।**
**தீவ்யந்தி தாந்யஹிபுரந்தர தாம நாத**
**திவ்யாஸ்த்ர பூஷணதயாதவ விக்ரஹாஸ்மிந் ॥ 13**

தெய்வநாயகனே ! சேதநந், அசேதநந் என்ற பிரிவு கொண் டனவும் ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார், ஸ்ரீபாஷ்யகாரர் போன்ற மஹநீயர்களால் எண்ணப்பட்டவையுமான ப்ரக்ருதி, மஹத், அஹங் காரம், மனம், ஜ்ஞானேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள், ஐந்து பூதங்கள் என 24 தத்வங்களும் இவற்றை அனுபவிக்க ஏற்பட்ட ஜீவன் முதலியவையாவும், தேவரீர் திருமேனியில் அஸ்த்ரங்களும்,

திருவாபரணங்களுமாய் ப்ரகாசிக்கின்றன.

**பூஷாயுதைரதிகதம் நிஜகாந்தி ஹேதோ:**
**புக்தம் ப்ரயாபிரதிமேஷு விலோசனாபி: I**
**ப்ரத்யங்க பூர்ண ஸுஷமா ஸுபகம் வபுஸ்தே**
**த்ருஷ்ட்வா த்ருசௌ விபுதநாத நத்ருப்யதோமே II 14**

எம்பெருமானின் திருமேனி அவ்யாஜஸுந்தரமானது. ஒவ்வொரு அவயத்தை ஸேவிக்கும்போதும் பேரழகு நிரம்பி வழிகிறது. திருவாபரணங்களும், திருவாழி திருச்சங்கு முதலான திவ்யாயுதங்களும் தாங்கள் நிறம் பெறுவதற்காகவே எம்பெருமானை அண்டின. நின் அழகு மறவாதார் பிறவாதாரே என நவமணிமாலையில் ஸ்வாமியே அருளிச்செய்தபடி எம்பெருமான் திருமேனியை ஒருமுறையேனும் ஸேவித்தால், ஸகல பாபங்களும் நம்மைவிட்டு அகல்வதாய் பிரமாணங்கள் உள்ளன. (தமிழ் ப்ரபந்தம் பாசுரம் 6ல் ருக்மணிப் பிராட்டி "சதஜன்மபி: ஸ்யாத்" சொன்னதுபோல் அல்லாமல் தேசிகநாயகி நிறைவைப் பெற்றவர் - பிறவியை அடையார் என்கிறாள்) 13 & 14ம் ஸ்லோகங்கள் திருமேனி வர்ணனமே.

**வேதேஷு நிர்ஜரபதே நிகிலேஷ்வதீதம்**
**வ்யாஸாதிபிர் பஹுமதம் தவஸூக்தமக்ரியம் I**
**அங்காந்யமூனி பவத: ஸுபகாந்யதீதே**
**விச்வம் விபோ ஜனிதவந்தி விரிஞ்சபூர்வம் II 15**

தெய்வநாயகனே ! நான்கு வேதங்களிலும் ஓதப்படுவதும், வ்யாஸர் முதலானோரால் வெகுவாகப் போற்றப்பட்டதும், எல்லா அந்தணர்களாலும் தேவரீருடைய திருவாராதனத்திற்கென்றே எடுத்துப் பயன்படுத்துவதும் தேவரீரையே பரம்பொருளாய் காட்டுவதுமான, புருஷஸூக்தம் தேவரீருடைய திருமேனியைக் கூறி, இதனின்றும் பிரமனைக் கொண்டு உலகத்தினைப் படைத்ததாக விளம்புகிறது. ஆபஸ்தம்ப, போதாயன, வாதூல ஸூத்ரங்களில் புருஷஸூக்தம் பகவதாரதனத்தில் விநியோகப்பட்டுள்ளது.

நிர்ஜரபதே - கிழத்தனமற்ற தேவர்களின் தலைவனே ! சரீரம் கிழத்தனம், மரணம், வருத்தம், நீர்வேட்கைகள் போன்ற குற்றங்கள் எம்பெருமானிடம் கழிந்தபடியால், இவ்விதமான அவத்யங்களற்ற சுத்தஸத்வமான திவ்யமங்களவிக்ரஹம் உண்டு என்றருளுகிறார்.

எம்பெருமானையே பரதேவதையாக புருஷஸூக்தம் தெரிவிப்பதால், இது எம்பெருமானைப்பற்றிய ஸூக்தமாகும்.

'ஹ்ரீஸ்சதே லக்ஷ்மீஸ்ச பத்நியௌ' என எம்பெருமானின் அஸாதாரண சிஹ்னமான லக்ஷ்மீ பூமிபிராட்டி பதித்வத்தை வெளியிடுகிறது புருஷஸூக்தம். அதனால் "தவஸூக்தம்" என்று ஸ்வாமி தேசிகன் அருளியுள்ளார். அக்ரியம் - மிக உயர்வானது. ஒவ்வொரு சேதனனுடையவும் ஹ்ருதயத்தில் (அந்தர்யாமியாக) உறைவதால் புருஷன் எனப்பெயர். தவிர நமது வல்வினைகளை எல்லாம் தொலைப்பதால் 'புருஷன்' விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் புருஷ: (407) என்ற பெயருக்குப் பொருள் The purifier because He purifies all by nature. Sri Rama alone who is considered to be the purusha in every way and is the Purushothama. Sabari said to Him "Sir, I have been purified by Thy charming eyes" - Valmiki Ramayana Aranyakanda LXXIV - 13 திருப்பாவையில் ஆண்டாள் வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்க, போயபிழையும் புகுதருவான் நின்றனவும் - என்று அருளிச் செய்துள்ளார்.

**தேவேச்வரத்வமிஹ தர்சயிதும் க்ஷமஸ்வ**
**நாத த்வயாபி சிரஸா வித்ருத: கிரீட: ।**
**ஏகீக்ருத த்யுமணி பிம்ப ஸஹஸ்ர தீப்தி:**
**நிர்மூலயந் மனஸிமே நிபிடம் தமிச்ரம் ॥ 16**

இப்படி பலபடியாய் எம்பெருமானுக்கு திவ்யமான திருமேனி உண்டு என நிலைநாட்டி, இனி அவனுடைய ஒவ்வொரு அவயமாய் அனுபவிக்க தொடர்கிறார். 16 முதல் 45ம் ச்லோகம் வரை திவ்யக்ரீடம், குந்தளம், லலாடம், ஊர்த்வபுண்ட்ரம், முதல் பாதத்தில் திவ்யாங்குளி, நகரத்நபங்க்தி, திவ்யரேகைகள், திருவடித்துகள் இவைகளின் சோபையை அனுபவித்துள்ளார்.

திருப்பாணாழ்வார், பெரியாழ்வார் போன்றோர் பாதாதி கேசாந்தமாய் எம்பெருமானை அனுபவித்திருக்க, ஸ்வாமி தேசிகனோ திருமுடி முதல் திருவரை வரையில் ஈடுபடுவதற்குத் தாம் நாயிகா பாவத்தை மேற்கொண்டதே காரணமாகும்.

எம்பெருமானுக்கே கிரீடம் உண்டு. மற்றையோர் கர்மவச்யரானபடியால், க்ரீடமில்லை. இதர தேவதைகளுக்கு தலைப்பாகை உண்டே தவிர க்ரீடமில்லை. தானே பரதேவதை என்பதை ஸ்ரீரங்கநாதன் க்ரீடத்தை தமது திருக்கையால் தொட்டுக்

காட்டுகிறார். திருப்பாற்கடலில் ப்ரஹ்லாதாழ்வான் குமாரனான விரோசனன் (அசுரன்) எம்பெருமானை ஸேவித்துப் பணிசெய்வது போல் பாசாங்கு செய்து, எம்பெருமானின் க்ரீடத்தைப் பறித்துச் சென்றான். முனிவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கி, பக்ஷிராஜன் அதை மீட்டுவர பாதாளம் சென்று, அசுரனுடன் போரிட்டு அதை மீட்டி வந்து, பூவுலகில் கண்ணன் திருமுடியில் ஸமர்ப்பிக்க, அது நிலைபெற்றதாய் திருநாராயணபுர ஸ்தலபுராணத்தில் உள்ள கதையை ஸ்வாமி தேசிகனும் யாதவாப்யுதத்தில் அருளிச்செய் துள்ளார். திருநாராயணபுரத்தில் ப்ரதி வருஷமும் வைரமுடி ஸேவை விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. கருடன் விரோச னனிடம் சண்டயிட்ட விஷயம் ஸ்வாமி தேசிகனால் கருடபஞ்சா சத் 49ம் ஸ்லோகத்தில் விளக்கப்பட்டுள்ளது.

பொற்சுடர்க் குன்றன்ன பூந்தண் முடியற்கு என ஆழ்வார் அருளியபடி, மலையொத்த கிரீடத்தை சிரமப்பட்டு தாங்குவதை “வித்ருத:” என்ற பதத்தினால் விளக்குகிறார்.

எம்பெருமான் தான் பரதேவதையா? மற்றவரா ? என்பது தொடங்கி எத்தனை வகை அஜ்ஞானம், இருள் மருள் உண்டோ அவையாவும் இந்த முடிச்சோதியைக்கொண்டு நீங்கிவிட்டது என் கிறார் - நிர்மூலயந் என்று வேறொடு களை கின்றதாய், இத்த கைய மருளையும், இருளையும் நீக்குவதற்காக எனப் பொருள் கொள்ளவும்.

**முக்தஸ்மிதாம்ருத சுபேந முகேந்துனா தே**
**ஸம்கம்ய ஸம்ஸரண ஸம்ஜ்வர சாந்தயேந: ।**
**ஸம்பத்யதே விபுதநாத ஸமாதியோக்யா**
**சர்வர்யஸௌ குடிளகுந்தள காந்திரூபே ॥ 17**

தெய்வநாயகனே ! இரவில் ஒளிரும் சந்திரன் மக்களுக்கு, பகலில் சூர்யனால் உண்டான வெக்கையைத் தணித்து தமது அமுதமயமான கிரணங்களால் ஆச்வாசப்படுத்துவதுபோல், தேவரீருடைய திருக்குழல்கற்றையாகிய இரவுடன் கூடிய திருமுக மண்டலமாகிற சந்த்ரபிம்பம், எங்களது சம்சாரமாகிற ஜ்வரத்தை புன் சிரிப்புடன் தவழும் திருமுக ஸேவையைத் தந்து, பயத்தை நீக்கி எங்கள் த்யானத்துக்கு உகந்ததாய் விளங்குகிறது.

குடிலகுந்தள காந்திரூபா - சுருண்ட திருக்குழலின் ஒளி. கருங்கூந்தல்கொண்ட தெய்வநாயகன் நம்மை ரக்ஷிக்கட்டும்.

பிம்பாதரம் விகச பங்கஜ லோசனம் தே
லம்பாளகம் லலித குண்டல தர்சனீசம் ।
காந்தம் முகம் கனககைதக கர்ணபூரம்
ஸ்வாந்தம் விபூஷயதி தேவபதே மதீயம் ॥ 18

தேவநாதனே ! கொவ்வைச் செவ்வாயுடனும், மலர்ந்த செந்தாமரை போன்ற திருக்கண்களுடனும், அசையும் நறுங்குஞ்சியுடனும், எடுப்பான குண்டலங்களால் அழகிய தோற்றமுள்ளதும், தங்க நிற தாழைமடல்களையே செவிப்பூவாயுடையவனும், மனத்தையும், கண்களையும் காந்தம் போல் ஈர்ப்பதுமான தேவரீர் திருமுகமண்டலம் அடியேன் மனதை அலங்கரிக்கிறது.

இந்த ச்லோகத்தில், திருமுகமண்டலத்தின் ஸமுதாய சோபையை அநுபவிக்கிறார். தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவ மக்ஷுணி என்று ச்ருதி விளக்கியதுபோல், எம்பெருமான் எந்த அவதாரம் எடுத்தாலும் இவனே பரமாத்மா என்பதை செந்தாமரைக் கண்கள் காட்டிக்கொடுத்துவிடுகின்றன.

விகதபங்கஜலோசனம் - அலர்ந்த தாமரையையொத்த திருக்கண்கள் என்ற பொருளுடையது.

கநககைதககர்ணபூரம் - காதுகளுக்கும், சிரஸ்ஸிற்கும் இடையில் வைத்துக்கொள்ளும் பூக்களுக்கு செவிப்பூ - கர்ணபூரம் எனப்பெயர்.

ஸ்வாந்தம் விபூஷயதி - அடியேன் உள்ளத்தில் அலங்காரமய் எழுந்தருளியிருக்கிறது. இத்தனை நாட்கள் ராகாதிகளில் மண்டியிருந்த ஹ்ருதயத்திற்கு அணியாய் விளங்குகிறது என்கிறார்.

லப்தா திதௌ க்வசிதியம் ரஜனீகரணே
லக்ஷ்மீ:ஸ்திரா ஸுரபதே பவதோலலாடே ।
யத்ஸ்வேத பிந்துகணிகோத்கத புத்திதாந்த:
த்ர்யக்ஷ: புராஸபுருஷோऽஜநி சூலபாணி: ॥ 19

அஷ்டமிதிதியில் மட்டும் சந்த்ரன் பாதிவட்டமாய் தோற்றமளிப்பான். மற்றொரு பாதி இருண்டிருக்கும். இதைக் கவிகள் நெற்றிக்கு உவமையாகக் கூறுவர்.

லக்ஷ்மீ: ஸ்திரா ஸுரபதே பவதோலலாடே - சந்திரனுக்கு

தேவரீருடைய திருநெற்றியைப்போன்ற அமைப்பை அஷ்டமிகளில் அடைந்தபடியால் (தேவரீர் கண்ணனாக அவதரித்த அஷ்டமியன்றுமட்டும்) ஒரே சீரான சோபை நிலைத்தது என்கிறார்.

நமது ஸம்ப்ரதாயத்தில் "ஸ்ரீய: பதியாய்" என்ற திருநாமத்தைக்கொண்டே மணிப்ரவாள நடையில், க்ரந்தங்களைத் தொடங்குகிறோம். இப்படி பிராட்டி ஸாந்நித்யம் ஒரு அவசரத்திலே இருப்பதைக்கொண்டே சூன்ய நெற்றியிராமல் அங்கு மஞ்சள் திலகம் போல் அணிவது எல்லோராலும் அனுஷ்டிக்கப்படுகிறது.

ஸபுருஷ: - இவ்வித அழகிய திருக்கழுத்திலிருந்தே முன் பொறுநாள் வியர்வைத்துளியில் சூலபாணியான சேஷபூதனான ருத்ரன் பிறந்தான் என்று வேதம் ஓதுகிறது.

லாவண்ய வர்ஷிணி லலாடதடே கநாபே
பிப்ரத்தடித்குண விசேஷம் இவ ஊர்த்வபுண்ட்ரம் ।
விச்வஸ்ய நிர்ஜரபதே ! தமஸா வ்ருதஸ்ய
மந்யே விபாவயஸி மாங்களிக ப்ரதீபம் ॥ 20

அழகுமழை பொழியும் திருநெற்றியை விசாலமான மேக மண்டலம் என்று கொண்டால், அதன் நடுவே துலங்கும் திருமண் காப்பை மின்னல் எனலாம். அப்போது அது அஜ்ஞான இருளில் துலங்கும் உலகுக்கு ஓர் மங்களதீபமாகி வழிகாட்டுகிறது என்பது பொருந்தும்.

தடித்குண விசேஷம் - தீபஜ்வாலை அடிபெறுத்து நுனி சிறுத்து எப்படி ஜ்வலிக்கிறதோ அப்படி ஸ்வர்ணமயமான திலகத்தையொத்த திருமண்காப்பு ஸ்ரீதேவநாதன் நெற்றியில் சுடர்விடுகிறது. மூன்றாம்பிறை சந்த்ரன் போல் திருமண்காப்பும் இடையில் மின்னலையொத்த ஸ்வர்ணமயமான ஸ்ரீசூர்ணங்களாலும் விளங்குகிறார். ஸ்ரீஹரியின் திருவடியைப்போன்ற ஆகாரம் கொண்ட திருமண்காப்புகளை நாம் அணியவேண்டும். அதை தரிப்பதனால் பாபங்கள் கழியும் என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. நாமம் என்ற பெயரில் நல்லபாம்பின் சிரஸ்ஸிலுள்ள கோடு (பாதுகையின் வடிவு கூட) எம்பெருமானாகிய மாடமாளிகையில் நித்யவாஸம் செய்யும் பிராட்டியாருக்கு திருவிளக்குபோல் இந்த ஸ்வர்ணதீபக்கீற்று அமைந்துள்ளது.

ஆஹு: ஶ்ருதிம் விபுதநாயக தாவகீனாம்
ஆசாகண ப்ரஸவஹேதும் அதீததேவா: ।

ஆகர்ணிதே ததீய மார்தரவே ப்ரஜானாம்
ஆசா: ப்ரஸாதயிதும் ஆதிசதிஸ்வயம் த்வாம் II 21

தேவரீருடைய திருச்செவியினின்று திக்குகள் தோன்றிய தாக வேதம் கூறுகிறது. மக்களின் கூக்குரலைக் கேட்டதும் அந் தத் திருச்செவி தானாகவே மக்களின் ஆசைகளை, விருப்பங்க ளைப் பூர்த்திசெய்ய தேவரீரைத் தூண்டுகின்றது போலும். பெற்ற வன் பெற்ற மக்களை காப்பது அவன் கடமையல்லவா? ஸ்ரீராமா வதாரத்தில் எம்பெருமானை அபயமளிக்கும்படி முனிவர்கள் முத லியோர் கூப்பிட, கூப்பாட்டிற்காக விரைவாக அவதரித்தருளிய தைப்போல், எம்பெருமான் மோக்ஷத்துடன் நில்லாமல், சேதன தர்மமான தாஸ்யவ்ருத்தியையும் நமக்கு அருளியபடி.

கந்தர்ப லாஞ்சனதநுஸ் திரிதசைகநாத
காந்தி ப்ரவாஹ ருசிரே தவ கர்ண பாசே I
புஷ்யத்யஸௌ ப்ரதிமுக ஸ்திதி தர்சனீயா
பூஷாமயீ மகரிகா விவிதாந் விஹாரான் II 22

பெருமாளின் கர்ணபத்ரங்களை அனுபவிக்கிறார்.

மன்மதன் மீனத்வஜன். மகரம் என்ற பெரியமீனை த்வஜ மாக உடையவன். இரண்டு செவிகளிலும் அணிந்துள்ள மகர மான குண்டலங்கள் எதிர் எதிராக அனேகவிதமான விளையாட் டுகளைச் செய்கின்றன. தேவரீருடைய திருமேனியின் ஒளி வெள்ளமிட்டுப் பெருக்கெடுத்து ஓடுகிறது. இதில் மகரங்களுக்கு பெருத்த கொண்டாட்டம். வெள்ளத்தை எதிர்த்து நீச்சலிடுவது மகரங்களின் இயல்பு.

பெருமாளின் திருவீதிப்புறப்பாட்டில், திருவிளக்குப் பேரொளியில் எம்பெருமானின் கர்ணபாசஸேவையை ஸேவித் தால் அனுபவிப்பவர்களுக்கு சந்தோஷம் ஏற்படுகிறது. யாக யக்ஞங்களை அனுஷ்டிப்பவர்கள் மகரகுண்டலத்தை காதுகளில் அணிவர். யக்ஞங்களால் ஆராதிக்கப்படுபவன் ஆகையால், யக்ஞவராஹன், யக்ஞநாராயணன் என்ற பெயர். சரணாகதர்களை ரக்ஷிப்பதற்காக யக்ஞத்தை பெரியபிராட்டியாரின் துணையுடன் அனுஷ்டித்து வருவதைக் குறிப்பிடவே இந்த மகரகுண்டலத்து டன் ஸேவைசாதிக்கிறார் யக்ஞபுருஷன்.

நேதும் ஸரோஜ வஸதிர் நிஜமாதிராஜ்யம்
நித்யம் நிசாமயதி தேவபதே ப்ருவௌதே ।
ஏவம் நசேத் அகிலஜந்து விமோஹநார்ஹா
கிம் மாத்ருகா பவதி காம சராஸனஸ்ய ॥ 23

இந்த ஸ்லோகத்தில் திருப்புருவ வர்ணனம். நான்முகன் தன் படைப்புத்தொழிலை நடத்தும்பொழுது நித்யம் உன் புருவங்களின் அசைவை (அங்கீகாரத்தை) எதிர்பார்க்கிறான். எப்பொழுதும், எம்பெருமானின் வில்லையொத்த புருவத்தைக்கண்டு ஸேவித்து மன்மதனின் வில்லை பிரமன் ஸ்ருஷ்டிப்பதற்கு ஹேதுவாகிறது மாதிரிப்பொருளாகிறது. ப்ரணவ ப்ரதிபாத்யனான தேவரீரை, புருவத்தின் மத்தியில் த்யானத்தால் ஸேவித்துவருகிறான் தினமும் பிரமன்.

ஆலக்ஷ்ய ஸத்வம் அதிவேலதயோத்தரங்கம்
அப்யர்த்தினாம் அபிமத ப்ரதிபாத நார்ஹம் ।
ஸ்நிக்தாயகம் ப்ரதிம சாலி ஸுபர்வநாத
துக்தாம்புதே ரநுகரோதி விலோசனம்தே ॥ 24

தேவநாதனா ! தேவரீருடைய திருக்கண்கள் திருப்பாற்கடலையொத்ததாயுள்ளன. திருப்பாற்கடலிலே பலவிதமானநீர்வாழ் ஜந்துக்கள் காணக்கிடைப்பதுபோல் ரஜஸ், தமோ குணங்கள் கலசமேயிராமல் கரைகடந்து கடல் பெருகுவதுபோல், தேவரீரின் அருளை அலைமோதுவனவாயும் அடியார்களின் ஆசையை நிறைவேற்றுகிறவையாயும் நீண்டு பளபளத்துப் பரந்து காணப்படுபவையாயும், தேவரீருடைய திருக்கண்கள் திருப்பாற்கடலை ஒத்து இருக்கின்றன. பாற்கடல் விரும்பிய பயனை அளிப்பதுபோல், எம்பெருமான் யார் எந்தப் பயனை விரும்பினாலும், அதைத் தமது கடைக்கண் நோக்காமல் அளித்துவருகிறான்.

ஸுபர்வநாத - நல்ல பருவமான (கிழடுதட்டாத) வயதிலேயே உள்ளவர். இளமை பருவத்திலுள்ளதைக் குறிக்கும் முகமாய் திருக்கண்கள் ஒளிவீச, வாகானபிராயம் என்பதைக் காட்டுகிறது.

துக்தாம்புதே அநுகரோதி - திருப்பாற்கடல் அகன்று நீண்டு பொங்கிவழிவதைப்போல், திருக்கண்களும், அம்ருதமயமான ரஹஸ்யத்தை ஆச்ரிதர்களுக்கு அருளிச்செய்து, ஸாம்ஸாரிக தாபத்ரயத்தால் எரிந்துபோன, நம்போன்றவரை குளிரக்கடாக்ஷித்து, அம்ரு

தனாக ஆக்குகின்றன.

விலோசனம்தே - எம்பெருமானது திருக்கண்கள் ஆச்ரிதர்களிடம் தண்ணியதாய் அமைந்த பார்வையுள்ளன.

விச்வாபிரக்ஷண விஹார க்ருதக்ஷணைஸ்தே
வைமாநிகாதிப விடம்பித முக்த பத்மை: I
ஆமோத வாஹிபிரநாமய வாக்யகர்பை:
ஆர்த்ரீபவாம்யம்ருத வர்ஷ நிபை: அபாங்கை: II 25

தெய்வநாயகனே ! தேவரீருடைய திருக்கண்களின் கடாக்ஷங்களால் அடியேன் குளிர்ந்து உய்வுபெற்றேன். தேவரீருடைய கடைக்கண் திருநோக்கால் அடியேனுடைய தாபங்கள் யாவும் கழியப்பெற்று தேவரீருடைய அருளில் மூழ்கி நனைந்தவனாகிறேன். எம்பெருமானின் கடைக்கண் நோக்கினால்தான் உலகின் படைப்பு முதலான ரக்ஷண கார்யங்கள் நடைபெறுவதாய் வேதங்கள் தெரிவிக்கின்றன. கூறை, சோறு அளித்துக் காப்பது மட்டுமல்லாமல் மோக்ஷபர்யந்தமான ரக்ஷணமே உண்மையான நிலையான காப்பு. இதை அபிரக்ஷண என்கிறார் ஸ்வாமி தேசிகன். வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே என ஆழ்வார் அருளிய படி. இது யாருக்கும் எப்படியும் ஒருக்காலத்தில் கிடைக்கும் என்பதை விச்வாபிரக்ஷண பதம் விளக்குகிறது.

அநாமய வாக்யகர்பை: - நம்மைக் கண்டதும் குசலப்ரச்னம் செய்வது போலுள்ள நிலை. அந்தணர்களை விசாரிக்கும் போது குசலம் என்றும், அரசரை அநாமயம் என்றும், வணிகரை க்ஷேமம் என்றும், வேளாளரை ஆரோக்யம் என்றும் கேட்க வேண்டும்.

அம்ருதவர்ஷநிபை: - சந்த்ரன் தேவர்களுக்கு அன்னமான அமுதத்தை அளிக்கிறான். தாமரைத் தேனை அளிக்கிறது. பாற்கடல் அமுதத்தை அளித்தது. தனது தாபத்ரயங்களும், நாயிகா பாவத்தில் ஏற்பட்ட மதன ஜ்வரமும், பகவத் கடாக்ஷவீக்ஷணங்களால் நீங்கப்பெற்று குளிர்ந்தது.

நித்யோதிதை: நிகம நிச்வஸிதை: தவைஷா
நாஸா நபஸ்சரபதே நயனாப்தி ஸேது: I
ஆம்ரேடித ப்ரியதமா முகபத்ம கந்தை:
ஆஶ்வாஸிநீ பவதி ஸம்பதி முஹ்யதோமே II 26

தெய்வநாயகனே ! கடல்போன்று அகன்ற தேவரீர் திருக் கண்களுக்கு இடையே உள்ள திருமூக்கு ஒரு அணைபோல் உள் ளது. மூர்ச்சித்து விழுந்தவனை கடல்கரை போன்று அகன்ற இடை வெளி அதிகமுள்ள விசாலமான இடத்தில் கிடத்தி, கடல்காற்றி னாலும், தாமரை முதலான ஸுகந்தங்களாலும் ஸ்வாசிக்கச் செய் து, அவனது மயக்கத்தைத் தெளியவைப்பதுபோல் - இங்கும் விவிதபோக மரீசிகளில் அலைந்து, மூர்ச்சித்து விழுந்து அடி யேனை வேதங்களைக்கொண்டு ஆசார்யர்கள் மூலமாய் தெளிய வைத்து, பெரியபிராட்டியுடன் கூடிய ஸர்வகந்தனான எம்பெரு மானே உபாயமும், உபேயமும் ஆகும் என்பதை விளக்கி, அடியே னைத் தேற்றவைக்க இந்த நாஸிகை ஒன்றே அமையும்.

நித்யோதிதை: - எம்பெருமானைப்போல் வேதமும் அநா தியாயிருப்பது.

நிகமநிச்வஸிதை: - வேதங்களைக்கொண்டே எம்பெ ருமானை அடையமுடியும்.

ஆருண்யபல்லவித யௌவன பாரிஜாதம்
ஆபீரயோஷிதநுபூதம் அமர்த்யநாத I
வம்சேந சங்கபதினா ச நிஷேவிதம் தே
பிம்பாதரம் ஸ்ப்ருசதி ராகவதீ மதிர்மே II 27

தேவரீருடைய திருவதரத்தை (உதடு) அடியேனது காதலால் மேலிட்ட புத்தி சுவைக்க விரும்புகிறது. திருப்பவளம், பாரிஜாதம ரம் போல் வேண்டியதை வாரிவழங்கும், தேவரீர் யௌவனமா கிய கல்பக வ்ருக்ஷத்தின் தளிர்ந்தவிடம் போல் உள்ளது. ஆய்ச்சி சிறுமிகளால் போட்டியிட்டு சுவைக்கப்பட்டதாயும், குழலாலும், சங்காலும் ருசிக்கப்பட்டதாயும், கோவைக்கனியையொத்த இந் தத் திருப்பவளத்தை, என் எழில் மதியும் சுவைக்க விரும்புகிறது.

அமர்த்யநாத ! - தேவரீர் தேவர்களுக்குத் தலைவனாயி ருந்து இடைப்பெண்களாலும் எளிதில் சுவைக்கப்பட்ட உதரம் உடையவனே ! குழல் ஊதும்போது ஒரு மூங்கிலும் தேவரீரைச் சுவைத்ததே ! அசேதனமான மூங்கிலும், உமது திருவதரச் சுவை யில் பங்குபெற்றதுபோல், அடியேன் விரும்புவது வியப்பில்லை யன்றோ !

தேவரீருடைய திருமேனியின் பேரழகு ஆண்களையும் பெண் உடை அணியச்செய்கிறது. பும்ஸாம்த்ருஷ்டி சிந்தாபஹாரி ணம்.

ஸ்ப்ருசதி ராகவதீ மதி:மே - ராகம் என்பது அன்பையும், சிவப்பு வர்ணத்தையும் குறிக்கும். சிவந்த அன்பு நிறைந்த அடியேனுடைய மதி, எம்பெருமானின் திருவதரத்திற்குத் தகுந்த சிவப்பு. என் கட்டுப்பாட்டுக்கு மீறி, என் மதியாகிய பெண், இப்படிப் பேராவலுடன், அபிஸாரிகா என்ற நாயிகா பாவத்தை மேற்கொண்டதே! ஸ்ப்ருசதி என்ற பதம் ஸம்போக ஸ்ருங்காரத்தைக் கூறுகிறது.

தாஸ்ய வ்ருத்தியிலும், சேஷ வ்ருத்தியிலும் ஈடுபாடுடைய நம் தூப்புல் குலமணியையே நாயிகா பாவம் கொள்ளச் செய்த தெய்வநாயகனின் கொள்ளையழகை என் சொல்லி வியப்பது ?

பத்மாலயா வலய தத்த ஸுஜாத ரேகே
த்வத்காந்தி மேசகித சங்கநிபே மதிர்மே ।
விஸ்மேர பாவருசிரா வனமாலிகேவ
கண்டே குணீபவதி தேவபதே த்வதீயே ॥ 28

தேவநாதனே ! பெரியபிராட்டியாரின் திருக்கைகளிலுள்ள வளையல்களால் ஆலிங்கனகாலத்தில் அழுந்தப் பதிந்த கோடுகள் தேவரீர் கழுத்தில் ஸேவையாகின்றன. இத்தகைய கழுத்தைக் கண்ட, என் மதி தானும் இதை அணைய ஆவலுற்றது. வைஜயந்தி என்ற வனமாலை எப்படி தேவரீர் கழுத்தைவிட்டு அகலாமல் நிலைபெற்றதோ, அப்படி இதும் அதில் ஒன்றிவிடுகிறது. மஹாபுருஷ லக்ஷணமான கழுத்து ரேகைகளை பிராட்டியாரின் காடாலிங்கனத்தால் அமைந்ததாய் அருளி, தாம் மேற்கொண்ட நாயிகாபாவத்திற்குத் தகுந்தபடி இக்கழுத்து கண்டார் எல்லோரையும் காமுறச்செய்யும் வகையானது என்கிறார். ஸ்ரீவரதராஜ பஞ்சாசத் 47ம் ச்லோகத்தில் ஸ்வாமிதேசிகன், பெருந்தேவித்தாயாரின் அணைப்புகளால் கழுத்தில் ஏற்பட்ட ரேகைகளுடன் ஸ்ரீதேவராஜன், உஷ:காலத்தில் தமக்கு ஸேவையாகவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார்.

ஆஜாநுலம்பிபிரலங்க்ருத ஹேதிஜாலை:
ஜ்யாகாத ராஜிருசிரை: ஜித பாரிஜாதை: ।
சித்ராங்கதை: திரிதசபுங்கவ ஜாதஸங்கா
த்வத்பாஹுபி: மம த்ருடம் பரிரப்யதே தீ: ॥ 29

தெய்வநாயகனே ! முழங்கால்வரை தொங்குகின்றனவும், ஆச்ரித ரக்ஷணத்திற்காக அசுர ராக்ஷஸர்களோடு பொருதியபோது

சார்ங்கமென்னும் வில்லாண்ட காலத்தில் நாண் கயிற்றை இழுத்து அம்பு எறிய அடிக்கடி நேர்ந்தமையால் தழும்பு ஏறியவைகளும், விரும்பிய பலன்களை அளிப்பதில் கற்பகத்தருவையும் வென்றன வும், விசித்ரமான வீர ஆபரணமான தோள் வளைகளுடன் ஒளி ருகின்றனவுமான, தேவரீருடைய திருத்தோள்களால் அடியேன், எழில்மதியான பெண் இருக கட்டியணைக்கப்படுகிறாள்.

இங்கே எம்பெருமான் ஹநுமானுக்கு ஆலிங்கனத்தை அருளிச்செய்தபடியும் (ராமாயண - யுத்த-I-13), பெரியதிருவடி க்கு தமது தழுவலை அருளியது போலும் (யுத்தகாணடம் L-60, கருடபஞ்சாசத் 48ம் ச்லோகம்), தமக்கும் பெருமாள் பரிஷ்வங்கம் - சேர அணைத்தல் - அருளிச்செய்ய வேண்டும் என்று ப்ரார்த்திக் கிறார். முழந்தாள் வரை கைகள் தொங்குவது மஹாபுருஷலக்ஷ ணமாகும். ஹநுமானுக்கு ஸேவையானபோது ஸ்ரீராமபிரான் நான்கு திருக்கைகளுடன் ஸேவைஸாதித்ததை (ஸ்ரீவால்மீகி - கிஷ்கிந்தா - III-15) ஸர்வபூஷண பூஷார்ஹா: என்றார்.

பாரிஜாதமரம் ஐஹிகமான போகங்களையே தரவல்லது. எம்பெருமானோ ஸகல பலன்களையும் (மோக்ஷப்ரதானம் கூட வும்) அருளிச்செய்வார்.

த்ரிதசபுங்கவ - தேவர்கள் போரேறே உயர்ந்தவர். இத்த கைய தோள்களுடையவும், திருவாயுதாழ்வான்களுடையவும் தழும்பு அடியேனை அணையும்போது அடியானின் மேனியில் பதியவேண்டும். சேதனன் எம்பெருமானின் திருவடிகளைப்பற்றி னால், அவன் நம்மைக் கைத்தலம் பற்றுவான் என்றபடி.

நீலாசலோதித நிசாகர பாஸ்கராபே
சாந்தாஹிதே ஸுரபதே தவ சங்கசக்ரே ।
பாணேரமுஷ்ய பஜதாம் அபயப்ரதஸ்ய
ப்ரத்யாயனம் ஜகதி பாவயத: ஸ்வபூம்னா ॥ 30

திருவாழி, திருச்சங்குகளையும், அபயமுத்ரையுடன் கூடிய திருக்கையையும் இங்கு அனுபவிக்கிறார்.

ஆச்ரித விரோதிகளை அழிப்பதில் வல்லமை பெற்றனவா கிய இந்த சங்கு சக்ரங்கள், திருக்கையால் அபயப்ரதானம் செய்த ருளும்போது, அண்டினவர்களைப் பார்த்து "கவலைப்படாதீர்கள்; உங்களைக் காப்பதற்காகவே இப்படி சங்கு சக்ரங்களை எப் போதும் தாங்கியிருக்கிறேன்" என்று நம்பிக்கையை ஊட்டுவன

போன்றிருக்கின்றன. திருவாய்மொழி 8-2-10ம் பாசுரத்தைக் காண்க. பகவானுடைய திருவடிகளை அடைவதில் விருப்பமுள்ள நம்மாழ்வார், விஷயவாசனையை விட்டவராக, அவன் திருவடிகளைப்பற்றியே பாடிய பாசுரம் இது. இந்த சங்கு சக்ரங்கள் சாந்தர்களுக்கு சாந்தமாகவும், எதிரிகளுக்கு (ஆயுதமாகவும்) அஹிதமாகவும் அமையும். இவைகள் தேவரீர் ஒருவருக்கே அஸாதாரணமான திருவாயுதங்கள்.

பாணே: அமுஷ்ய பஜதாம் அபயப்ரதஸ்ய பரத்யாயனம் - "எம்பெருமான் நீ செய்த பாபங்களின் வலிமையைக் கண்டு அஞ்சவேண்டாம். நான் உன்னை ஸர்வ பாபங்களினின்றும் விடுவித்து மோக்ஷம் அளிக்கிறேன்" என்று அபயப்ரதானம் செய்தருளுகிறான். நாம் அஞ்ஜலி என்கிற முத்ரையை அவனிடம் ஸமர்ப்பித்தால், நமக்கு ஆறுதல் கூறுவதுபோல் பதில் அருளுகிறான். இங்கு அபயமாவது மோக்ஷமாகும். சாந்தாஹிதே என்பதால் மோக்ஷ விரோதியான அநிஷ்டங்களை நிவர்த்தி செய்தருளும் சங்கு, சக்ரங்களை இரு திருக்கரங்களால் ஸூசிப்பது. பிராட்டியின் கையில் உள்ள அபயமுத்ரை "எம்பெருமானின் சீற்றத்தைக் கண்டு அஞ்சாதே - நான் இருக்கிறேன்; பயப்படவேண்டாம்" என்பது. ப்ராப்தி விரோதிகளைப் பற்றியும் நீ கவலைப்படாதே என்பதே பெருமாளின் திருக்கையிலுள்ள அபயமுத்ரை.

பஜதாம் - பக்தியோக நிஷ்டைகளை மட்டிலுமல்ல, பொதுவாக எம்பெருமானை ஆச்ரயித்த (சரணாகதர்கள் உட்பட) யாவரையும் தெரிவிக்கும்.

எம்பெருமான் பலவித அவதாரங்களை எடுத்தபோதும், விடாமல் இந்த ஆயுதங்களும் தகுந்தமாதிரி நிலைகளில் அவதாரமெடுத்து உதவின. வாமன அவதாரத்தில் பவித்ரமாயும், ந்ருஸிம்ஹ அவதாரத்தில் நகமாகவும் திவ்ய ஆயுதங்கள் அவதரித்தன.

**அக்ஷோபணீய கருணாம்புதி வித்ருமாபம்**
**பக்தாநுரஞ்ஜனம் அமர்த்யபதே த்வதீயம் ।**
**நித்யாபராத சகிதே ஹ்ருதயே மதீயே**
**தத்தாபயம் ஸ்புரதி தக்ஷிண பாணிபத்மம் ॥ 31**

இந்த ஸ்லோகத்தில் அபயமளிக்கும் வலது திருக்கையை வர்ணிக்கிறார். இந்த திருக்கரம் அடியவர்களுக்கு ஏற்பட்ட கவலைகளை நீக்கி, அஞ்சேல், அஞ்சேல் என்று அபயமளித்து அவர்களை மகிழ்விப்பதாயுள்ளது. இதை ஸேவித்ததும் அடியேனது

மனத்தின் சோர்வு நீங்கியது. அடியவன் ஒருவனுக்கு அபயம் செய்யும் முன்பு அருள் மேலிடுவது பற்றி ஸ்வபாவமாய் அமைந்த நிலையையுடையவன் எம்பெருமான்.

கருணையை நிர்ஹேதுகம் என்பர். இது ஒருவரிடம் ப்ரவ்ருத்திக்கும்போது, ஒரு வ்யாஜத்தை எதிர்பார்ப்பதால் ஸஹேதுகம். அவனை அடைய ஏதேனும் ஒரு ரஞ்ஜகமான யதாசக்தியான உபாயத்தை அனுஷ்டித்தால், எம்பெருமானும் நம் விஷயத்தில் ரஞ்ஜனம் பண்ணி அருள்கிறான் - பக்தாநுரஞ்ஜனம். தத்தாபயம் - என்றபதம் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்காக ஸுக்ரீவனைக் குறித்து, ஸ்ரீராமபிரான் அருளிய "ஆநயநம் ஹரிச்ரேஷ்ட ! தத்தமஸ்யாபயம் மயா" என்றதை அப்படியே அநுஸந்தித்தபடி. (யுத்தகாண்டம் XVIII - 34)

துர்தாந்த தைத்ய விசிக க்ஷத பதீரபங்கம்
வீரஸ்யதே விபுதநாயக பாஹுமத்யம் ।
ஸ்ரீவத்ஸ கௌஸ்துப ரமா வநமாலிகாநாம்
சிந்தாநுபூய லபதே சரிதார்த்ததாம் ந: ॥ 32

தேவரீருடைய திருமார்பில் ஸ்ரீவத்ஸம் என்ற ரோமவர்த விசேஷமானமறு, ஜீவாபிமானியான கௌஸ்துபமணி, வனமாலை இவைகளுடன் "அகலகில்லேன் இறையும்" என்று அலர்மேல் மங்கை உறைகின்றார். இத்தகைய தேவரீர் திருமார்பை என் எண்ணம் அநுபவித்து இன்று நற்பயனைப் பெற்றது.

ஸ்ரீவத்ஸம் - மஹாபாக்ய ஸூசகமான ஒரு அடையாளம் - மயிர்சுழி; மச்சமானபடியால் இது கருப்பு வர்ணம்.

கௌஸ்துபம் - குஸ்துபம் என்றால் கடல். கடலினின்று பெரியபிராட்டியாருடன் தோன்றியதால் இப்பெயர்.

ரமா - பிராட்டி பெருமாளின் திருமார்பில் நித்யவாஸம் செய்வதாலேயே பகவானுக்கு ஏறு திருவுடையார், திருவாழ்மார்பன், திருமறுமார்பன், அலர்மேல்மங்கையுறைமார்பன் முதலான பெயர்கள் ஏற்பட்டன.

வர்ணக்ரமேண விபுதேச விசித்ரிதாங்கீ
ஸ்மேரப்ரஸீந ஸுபகா வனமாலிகேயம் ।
ஹ்ருத்யா ஸுகந்தி ரஜஹத் கமலா மணீந்த்ரா
நித்யா தவ ஸ்புரதி மூர்த்திரிவ த்வதீயா ॥ 33

தெய்வநாயகனே ! தேவரீர் திருமார்பிலுள்ள வனமாலை யில் மலர்ந்த பல பூக்களுள்ளபடியால் அழகானது. தேவரீரு டைய ஹ்ருதயத்தை விட்டு ஒருபோதும் வனமாலை அகலாது. வனமாலையும் வாஸனை பொருந்தியது. தேவரீருடைய திருமார் பகத்தில் பெரியபிராட்டியாரும் வாஸம் செய்கிறாள். கௌஸ்து பம் என்ற உடன்பிறப்பையும், பாற்கடலில் தோன்றிய பெரியபி ராட்டியாரையும் எப்படி தேவரீர் பிரியாமல் மார்பகத்தில் தாங்கி வருகிறீரோ, அப்படியே வனமாலையும் மார்பகத்தில் தானும் இடம் பெறுகிறது. ஆதலால் இந்த வனமாலையும் தேவரீரின் திருமேனி யின் மறுஉருவாகும்.

ஸுகந்தி: - எம்பெருமான் எப்படி ஸுகந்த: என்றபடி திரு மேனி எவ்வாறு நறுமணங்களைப் பெற்றதோ, அப்படியே வனமா லையுமே. ஆதிசேஷனின் மல்லிகைப்பூவினை ஒத்த நறுமணமும், பிராட்டியார் நித்யமும் சேர்ந்தபடியால், இவனே பரமேச்வரன் என்பதை ஸூசிப்பதாகவும், எல்லா திக்குகளிலும் பரந்தும், கலந் தும் உள்ளதாம் எம்பெருமானின் வாஸனை.

ஆர்தம் தமோமதனம் ஆச்ரித தாரகம் தே
சுத்தம் மன: ஸுமனஸாமம்ருதம் துஹானம் ।
தத்தாத்ருசம் விபுதநாத ஸம்ருத்தகாமம்
ஸர்கேஷ்விதம் பவதி சந்த்ரமஸாம் ப்ரஸூதி: ॥ 34

எம்பெருமானின் திருவுள்ளத்தை இங்கு வர்ணிக்கிறார். "சந்த்ரமா மனஸோஜாத:" என்கிறது ச்ருதி. எம்பெருமானின் திரு வுள்ளத்தினின்றும், ஸ்ருஷ்டி காலங்களில் சந்த்ரன் தோன்றிய தாய் கூறப்படுகிறது. சந்திரனைப் படைத்த தேவரீருடைய திரு வுள்ளத்திலிருந்து தோன்றியபடியால்தான், குளிர்ந்த தேவரீர் உள் ளம்போல் சந்திரனும் குளிர்ந்தவனானான். தேவரீருடைய திரு வுள்ளத்திலுள்ள ஒருசில குணங்களை அதனின்று தோன்றிய சந் திரனும் பெற்றிருக்கிறதால், - கார்ய காரணங்கள் ஒரே தன்மை யன என்பது ஒத்திருக்கிறது.

ஆச்ரித தாரகம் - சந்திரனும் தாரகைகளின் (நக்ஷத்ர) புடை சூழ நின்றவனானபடியால் ஆச்ரிததாரகன் எம்பெருமானும் ஆச்ரி தர்களை ரக்ஷித்து அருள்பவன். இவன் காத்தருளியபோதிலும், மோக்ஷபர்யந்தமான பயனை அவன் அருள சரணாகதி போன்ற ஏதேனும் ஒரு உபாயத்தை அனுஷ்டித்தவர்களையே பரிபூர்ண மாய் காப்பாற்றுகிறான்.

ஸுமநஸாம் அம்ருதம் துஹானம் - சந்திரன் தனது அம்ருத கலைகளையுமளித்து தேவர்களை மகிழ்விக்கிறான். சந்திரன் அளிக்கும் அம்ருதம் தேவர்களின் உடலையே போஷிக்கும். எம் பெருமான் அளிக்கும் அம்ருதம் ஸகல ஜீவராசிகளின் ஆத்மாக்களையும் உஜ்ஜீவிக்கும்.

தத்தாத்ருசம் - வியக்கத்தகுந்தது.

ஸம்ருத்தகாமம் - எம்பெருமான் நாம் விரும்பும் பலன்களை எப்போதும் ஸங்கல்பிக்கிறான். மற்றையோர் கொடுக்கும் பலன்களோ ஸ்வல்பமான க்ஷுத்ர புருஷார்த்தங்களாகும்.

ஸர்கேஷு - படைக்கும் காலங்களில், எம்பெருமான் சந்திரர்கள் பலரைப் படைக்கப்பட்டதாகவும் சொன்னதால், சந்திர, சூர்யர்களுக்கு அழியும் காலமுண்டு என்பதை அறிவுறுத்துகிறது.

விச்வம் நிகீர்ய விபுதேச்வர ஜாதகார்ச்யம்
மத்யம் பலித்ரய விபாவ்ய ஜகத்விபாகம் ।
ஆமோதி நாபி நளினஸ்த விரிஞ்சப்ருங்கம்
ஆகல்ப யத்யுதரபந்த இவாசயோமே ॥ 35

உலகமனைத்தையும் உண்டும், உருக்காட்டாமல் இளைத்ததாயும், மூன்று மடிப்புகளால் உள்ளே மூன்று உலகங்கள் இருப்பதை வெளியிடுவதாயும், மணக்கும் நாபீ கமலத்தில் பிரமனாகிற வண்டு வாழ்வதும் ஆன உன் இடுப்பை, என் சிந்தை அரைஞாண் போல் அலங்கரிக்கிறது.

ஸர்வகந்தனான தேவரீருடைய திருநாபியில் தோன்றிய தாமரையின் வாஸனை, மிகவும் தொலைவிலுள்ளவர்களையும் அண்டி இழுக்கும் திறமைபெற்றது. இந்த வயிற்றை இருகத்தழுவிய உதரபந்தம் என்ற அரைஞாண் கயிற்றைப்போல், அடியேனுடைய எண்ணமும் இங்கு ஓர் அணிகலனைப்போல் பதிந்து விட்டது.

மஹாப்ரளயத்தில் ப்ரபஞ்சத்தை எல்லாம் உள்ளே அடக்கிவைத்து ரக்ஷிக்கும்படியான திருஉதரத்தைப் பார்த்தால் வியப்பை உண்டாக்குகிறது.

விச்வம் நிகீர்ய ஜாத கார்ச்யம் - ஸ்வாமி தேசிகனின் இந்தப் பதப்ரயோகம் கலியனின் "வையமேயுண்டு ஆலிலை வைகிய மாயவன்" "மூவுலகுண்டுமிழ்ந்தளித்தவனை" என்ற அருளிச்செயல் வார்த்தைகளையொட்டியது என்கிறது.

மத்யம் வலித்ரய விபாவ்ய ஜகத்விபாகம் - என்ற பதம் கண்ணிநுண்சிறுத்தாம்பினால் யசோதை எம்பெருமானைக் கட்டியது கயிற்றால் ஏற்பட்ட தழும்புகளே எம்பெருமான் திருவயிற்றில் மூன்று வரிசையாக ஸேவையாகிறதாக ஆன்றோர்கள் அருளிச்செய்வர். வலித்ரயமும் ஓர் திருவாபரணமாயிற்று.

நாகௌகஸாம் ப்ரதமதாமதிகுர்வதே தே
நாபீ ஸரோஜ ரஜஸாம் பரிணாம பேதா: ।
ஆராதயத் பிரிஹறதைர்பவத: ஸமீசீ
வீரோசிதா விபுதநாயக இத்யபிக்யா ॥ 36

தெய்வநாயகனே ! உன் நாபிக்கமலத்தினுடைய மகரந்தப் பொடிகள் நான்முகனாகப் பரிணமிக்கும் வாய்ப்பைப் பெறுகின்றன. அவனும் உன்னைப் பூஜிப்பதினால் நீ தேவநாதனாகிறாய்.

தாமரைப்பூவின் தாதுக்கள் பல பிரமனாகமாறி, அதிகாரி புருஷர்களைப் படைத்து வருகின்றன. இத்தெய்வங்கள் தேவரீரை வணங்கி வழிபடுகின்றன. அவரவர்களுக்கு வந்த தொல்லைகளை அவ்வப்போது தொலைத்து அவரவர்கள் எதிரிகளை வென்றும் மஹாவீரனாகிய தேவரீரை தெய்வநாயகன் என்ற திருநாமம் சூட்டினது தகுந்ததே.

பீதாம்பரேண பரிவாரவதீ ஸுஜாதா
தாஸ்யே நிவேசயதி தேவபதே த்ருசௌமே ।
விந்யஸ்த ஸவ்யகரஸங்கம ஜாயமான
ரோமாஞ்ச ரம்ய கிரணா ரசனா த்வதீயே ॥ 37

தேவரீருடைய அரைக்கச்சானது (ஒட்டியானம்) அடியேனுடைய கண் இணைகளை தேவரீரது தாஸ்ய வ்ருத்தியில் ஈடுபடுத்துகிறது. கடிஹஸ்தம் எனப்பட்ட தேவரீரது இடதுகரத்தை இடுப்பில் வைத்த நிலையால் ஏற்பட்ட புல்லரிப்பைப் போன்றுள்ளது.

பீதாம்பரேண பரிவாரவதீ - பீதாம்பரம் எம்பெருமானை அண்டியவர்களின் அஜ்ஞானமாகிய இருளைக் கழிக்கும் ஸூர்யோதயத்திற்குச் செவ்வானமாயும், தாபங்களைக் கழிக்கவல்ல அந்திச்செவ்வானமாயுமுள்ளது.

ஸுஜாதா - அழகு நிரம்பியவன், நற்குடியில் பிறந்தவன்

ஸ்ரீதேவநாதன், திருவேங்கடமுடையானைப்போல, இடது திருக்கையை அரையில் வைத்தருளி ஸேவை ஸாதிக்கிறார்.

**ஸ்த்ரீ ரத்ன காரணம் உபாத்த த்ருதீய வர்ணம்**
**தைத்யேந்த்ர வீரசயனம் தயிதோபதானம் ।**
**தேவேச யௌவன கஜேந்த்ர கராபிராமம்**
**ஊரி கரோதி பவதூருயுகம் மனோமே ॥ 38**

தெய்வநாயகனின் திருத்தொடைகள் பற்றி வர்ணிக்கிறார். யௌவன யானை (இளம் யானை)யின் துதிக்கை போன்று அடி பெருத்து, நுனி சிறுத்து ஸேவையாகும் தேவரீருடைய திருத்தொடைகள், அடியேனுடைய மனத்தை ஈர்த்துவிட்டன.

ரத்னம் - உயர்வைக் குறிக்கும்.

ஊரு - தொடையை வ்யாபிக்கிறான் என்றதால் ஊர்வசி என்ற பெயர் ஏற்பட்டது. வாக்கைக்கொண்டு ஜீவிக்கும் அந்தணன், பெருமாள் திருமுகமண்டலத்தின்று தோன்றினான். புஜ பலத்தால் உலகையாளும் அரசர்கள் திருமாலின் திருத்தோள்களினின்றும், தொடை தட்டிக்கொண்டு வாணியம் க்ருஷி, கோரக்ஷணம் முதலானவையை செய்யும் வணிகர்கள், பகவானின் தொடைகளினின்றும் தோன்றியதாக வேதங்கள் விளக்கின.

பவதூருயுகம் - தேவரீருடைய திருத்தொடைகளை அடியேனது மனது ஸ்வீகரித்துக்கொண்டது.

**லாவண்ய பூர லலிதோர்த்வ பரிப்ரமாபம்**
**லக்ஷ்மீ விஹார மணிதர்பண பத்தஸக்யம் ।**
**கோபாங்கனேஷு க்ருத சங்க்ரமணம் தவைதத்**
**ஜாநு த்வயம் ஸுரபதே ! நஜஹாதி சித்தம் ॥ 39**

தெய்வநாயகனே ! தேவரீருடைய முழந்தாள்கள் அடியேன் உள்ளத்தைவிட்டு அகலாமலிருக்கின்றன.

உப்பில் (லவணம்) உள்ளும், புறமும், எப்படி ஒரே சீராக கரிப்பு உண்டோ, அதேபோல் ஒரேசீராக ஒவ்வொரு அவயவமும் அணிகலன்களின்றியே அழகுற விளங்குவதை "லாவண்யம்: என்பர்.

**தூத்யே துகூலஹரணே வ்ரஜஸுந்தரீணாம்**
**தைத்யாநு தாவன விதாவபி லப்த ஸாஹ்யம் ।**
**கந்தர்பகாஹல நிஷங்ககலாசிகாபம்**
**ஜங்காயுகம் ஜயதி தேவபதே ! த்வதீயம் ॥ 40**

பாண்டவதூதனானபோதும், இடைச்சியர்களின் ஆடை களை அபஹரித்தபோதும், அசுரர்களைப் பின்தொடர்ந்து அழிக்க முற்பட்டபோதும், தேவரீரிர்கணைக்கால்கள் உதவினவல்லவா? மன்மதனின் கொம்பு வாத்யங்களைப்போலவும், அம்பறாத்தூணீ போலவும், ஸ்படிகம் என்ற பாத்ரம் போலுள்ள இந்த இரண்டு கணைக்கால்களும் ஸர்வோத்க்ருஷ்டமாய் விளங்குகின்றன. பஞ்சபாண்டவர்களைப் பலவகையாய் காக்க நடந்த நீர்மையின் எல்லை, ராமாவதாரத்தில் சக்ரவர்த்தி திருமகனாகிவிட்டதால், கைக்கொள்ளமுடியவில்லை. இந்தக்குறை கோவிந்தனால் நிறை வுபெற்றது. இந்த தூது ஏதாவது அபேக்ஷையால் கர்மவசப்பட்டு செய்தாலன்றோ அதுதகாது. தத்வநிபுணர்கள் இத்தகைய குணங் களை ச்லாகிப்பதால், பிறருக்கு வசமின்றி, ஸ்வதந்த்ரனாக செயல் பட்டதால், எம்பெருமானுக்கு இதுவும் ஒருவிதமான நீர்மையா கும். ஆயர் சிறுமியர் யமுனையில் நீராடச்சென்றதால், அவர்களி ன் துயிலை மறைப்பதும், அவர்களின் அஞ்சலியை வேண்டிய தும் சிறுபிள்ளை விளையாட்டுகளே - பால்யலீலைகள்.

பாஷாண நிர்மித தபோதந தர்ம தாரம்
பல்மந்யு பாஹித நரேந்த்ர குமாரபாவம் ।
ஸம்வாஹிதம் த்ரிதச நாத ! ரமாமஹீப்யாம்
ஸாம்ந்ய தைவத முசந்தி பதம் த்வதீயம் ॥ 41

தேவரீருடைய திருவடியை முனிவர்களும், ஆழ்வார்களும் யாவரும் வந்து அடிவணங்கி நின்றனவராகப் புகழ்கின்றனர்.

பாஷாண - கல்.

கௌதம முனிவர் தம் மனைவி அகல்யையை மதிமயங்கி செய்த குற்றத்திற்காக சபிக்க, அவளது கல்லானமையை நீக்கி, அவளை தர்மபத்னியாக்கியது இத்திருவடிகளே. உத்தரையின் கருப்பையில் கருக்குலையாமல் தடுத்ததுடன், கரிக்கட்டையாக அவள் ஈன்ற போதும், தமது திருவடியால் தொட்டுக்காத்தது, மலர்மகள் மற் றும் நிலமகளும் பிடிக்கும் மெல்லடி அல்லவா? அந்தணர் அந்நி யர் எல்லையின் நின்று அனைத்துலகும் எம்பெருமானை அடையலாம்; தைவப்ரக்ருதியான யாவரும் வந்தடிபணியலாம். அசுரச் சிறுவனான ப்ரஹ்லாதனும், பலிச்சக்ரவர்த்தியும், எம்பெரு மானை அண்டி உய்வுபெற்றனரே; இப்படி யாவருக்கும் பொது வான திருவடிகளை அடியேனும் பிடிக்க தேவரீர் அருளக் கூடாதா? புல்பூண்டுகளுக்கும் முக்திதரவல்லவை இந்தத் திருவ

டிகள். இந்த தெய்வநாயகனை தேவர்களும், அசுரர்களும், பொது நின்றதெய்வமாய் ஆழ்வார் ஆசார்யர்கள் எண்ணுகின்றனர்.

**ஆவர்ஜிதாபிரநு ஷஜ்ய நிஜாம்சுஜாலை:**
**தேவேச ! திவ்ய பதபத்ம தலாயிதாபி: I**
**அந்யாபிலாஷ பரிலோலமிதம் மதீயம்**
**அங்கீக்ருதம் ஹ்ருதய மங்குலிபி: ஸ்வயம்தே II 42**

தேவநாதனே ! தேவரீர் திருவடிகளில் உள்ள விரல்களால் அடக்கமுடியாத அடியேனுள்ளமும் வசப்படுத்தப்பட்டது.

தாமரையினுடைய இதழ்கள் போன்ற விரல்கள் இதர விஷயங்களில் ஆசையினாலே உழன்றுகொண்டிருக்கும் என் மனதை தமக்கு ஆக்கிக்கொண்டனவே !

அந்யாபிலாஷபரிலோலம் - பகவத்ஸ்மரணம் தவிர மற்ற விஷய போகங்களில் உள்ள பேராவல் எண்ணியும் மாளாதபடி உள்ளது. ஸம்ஸாரிகளுக்கு விருப்பங்கள் எப்படியெல்லாம் ஏற்படுகின்றன என்பதை பகவத்கீதையில் XVI-12 -15 ச்லோகங்களால் பகவானே அருளிச்செய்துள்ளார். பயன் அற்ற மாற்றியமைக்க நம்மால் முடியாத விஷயங்களைப்பற்றிய எண்ணங்களால் வருந்துகிறேன். என்னவாகுமோ, என்ற என்னைப்பற்றி அறிவற்றவனாக இருக்கிறேன்.

**பங்கான்யஸெள மமநிஹந்தி மஹஸ்தரங்கை:**
**கங்காதிகாம் விதததீ கருடஸ்ரவந்தீம் I**
**நாகௌகஸாம் மணிகிரீட கணைருபாஸ்யா**
**நாத த்வதீய பதயோர் நகரத்ந பங்க்தி: II 43**

எம்பெருமானே ! தேவரீருடைய திருவடியின் திவ்யநகங்கள் தம் காந்தியினால் என்னுடைய தாபத்ரயங்களைப்போக்கி, கருடநதியை கங்கையைவிட உயர்த்தி, தேவர்களின் மகுடங்களால் ஏற்றுக்கொள்ளப்பெற்று விளங்குகின்றன.

இந்த நகங்கள் அருகிலுள்ள கருடநதியை தமது ஒளி வெள்ளத்தாலும், தம்மோடு நித்ய சேர்க்கையாலும், திருவடியினின்று தோன்றிய கங்கையைவிட மேலானதாக்கிவிடுகின்றன.

தேவரீர் தெய்வநாயகனானபடியால், நானாவித தெய்வங்களும் வந்து, தேவரீர் அருளை வேண்டித் திருவடிகளைத் தொழு

தெழும்போது, அவர்கள் தலையில் சுமந்த க்ரீடங்களில் பதியப் பெற்ற ரத்நங்களுக்கு "நமக்கு இத்தகைய ஒளியும், மதிப்பும் இல் லையே" என்ற ஏக்கம் ஏற்பட்டு, அந்த ரத்நக் கூட்டங்களால், இந்த நகங்கள் உபாஸிக்கப்பட்டு, நித்யமும் ஸேவிக்கப்பட்டதா யிருக்கின்றன. இத்தகைய தேவரீர் திருவடி நகங்கள், அடியே னது வினைத்திரன்களை அழித்தருள்கின்றன. காசியில் பெருகும் கங்கையைப்போல், இங்கு கருடநதி வடக்கு நோக்கிப் பெருக் கெடுத்து ஓடுவதாலும், இந்நதி சிறந்தது. எம்பெருமானின் அபி மானத்திற்கு நித்யமும் பாத்ரமானபடியால், தீர்த்தங்களுக்கும் (சே ஷதீர்த்தம் உட்பட) திவ்யதேசத்திற்கும் ஏற்றம். இந்த நதி எம்பெ ருமானின் நியமனத்தால் கருடாழ்வானால் நியமிக்கப்பட்டு, எம் பெருமானின் நித்யவாஸம் நதிக்கரையில் செய்யப்பட்டு, இந்நதி கங்கையைவிட மேலானது என்பது திண்ணம். இந்நதியில் பக்தர் கள் தீர்த்தவாரி கொள்வதும் உத்தமம்.

பாதுகாஸஹஸ்ரம் 530ம் ச்லோகம் காண்க.

வஜ்ர த்வஜாங்குச ஸுதா கலசாதபத்ர
கல்பத்ருமாம்புருஹ தோரண சங்கசக்ரை: ।
மத்ஸ்யாதிபிஸ்ச விபுதேச்வர மண்டிதம்தே
மாந்யம் பதம் பவது மௌலி விபூஷணம் ந: ॥ 44

தேவரீருடைய திருவடியிணை அடியேனுடைய சிரஸ்ஸிற்கு அலங்காரமாய் அமையவேண்டும். வஜ்ரம், த்வஜம், அங்குசம், அம் ருதகலசம், குடை, கல்பகம், தாமரை, தோரணம், சங்கு சக்ரம், மத்ஸ்யம் முதலியரேகைகளால் திருவடியின் அடிபாகம் அடை யாளங்களுடன் அமைந்துள்ளது. உத்தமபுருஷனான தேவநாத னுமான தேவரீர் ஒருவருக்கே இந்த இலச்சினைகள் அமைந்த னவாகும். இத்தகைய உயர்வான திருவடி அடியோங்கள் தலைக ளுக்குஅணியாகவேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார். ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீமத்ராமாயண அயோத்யா XCVIII - 9ம் வால்மீகி அருளிச்செய்த படி திருவடிகளையே விரும்பினார். 'பெருமாளும் தமக்கு வகுத்த முடி சூடி, நானும் எனக்கு வகுத்த முடிசூடி இருவரும் முறைத்தப் பாமே கூறு ஒத்த நின்ற அன்றுதான் என் உள்வெதுப்பு ஆறும்' என்றாரே பரதன். I wish to bow down at His feet - (See Ramayana XC - 17 *ibid*) - பாதுகாஸஹஸ்ரம் 499ம் ஸ்லோகத்திலும் ஸ்வாமி தேசி கன் இச்சின்னங்களைப்பற்றி ஸாதித்துள்ளார். அதிமாநுஷஸ்த வம் 4ம் ச்லோகத்தைக் காண்க.

**சித்ரம் த்வதீய பதபத்ம பராக யோகாத்**
**யோகம் வினாபி யுகபத் விலயம் ப்ரயாந்தி ।**
**விஷ்வஞ்சி நிர்ஜரபதே: சிரஸிப்ரஜானாம்**
**வேதஸ் ஸ்வஹஸ்த லிஹிதாநி துரக்ஷராணி ॥ 45**

தேவரீருடைய திருவடித்தாமரைகளை வந்து அடைகிறவர்களின் தலையில் பிரமன் தன் கையால் எழுதிய கெட்ட எழுத்துக்களாகிய பாபாநுபவகர்ம பாகங்கள், திருவடித்தாமரையின் துகள்களின் பொடிகளால் தாமாகவே அழிந்துவிடுகின்றன. சாதாரணமாக கர்மயோகத்தால் பாபங்கள் நீங்கி, சித்தசுத்தி ஏற்பட்டு, வசீக்ருத அந்தக்கரணனாகி, ஆத்மாவலோகனம் பெற்ற பிறகு, பக்தியோகம் ஸித்திக்கும். இந்தக்ரமங்கள் ஏதுமின்றி - உடனேயே - யுகபத் - பலன்கிட்டுவதை அருள்கிறார் ஸ்வாமி தேசிகன். மந்த்ரம், தந்த்ரம் ஏதுமின்றி (உபாஸனம் செய்யாமலேயே) கெடுதல் செய்யக்கூடிய இந்த லிபிகளும் மறைந்துபோகின்றன என்றபடி.

(46) இதுவரை தெய்வநாயகனின் திருமேனியின் ப்ரத்யங்கங்களையும் அநுபவித்தார். இனி 46 - 51ம் ச்லோகங்களில் பக்தி ப்ரதிபக்திகளாகின்ற உபாயங்களும், அகிஞ்சநனாய் அநந்யகதியாய் இருக்கும் தமக்கு ப்ரபத்தியே தஞ்சமென்பதையும், தம்முடைய ரக்ஷணம் பகவானுடைய பரம் என்பதையும், திருவடிசேர்த்தலும் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

**யேஜன்மகோடிபி: உபார்ஜித சுத்ததர்மா**
**தேஷாம் பவத் சரண பக்திரதீவ போக்யா ।**
**த்வத்ஜீவிதைஸ் த்ரிதச நாயக துர்லபைஸ்தை:**
**ஆத்மானமப்யகதய: ஸ்வயம் ஆத்மவந்தம் ॥ 46**

பல ஜன்மங்களில் அநுஷ்டித்த சுத்த தர்மங்களால் தேவரீருடைய திருவடிவாரத்தில் பக்தி ஏற்பட்டு, அந்த யோகத்தால் தேவரீரைக்கண்டு அநுபவித்துவரும் பாக்யம் பெற்ற மஹான்கள் வெகுசிலர். இப்படி பக்தி முதிர்ச்சி ஏற்பட்டால் அது போக்யமே.

சுத்த தர்மமாவது - நிவ்ருத்தி தர்மம். அதாவது பகவத் ப்ரீதியையேக்கொண்டு, பகவத் ஆஜ்ஞா, அநுக்ஞா கைங்கர்யங்களைச் செய்வதாகும். இத்தகைய பக்தியோக நிஷ்டர்கள் மிக்க அரிதானவர்கள். See கீதை VII - 9. உண்ணும் சோறு, பருகு நீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணனே - எம்பெருமான்

என்று ஆழ்வார் திருவாய்மொழி 6-7--1ல் ஸாதித்திருக்கிறார். இத்தகைய ஜ்ஞானிகள் ஸுதுர்லபம். "அத்தைத்தின்று அங்கே கிடக்கும்" என்றபடி "அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி" இருப்பதால், இவர்களை எம்பெருமானும், தமது ப்ராணன்களை ஒத்தவர்களாக எண்ணுகிறான். இந்த நிவ்ருத்தி தர்மம் சாச்வத தர்மம் என்பர்.

**நிஷ்கிஞ்சனத்வ தநிநா விபுதேசயேன**
**ந்யஸ்த: ஸ்வரக்ஷண பரஸ்தவ பாதபத்மே ।**
**நாநாவித ப்ரதிதயோக விசேஷதந்யா:**
**நார்ஹந்தி தஸ்ய தசகோடி தமாம்ச கக்ஷ்யாம் ॥ 47**

பக்தியோகத்தில் ஈடுபட்ட மஹான்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்தாலும், புகலில் ஒன்றில்லா அடியவரும் தேவரீர் திருவடி வாரத்தில் பரஸமர்ப்பணம் செய்தருளிய ஒரு மஹானின் பெருமையின் கோடியில் ஒரு பகுதிக்கும் ஈடாகமாட்டார்கள். பக்தி யோகத்தைவிட, ப்ரபத்தியே இக்காலத்தில் சிறந்தது.

ந்யாஸம் என்ற பதம் - உயர்ந்த பொருளை அதைக் காக்கவல்லவனிடத்தில் பத்ரப்படுத்தி வைப்பது என்பது பொருள். இங்கு சரணாகதியால் எம்பெருமானிடம் தன் ஆத்மாவாகிற உயர்ப்பொருளையே வைப்புநிதியாய் ஜீவன் ஸமர்ப்பிக்கிறான். இப்பொருள் என்னுடையது என்று உரிமைகொண்டாட ஏதுமில்லாதபடி உள்ளவன் ஜீவன். இவனே, எம்பெருமானின் பொருளான ஆத்மாவை இந்நாள் வரையில் தன்னுடையதாக எண்ணினான். இந்த ஆத்மாவும் எம்பெருமானுடையதே என்று உணர்ந்தபின், இவனிடம் வேறு எந்தப் பொருள் உள்ளது இதைவிடப் பெரியதாக எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்க.

ந்யஸ்த: ஸ்வரக்ஷணபர: - என்பதால் நிர்பரனான நிலை ஏற்படுகிறது.

மாஸுச: - என்றதால் நிர்பரத்வமும்,

அபயம் ஸர்வபூதேப்ய: - ததாமி என்பதால் நிர்பயத்வமும் ஜீவனுக்கு ஏற்படுகிறது.

சரணாகதி தீபிகா - 29ம் ச்லோகதிதில்

"நாத ! த்வதீய சரணெள சரணம் கதாநாம்
நைவாயுதா யுதகலாऽப்யபரைரவாப்யா"

உன் திருவடியைச் சரணமடைந்தவர்களுடைய பெருமையில் பதினாயிரத்தில் ஒரு கூறும் மற்றவர்கள் பெறமாட்டார்கள் என்று அருளியுள்ளார்.

ஆத்மாபஹார ரஸிகேன மயைவ தத்தம்
அந்யைரதார்யமதுனாவிபுதைக நாத ।
ஸ்வீக்ருத்ய தாரயிதும் அர்ஹஸி மாம்த்வதீயம்
சோரோபநீத நிஜநூபுரவத் ஸ்வபாதே ॥ 48

தேவநாதனே ! ஆத்மாபஹாரம் செய்து சுவைத்த நானே இதை ஆசார்யர் மூலம் தெரிந்துகொண்டு, இப்பொழுது உன் திருவடிகளில் மற்றவர்க்குச் சொந்தமல்லாத அடியேனாகவே வந்து ஸமர்ப்பித்துக்கொண்டேன்.

ஆத்மாபஹாரமாவது - எம்பெருமானுக்கே சேஷபூதனான ஜீவனை ஸ்வதந்த்ரன் என எண்ணுவதாகும். பகவானின் உபயோகத்துக்காகவே ஏற்பட்ட இந்த ஆத்மவஸ்துவைத் தனது என எண்ணுவது திருடாகும். நீ என்னைச் சேர்ந்தவன் என எம்பெருமான் கூறினாலும், ஜீவன் இல்லை; நானே எனக்கு உரியவன் என எதிர்வாதம் செய்கிறானாம் ஜீவன். இந்த விவாதத்தின் விளக்கமே ந்யாயம் வழங்கும் காட்சியாக பட்டர் சித்தரித்த "த்வம்மே அஹம்மே குதஸ்தத் ததபிகுத:" என்கிற திருமஞ்சன காலத்தில் கட்டியம் சொல்லும் கவிதையாகும்.

அந்யை: அதார்யம் - விரோசனனால் திருடப்பட்ட எம்பெருமானின் திருவபிஷேகம் (திருமுடி) எப்படி மற்றையோரால் அணியமுடியாமலிருந்து கண்ணனையே திரும்பியடைந்ததோ அப்படி, ஆத்ம வஸ்துவையும், இதன் ரக்ஷணபரத்தையும் தாங்குவார் யாருமில்லை, எம்பெருமான் தவிர.

திருமுடிமுதல் திருவடித்தூள் வரை தெய்வநாயகனை வர்ணித்துவிட்டு, காலில் இடும் சலங்கையைப்போல் தம்மையும் திருவடியில் ஒரு ஆபரணமாய் தரித்தருளவேண்டும் என்று ப்ரார்த்தித்திருப்பது ஸ்வரூப அநுகுணமானதாகும்.

அஜ்ஞான வாரிதிம் அபாய துரந்தரம் மாம்
ஆஜ்ஞா விபஞ்ஜனம் அகிஞ்ஜன ஸார்வபௌமம் ।
விந்தந் பவான் விபுதநாத ஸமஸ்த வேதீ
கிம் நாம பாத்ரமபரம் மனுதே க்ருபாயா: ॥ 49

அடியேன் அறியாமையாலும், தீவினைகளைச் செய்வதில் வல்லவனாகவும், தேவரீரிட்ட ஸதாசாரங்களை மீறுபவனாயும், தேவரீரை அடைய கை முதல் ஏதுமற்றவனாயும் உள்ளேன். தேவரீருடைய கருணைக்குப் பரிபூர்ண பாத்ரராய் அடியேன் இருக்கும்போது வேறு தகுந்த ரக்ஷவஸ்துவை ஏன் எண்ணவேண்டும்? தம்மைக் குறைவுடன் கூறிக்கொள்வது நைச்யாநுஸந்தான பரகாஷ்டையாகும்.

மாம் விந்தன் - தேவரீரை அடைய தென்பெண்ணையின் கரைவரை அடியேனைத் தொடர்ந்து வந்தீர். கிம்நாம பாத்ரம் அபரம் மனுதே க்ருபாயா: - எம்பெருமானின் அருள் என்ற கல்யாண குணத்திற்கு, ஸ்ரீவைகுண்டாதிகளை விட, இந்த ஸம்ஸார மண்டலத்தில் உழல்பவர்களிடம் தான் உபயோகம் அதிகம். அகிஞ்சனர்களான சரணாகதர்களிடமே இதற்கு அதிகம் பயன்பெற்ற நிலை என்பது.

ப்ரஹ்லாத கோகுல கஜேந்த்ர பரிக்ஷிதாத்யா:
த்ராதாஸ்த்வயா நநு விபத்திஷு தாத்ருசீஷு ।
ஸர்வம் ததேகமபரம் மமரக்ஷணம்தே
ஸந்தோல்யதாம் த்ரிதசநாயக கிம் கரீய: ॥ 50

தெய்வநாயகனே ! ப்ரஹ்லாதன், பசுக்கள், கஜேந்த்ரன், பரீக்ஷித் முதலானோர்கள் தேவரீரால் பேராபத்துக்களிலிருந்து காக்கப்பட்டனர். அப்போது அவர்கள் யாவரும் ஏதேனும் ஒருவகையில் உபாயாநுஷ்டானம் செய்தவர்களா? அடியேன் அகிஞ்சனன். அடியேனை ரக்ஷிப்பது பெரியதல்லவா?

வாத்யாசதை: விஷய ராகதயா விவ்ருத்தை:
வ்யா கூர்ணமான மனஸம் விபுதாதிராஜ ।
நித்யோபதப்த இதிமாம் நிஜகர்ம கர்மை:
நிர்வேசயஸ்வ பதபத்ம மதுப்ரவாஹம் ॥ 51

தேவநாதனே ! சப்தாதி விஷயபோகங்களில் பற்றாக உருவெடுத்த நூற்றுக்கணக்கான சுழல்காற்றையொத்த ஆசாபாசங்களால் சுழன்றுவரும் மனதை உடையவனும், முன்செய்த வினைகளாகிற வெயிலால் மிகவும் கொளுத்தப்பட்டவனும் ஆகிய அடியேனை தேவரீர் திருவடித் தாமரைகளினின்று பெருகும் தேனை அனுபவிக்கச் செய்து, விடாய்தீரச் செய்தருள வேண்டும் என்று ப்ரார்த்திக்கிறார் ஸ்வாமி தேசிகன்.

**ஜய விபுதபதே ! த்வம் தர்சிதா பீஷ்டதான:**
**ஸஹஸரஸிஜ வாஸா மேதினீப்யாம் வசாப்யாம் ।**
**நலவநமிவ ம்ருத்ரன் பாபராசிம் நதாநாம்**
**கருடஸரித நூபே கந்த ஹஸ்தீவ தீவ்யந் ॥ 52**

தெய்வநாயகனே ! தேவரீர் கருடநதிக்கரையில் மத்தகஜம் போல் விளங்கி, ஸ்ரீதேவி, பூதேவிகளாகிய பெண்யானைகளுடன் விஹாரங்களைச் செய்து, ஆச்ரிதர்களுடைய பாபங்களைத் தொலைத்துக்கொண்டும், விரும்பிய பலன்களை அருளிக்கொண்டும் விளங்கி வரவேண்டும் என வேண்டுகிறார்.

அபீஷ்டதான: - எம்பெருமான் உடல்நலம், பணம், பல வித போகங்கள் முதலானவைகளையும் அருள்கிறார்.

கந்தஹஸ்தீவதீவ்யந் - இந்த திவ்யதேசத்தைப்பற்றி பாடின திருமங்கையாழ்வார் மதகிரி என்று ப்ரஸ்தாபித்தபடியால் (பெரிய திருமொழி 3-1-8ல்) யானையைப் பற்றி ஸ்வாமி தேசிகன் அருளினார் போலும்.

As a continuation of this Stotra and Sloka Achyuta Sataka mentions that Lord Devanatha freely roams about at His will as an undisputed monarch of Hill Oushadagiri.

**நிரவதி குண ஜாதம் நித்ய நிர்தோஷமாத்யம்**
**நரகமதந தக்ஷம் நாகிநாமேகநாதம் ।**
**விநத விஷய ஸத்யம் வேங்கடேச: கவிஸ்த்வாம்**
**ஸ்துதிபதமதிகச்சன் சோபதே ஸத்யவாதீ ॥ 53**

இது பலச்ருதி ச்லோகம். ஸ்வாமி தேசிகன் அருளிச்செய்த மற்ற எல்லா ஸ்தோத்ரங்களிலும் அவற்றை அநுஸந்திப்பவர்களுக்கு பற்பல பலன்கள் உண்டாகும் என கூறப்பட்டிருக்கிறது. இந்த ஸ்தோத்ரத்தில் மட்டும் இத்தால் ஏற்படும் பலன் ஸ்வாமி தமக்கே என அருளிச்செய்யப்பட்டிருக்கிறது.

தேவரீருடைய திருக்கல்யாண குணங்கள் எல்லைக் கடந்தவை. கெட்ட குணங்கள் ஒன்றும் தேவரீரிடம் இல்லை. தேவரீரே ஆதிமுதல்வன். தெய்வங்களுக்கெல்லாம் ஒப்புயர்வற்ற தலைவன் தேவரீரே. அடியவர்க்குமெய்யனல்லவா தேவரீர். இத்தகைய தேவரீரை துதிக்கு இலக்காக்கி, உண்மையையே பேசுபவனாய், கவியாகிய வேங்கடேசன் எனும் அடியேன் விளங்குகிறேன்.

அபஹத பாப்மா விஜர: என்பதைப்போல் ஹேயகுணங்களை எடுத்துக்கழித்து, ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப: என்ற நல்ல குணங்களை விதித்தபடியால், ஸகுணநிர்குண ச்ருதிகளின் நிலையை வேதமே விளக்கிவிட்டது.

ஆத்யம் - உலகிற்கு மூவகைக் காரணமும் இவனே. இப்படி முதல்பாதத்தால் பகவத் ஸ்வரூப ரூபகுண சேஷ்டிதங்களும் ஜகத்காரணத்வமும் தெரிவித்தபடி.

நரகமதந தக்ஷம் - அநிஷ்ட நிவர்த்தி பூர்வகமாக இஷ்ட ப்ராப்தியாகிய, மோக்ஷப்ரதத்வம் இத்தால் தெரிவிக்கப்பட்டது. நரகங்களைத் தொலைக்கவல்லவன் எம்பெருமான் ஒருவனே. பெரியாழ்வார் திருமொழி 5-3-6ல் ஸம்ஸார நோய்க்கு மருந்து அறியாதவர்கள் சிவன், பிரமன் முதலானோர். ஆத்மநோய்க்கு மருத்துவன் நாராயணனே என்று அருளியதைக்கொண்டு ஸ்வாமி தேசிகன் இங்கு அருளியிருக்கிறார்.

நாகிநாம் ஏகநாதம் - ஸ்ரீவைகுண்டம் செல்ல விரும்புபவர்களுக்கு, இவன் ஒருவனே தலைவன் இப்படி இஷ்டப்ராப்தி சொல்லப்பட்டது. உபயவிபூதி நிர்வாஹகன் இவன் ஒருவனே என்பதும் ஸ்பஷ்டம்.

விநதவிஷய ஸத்யம் - அடியவர்க்குமெய்யன் என பரகாலன் பநுவலையே இப்படி அருளியிருக்கிறார்.

கவி - உலகத்தாரால் காணமுடியாத பொருளைக் காணவல்லாருக்குக் கவி எனப்பெயர்.

சோபதே ஸத்யவாதீ - வேதங்கள் துதித்தும் முடிவு காணமுடியாத எம்பெருமானை எவ்வளவு ஏற்றினாலும் தகும். இதில் ஒன்றும் பொய்யல்ல என்றபடி. ஆகவே, அடியேன் ஸத்யவாதீயே. அடியவர்க்குமெய்யனும், நதஸத்யனும் ஆகிய இந்த தெய்வநாயகனைப்பற்றி துதிப்பதே ஸத்யவாதியாகும் நிலையாகும்.

இந்த திவ்யதேசம், வைகானஸ ஆகம ரீதியில் அநாதியாக ஆராதித்து வருகிறபடியால், அதன் மூர்த்தி பேதங்களான அச்யுத - ஸத்யமூர்த்திகளைத் தாம் துதித்ததாய், உள்ள ஸூக்ஷ்மத்தை வெளியிடவே, இங்கு ஸத்யவாதீ என முடித்து, அச்யுத சதகம் என மற்றோர் துதிக்குப் பெயரிட்டதுமாகும்.

கவிதார்கிக ஸிம்ஹாய கல்யாண குணசாலிநே ।
ஸ்ரீமதே வேங்கடேசாய வேதாந்த குரவே நம: ॥

